15 இப்போதும் *பிகெமோத்தை நீ கவனித்துப்
பார்; உன்னை உண்டாக்கினதுபோல அதை
யும் உண்டாக்கினேன்; அது மாட்டைப்
16 போல் புல்லைத் தின்னும். இதோ, அதினு
டைய பெலன் அதின் இடுப்பிலும், அதின்
வீரியம் அதின் வயிற்றின் நரம்புகளிலும்
17 இருக்கிறது. அது தன் வாலைக் கேதுருமரத்
தைப்போல் நீட்டுகிறது; அதின் இடுப்பு
18 நரம்புகள் பின்னிக்கொண்டிருக்கிறது. அ
தின் எலும்புகள் கெட்டியான வெண்கலத்
தைப்போலவும், அதின் அஸ்திகள் இருப்புக்
19 கம்பிகளைப்போலவும் இருக்கிறது. அது தே
வனுடைய கிரியைகளில் பிரதானமான ஒரு
கிரியை, அதை உண்டாக்கினவர் அதற்கு ஒரு
20 பட்டயத்தையும் கொடுத்தார். காட்டுமிருகங்
கள் யாவும் விளையாடுகிற மலைகள் அதற்கு
21 மேய்ச்சலை [1]விளைவிக்கும். அது நிழலுள்ள
செடிகளின் கீழும், நாணலின் மறைவிலும்,
22 உளையிலும் படுத்துக்கொள்ளும். தழைகளின்
நிழல் அதைக் கவிந்து, நதியின் அலரிகள்
23 அதைச் சூழ்ந்துகொள்ளும். இதோ, நதி
புரண்டுவந்தாலும் அது பயந்தோடாது; யோர்
தான் நதியத்தனை தண்ணீர் அதின் முகத்தில்
மோதினாலும் அது அசையாமலிருக்கும்.
24 அதின் கண்கள் பார்த்திருக்க அதை யார்
பிடிக்கக்கூடும்? மூக்கணாங்கயிறுபோட அதின்
மூக்கை யார் குத்தக்கூடும்?

**41** †லிவியாதானை தூண்டிலினால் பிடிக்கக்
கூடுமோ? அதின் நாக்கை நீ விடுகிற கயிற்றி
2 னாலே பிடிக்கக்கூடுமோ? அதின் மூக்கை
நார்க்கயிறு போட்டுக் கட்டக்கூடுமோ? [2]குறட்
டினால் அதின் தாடையை உருவக் குத்தக்கூடு
3 மோ? அது உன்னைப் பார்த்து அநேக விண்
ணப்பஞ்செய்யுமோ? உன்னை நோக்கி இச்சக
4 வார்த்தைகளைச் சொல்லுமோ? அது உன்
னோடே உடன்படிக்கைபண்ணுமோ? அதைச்
5 சதாகாலமும் அடிமை கொள்வாயோ? ஒரு
குருவியோடே விளையாடுகிறதுபோல், நீ அத
னோடே விளையாடி, அதை நீ உன் பெண்
6 மக்களண்டையிலே கட்டிவைப்பாயோ? கூட்
டாளிகள் அதைப் பிடிக்கப்பிரயத்தனப்பட்டு,
அதை வியாபாரிகளுக்குப் பங்கிடுவார்களோ?
7 நீ அதின் தோலை அநேக அம்புகளினாலும்,
அதின் தலையை எறிவல்லயங்களினாலும் எறி
8 வாயோ? அதின்மேல் உன் கையைப் போடு,
யுத்தத்தை நினைத்துக்கொள்; இனி அப்படிச்
9 செய்யத் துணியமாட்டாய். இதோ, அதைப்
பிடிக்கலாம் என்று நம்பினவன் மோசம்
போய், அதைப் பார்த்தவுடனே விழுவான்
அல்லவோ?

10 அதை எழுப்பத்தக்க தைரியவான் இல்லா
திருக்க, எனக்கு முன்பாக நிற்பவன் யார்?
11 தனக்குப் பதில் கொடுக்கப்படும்படி [3]முந்தி
எனக்குக் கொடுத்தவன் யார்? [4]வானத்தின்
கீழுள்ளவைகள் எல்லாம் என்னுடையவைகள்.
12 அதின் அங்கங்களும், அதின் வீரியமும்,
அதின் உடல் இசைவின் நேர்த்தியும் இன்னா

* கடல் குதிரை.
[1] சங். 104. 14
† முதலை. 3. 8. சங். 104. 26. ஏசா. 27 1
[2] ஏசா. 37. 29
[3] ரோ. 11. 35
[4] யாத். 19. 5. உபா. 10. 14. சங். 24. 1: 50 12. 1 கொ. 10. 26, 28

தென்று நான் சொல்லாமல் மறைக்கமாட்
டேன். அது மூடியிருக்கிற அதின் போர்வை 13
யைக் கிளப்பக்கூடியவன் யார்? அதின்
இரண்டு தாடைகளின் நடுவே கடிவாளம் போ
டத்தக்கவன் யார்? அதின் முகத்தின் கதவைத் 14
திறக்கக்கூடியவன் யார்? சுற்றிலுமிருக்கிற
அதின் பற்கள் பயங்கரமானவைகள். முத்தி 15
ரைப் பதிப்புப்போல அழுத்தங்கொண்டு
அடர்த்தியாயிருக்கிற அதின் பரிசைகளின்
அரணிப்பு மகா சிறப்பாயிருக்கிறது. அவை 16
கள் நடுவே காற்றும் புகமாட்டாத நெருக்கமாய்
அவைகள் ஒன்றோடொன்று இணைக்கப்பட்
டிருக்கிறது. அவைகள் ஒன்றோடொன்று 17
ஒட்டிக்கொண்டு இணைபிரியாமல் பிடித்துக்
கொண்டிருக்கிறது. அது தும்முகையில் 18
ஒளி வீசும்; அதின் கண்கள் அருணோதயத்
தின் புருவங்களைப்போல் இருக்கிறது. அதின் 19
வாயிலிருந்து எரிகிற பந்தங்கள் புறப்பட்டு,
அக்கினிப்பொறிகள் பறக்கும். கொதிக்கிற 20
சட்டியிலும் கொப்பரையிலும் இருந்து புறப்
படுகிறதுபோல, அதின் நாசிகளிலிருந்து
புகை புறப்படும். அதின் சுவாசம் கரிகளைக் 21
கொளுத்தும், அதின் வாயிலிருந்து ஜுவாலை
புறப்படும். அதின் கழுத்திலே பெலன் குடி 22
கொண்டிருக்கும்; பயங்கரம் அதற்குமுன்
கூத்தாடும். அதின் உடற்கூறுகள் அசை 23
யாத கெட்டியாய் ஒன்றோடொன்று ஒட்டிக்
கொண்டிருக்கும். அதின் நெஞ்சு கல்லைப் 24
போலவும், எந்திரத்தின் அடிக்கல்லைப்போல
வும் கெட்டியாயிருக்கும்.

அது எழும்பும்போது பலசாலிகள் அஞ்சி 25
பயத்தினால் மயங்கித் திகைப்பார்கள். அதைத் 26
தாக்குகிறவனுடைய பட்டயம், ஈட்டி, வல்
லயம், கவசம், ஒன்றும் அதற்குமுன் நிற்
காது. அது இரும்பை வைக்கோலாகவும், 27
வெண்கலத்தை உளுத்த மரமாகவும் எண்
ணும். அம்பு அதைத் துரத்தாது; கவண்கற் 28
கள் அதற்குத் துரும்பாகும். அது பெருந் 29
தடிகளைத் தாளடிகளாக எண்ணி, ஈட்டியின்
அசைவை இகழும்.

அதின் கீழாகக் கூர்மையான கற்கள் கிடந் 30
தாலும், அது சேற்றின்மேல் ஓடுகிறதுபோ
லக் கருக்கான அவைகளின்மேலும் ஓடும்.
அது ஆழத்தை உலைப்பானையைப்போல் 31
பொங்கப்பண்ணி, கடலைத் தைலம்போலக்
கலக்கிவிடும். அது தனக்குப் பின்னாகப் பாதை 32
யைத் துலங்கப்பண்ணும்; ஆழமானது வெ
ளுப்பான நரையைப்போல் விளங்கும். பூமி 33
யின்மேல் அதற்கு ஒப்பானது ஒன்றுமில்லை;
அது நிர்ப்பயமாயிருக்க உண்டுபண்ணப்பட்
டது. அது மேட்டிமையானதையெல்லாம் 34
அற்பமாய் எண்ணுகிறது; அது அகங்கார
முள்ள ஜீவன்களுக்கெல்லாம் ராஜாவாயிருக்
கிறது என்றார்.

அப்பொழுது யோபு கர்த்தருக்குப் பிரதி **42**
யுத்தரமாக: தேவரீர் சகலத்தையும் செய்ய 2
வல்லவர் நீர் செய்ய நினைத்தது தடைபடாது

3 என்பதை [1]அறிந்திருக்கிறேன். அறிவில்லா
மல் ஆலோசனையை மறைக்கிற இவன் யார்?
[2]ஆகையால் நான் எனக்குத் தெரியாததையும்,
என் புத்திக்கு எட்டாததையும், [3]நான் அறி
4 யாததையும் அலப்பினேன் என்கிறேன். நீர்
எனக்குச் செவிகொடும், [4]அப்பொழுது நான்
பேசுவேன்; நான் உம்மைக் கேள்வி கேட்
5 பேன், நீர் எனக்கு உத்தரவு சொல்லும். என்
காதினால் உம்மைக் குறித்துக் கேள்விப்பட்
டேன்; இப்பொழுதோ என் கண் உம்மைக்
6 காண்கிறது. ஆகையால் நான் [5]என்னை அரு
வருத்து, தூளிலும் சாம்பலிலும் இருந்து [6]மன
ஸ்தாபப்படுகிறேன் என்றான்.
7 கர்த்தர் இந்த வார்த்தைகளை யோபோடே
பேசினபின் கர்த்தர் தேமானியனான எலிப்
பாசை நோக்கி: உன்மேலும் உன் இரண்டு
சிநேகிதர்மேலும் எனக்குக் கோபம் மூளு
கிறது; என் தாசனாகிய யோபு பேசினது
போல், நீங்கள் என்னைக்குறித்து நிதான
8 மாய்ப் பேசவில்லை. ஆதலால் நீங்கள் ஏழு
காளைகளையும், [7]ஏழு ஆட்டுக் கடாக்களையும்
தெரிந்துகொண்டு, என் தாசனாகிய யோபி
னிடத்தில் போய், உங்களுக்காகச் சர்வாங்க
தகனபலிகளை இடுங்கள்; என் தாசனாகிய
யோபும் உங்களுக்காக வேண்டுதல் செய்
வான்; [8]நான் அவன் முகத்தைப் பார்த்து, உங்
களை உங்கள் புத்தியீனத்துக்குத் தக்கதாக
நடத்தாதிருப்பேன்; என் தாசனாகிய யோபு
பேசினதுபோல், நீங்கள் என்னைக்குறித்து
9 நிதானமாய்ப் பேசவில்லை என்றார். அப்பொ
ழுது தேமானியனான எலிப்பாசும் சூகிய
னான பில்தாதும் நாகமாத்தியனான சோப்பா
ரும் போய், கர்த்தர் தங்களுக்குச் சொன்ன
படியே செய்தார்கள்; அப்பொழுது கர்த்தர்
யோபின் *முகத்தைப் பார்த்தார். யோபு தன் 10
சிநேகிதருக்காக வேண்டுதல் செய்தபோது,
கர்த்தர் அவன் †சிறையிருப்பை மாற்றினார்.
யோபுக்குமுன் இருந்த எல்லாவற்றைப் பார்க்
கிலும் இரண்டத்தனையாய்க் [9]கர்த்தர் அவ
னுக்குத் தந்தருளினார். அப்பொழுது அவ 11
னுடைய எல்லாச் [10]சகோதரரும் சகோதரி
களும், முன் அவனுக்கு அறிமுகமான அனை
வரும் அவனிடத்தில் வந்து, அவன் வீட்டி
லே அவனோடே போஜனம்பண்ணி, கர்த்தர்
அவன்மேல் வரப்பண்ணின சகல தீங்கினி
மித்தம் அவனுக்காக அங்கலாய்த்து, அவ
னுக்கு ஆறுதல் சொல்லி, அவரவர் ஒவ்வொரு
தங்கக்காசையும், அவரவர் ஒவ்வொரு பொன்
ஆபரணத்தையும் அவனுக்குக் கொடுத்தார்கள்.
கர்த்தர் யோபின் முன்னிலைமையைப் பார்க் 12
கிலும் அவன் பின்னிலைமையை ஆசீர்வதித்
தார்; [11]பதினாலாயிரம் ஆடுகளும், ஆறாயிரம்
ஒட்டகங்களும், ஆயிரம் ஏர்களும், ஆயிரம்
கழுதைகளும் அவனுக்கு உண்டாயின. ஏழு 13
குமாரரும், [12]மூன்று குமாரத்திகளும் அவனுக்
குப் பிறந்தார்கள். மூத்தமகளுக்கு எமீமாள் 14
என்றும், இரண்டாம் மகளுக்குக் கெத்சீயாள்
என்றும், மூன்றாம் மகளுக்குக் கேரேனாப்புக்
என்றும் பேரிட்டான். தேசத்தில் எங்கும் 15
யோபின் குமாரத்திகளைப்போல் சௌந்தரிய
மான பெண்கள் காணப்படவில்லை; அவர்கள்
தகப்பன் அவர்கள் சகோதரரின் நடுவிலே
அவர்களுக்குச் சுதந்தரம் கொடுத்தான். இதற் 16
குப்பின்பு யோபு நூற்று நாற்பது வருஷம்
உயிரோடிருந்து, [13]நாலு தலைமுறையாகத் தன்
பிள்ளைகளையும் தன் பிள்ளைகளுடைய பிள்ளை
களையும் கண்டான். யோபு நெடுநாளிருந்து, 17
[14]பூரண வயதுள்ளவனாய் மரித்தான்.

[1] ஆதி. 18. 14. எரே. 43. 13. மத். 19. 26
[2] 38. 2, 3
[3] சங். 131. 1: 139. 6
[4] 40. 7
[5] 40. 4. எஸ்றா.9. 6. சங். 51. 17. எரே. 31 19. யாக். 4. 10
[6] தானி. 9. 3. மத். 11. 21
[7] எண். 23. 1
[8] யாக். 5. 16. 1 யோ. 5. 16
* யோபை கடாட்சித்தார். நீதி 3. 11, 12
† சிறைமையை. ஆதி. 20. 17, 18. சங். 14.7: 126. 1
[9] ஏசா. 40. 2
[10] 19, 13
[11] 8. 7. உபா. 8. 16. யாக். 5. 11
[12] 1. 2
[13] நீதி. 3. 16
[14] 5. 26. ஆதி. 25. 8

# THE BOOK OF PSALMS

# சங்கீத புஸ்தகம்

1 துன்மார்க்கருடைய ஆலோசனையில் நடவா
மலும், [1]பாவிகளுடைய வழியில் நில்லாமலும்,
பரியாசக்காரர் உட்காரும் [2]இடத்தில் உட்
காராமலும்,
2 கர்த்தருடைய வேதத்தில் பிரியமாயிருந்து,
[3]இரவும் பகலும் அவருடைய வேதத்தில் தியா
னமாயிருக்கிற [4]மனுஷன் பாக்கியவான்.
3 அவன் நீர்க்கால்களின் ஓரமாய் நடப்பட்டு,
தன் காலத்தில் தன் கனியைத் தந்து, இலை
யுதிராதிருக்கிற [5]மரத்தைப்போ லிருப்பான்;
அவன் செய்வதெல்லாம் வாய்க்கும்.
4 துன்மார்க்கரோ அப்படியிராமல், காற்றுப்
பறக்கடிக்கும் [6]பதரைப்போல் இருக்கிறார்
கள்.
5 ஆகையால் துன்மார்க்கர் நியாயத்தீர்ப்பி
லும், பாவிகள் நீதிமான்களின் சபையிலும்
[7]நிலைநிற்பதில்லை.
6 கர்த்தர் நீதிமான்களின் வழியை அறிந்தி
ருக்கிறார்; [8]துன்மார்க்கரின் வழியோ அழியும்.
2 ஜாதிகள் கொந்தளித்து, [9]ஜனங்கள் விரு
தாக்காரியத்தைச் சிந்திப்பானேன்?
2 கர்த்தருக்கு விரோதமாகவும், அவர் அபி
ஷேகம் பண்ணினவருக்கு [10]விரோதமாகவும்
பூமியின் ராஜாக்கள் எழும்பி நின்று, அதிகாரி
கள் ஏகமாய் ஆலோசனைபண்ணி:
3 அவர்கள் கட்டுகளை அறுத்து, [11]அவர்கள்
கயிறுகளை நம்மைவிட்டு எறிந்துபோடுவோம்
என்கிறார்கள்.
4 பரலோகத்தில் வீற்றிருக்கிறவர் நகைப்பார்;
ஆண்டவர் அவர்களை [12]இகழுவார்.
5 அப்பொழுது அவர் தமது கோபத்திலே
அவர்களோடே பேசி, தமது உக்கிரத்திலே
அவர்களைக் கலங்கப்பண்ணுவார்.
6 நான் என்னுடைய பரிசுத்த பர்வதமாகிய
சீயோன் மீதில் என்னுடைய ராஜாவை [13]அபி
ஷேகம் பண்ணிவைத்தேன் என்றார்.
7 தீர்மானத்தின் விவரம் சொல்லுவேன்; கர்த்
தர் என்னை நோக்கி: [14]நீர் என்னுடைய
குமாரன், இன்று நான் உம்மை ஜநிப்பித்
தேன்; என்னைக் கேளும்,
8 [15]அப்பொழுது ஜாதிகளை உமக்குச் சுதந்தர
மாகவும், பூமியின் எல்லைகளை உமக்குச் சொந்
தமாகவும் கொடுப்பேன்;
9 இருப்புக்கோலால் அவர்களை நொறுக்கி,
[16]குயக்கலத்தைப்போல் அவர்களை உடைத்துப்
போடுவீர் என்று சொன்னார்.
10 இப்போதும் ராஜாக்களே, உணர்வடையுங்
கள், பூமியின் நியாயாதிபதிகளே, எச்சரிக்
கையாயிருங்கள்.
11 பயத்துடனே கர்த்தரைச் சேவியுங்கள்,
[17]நடுக்கத்துடனே களிகூருங்கள்.
12 குமாரன் கோபங்கொள்ளாமலும், நீங்கள்
வழியிலே அழியாமலும் இருக்கும்படிக்கு,
[18]அவரை முத்தஞ்செய்யுங்கள்; கொஞ்சக்காலத்
திலே அவருடைய கோபம் பற்றியெரியும்;
அவரை அண்டிக்கொள்ளுகிற [19]யாவரும் பாக்
கியவான்கள்.

3 (தாவீது தன் குமாரன் அப்சலோமுக்குத் தப்பி
ஓடிப்போகையில் பாடின சங்கீதம்.)

கர்த்தாவே, என் சத்துருக்கள் எவ்வளவாய்ப் பெருகியிருக்கிறார்கள்! எனக்கு விரோதமாய் எழும்புகிறவர்கள் அநேகர்.
2 தேவனிடத்தில் அவனுக்கு ரட்சிப்பு இல்
லையென்று, [20]என் ஆத்துமாவைக் குறித்
துச்சொல்லுகிறவர்கள் அநேகராயிருக்கிறார்
கள்.
3 ஆனாலும் கர்த்தாவே, நீர் என் கேடகமும்,
என் மகிமையும், என் தலையை உயர்த்துகிற
வருமாயிருக்கிறீர்.
4 நான் கர்த்தரை நோக்கிச் சத்தமிட்டுக் கூப்
பிட்டேன்; அவர் தமது பரிசுத்த பர்வதத்திலி
ருந்து எனக்குச் செவிகொடுத்தார்.
5 நான் படுத்து நித்திரைசெய்தேன்; [21]விழித்
துக்கொண்டேன்; கர்த்தர் என்னைத் தாங்கு
கிறார்.
6 எனக்கு விரோதமாகச் சுற்றிலும் படையெ
டுத்து வருகிற பதினாயிரம்பேருக்கும் [22]நான்
பயப்படேன்.
7 கர்த்தாவே, எழுந்தருளும்; என் தேவனே,
என்னை ரட்சியும். நீர் என் பகைஞர் எல்
லாரையும் தாடையிலே அடித்து, துன்மார்க்க
ருடைய பற்களைத் தகர்த்துப்போட்டீர்.
8 இரட்சிப்பு கர்த்தருடையது: [23]தேவரீரு
டைய ஆசீர்வாதம் உம்முடைய ஜனத்தின்
மேல் இருப்பதாக.

4 (நெகிலோத் என்னும் வாத்தியத்தில் வாசிக்க
ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

என் நீதியின் தேவனே, நான் கூப்பிடுகையில் எனக்குச் செவிகொடும்; நெருக்கத்தில் இருந்த எனக்கு விசாலமுண்டாக்கினீர்; எனக்கு இரங்கி, என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்.

1 நீதி. 4. 14, 15
2 26. 4. எரே. 15. 17
3 யோசு 23. 12
4 119. 97
5 எரே. 17. 8
6 மத். 3. 12
7 மத். 25. 41, 46
8 யோசு 23. 10. நீதி. 15. 9
9 46. 6. அப். 4. 25, 26
10 45. 7
11 லூ. 19. 14
12 நீதி. 1. 26
13 அப். 5. 31
14 அப. 13. 33. மத். 3. 17: 17. 5
15 தானி. 7. 13. 14
16 வெளி. 2. 27
17 எபி. 12. 28
18 யோ. 5. 23
19 84. 12
20 71. 11
21 4. 8: 127. 2
22 27. 1. மு
23 115. 13. ஏசா. 43. 11. வெளி. 7. 10: 19. 1

*லூ. 20. 43. அப். 1. 20.

2 மனுபுத்திரரே, எதுவரைக்கும் என் மகிமை
யை அவமானப்படுத்தி, வீணானதை விரும்பி,
பொய்யை நாடுவீர்கள்.
3 பக்தியுள்ளவனைக் கர்த்தர் தமக்காகத் தெ
ரிந்துகொண்டாரென்று அறியுங்கள்; [1]நான்
கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகையில் அவர்
கேட்பார்.
4 நீங்கள் கோபங்கொண்டாலும், [2]பாவஞ்
செய்யாதிருங்கள்; [3]உங்கள் படுக்கையிலே உங்
கள் இருதயத்தில் பேசிக்கொண்டு அமர்ந்தி
ருங்கள்.
5 நீதியின் பலிகளைச் செலுத்தி, [4]கர்த்தர்
மேல் நம்பிக்கையாயிருங்கள்.
6 எங்களுக்கு நன்மை காண்பிப்பவன் யார
என்று சொல்லுகிறவர்கள் அநேகர்; [5]கர்த்தா
வே, உம்முடைய முகத்தின் ஒளியை எங்கள்
மேல் பிரகாசிக்கப்பண்ணும்.
7 அவர்களுக்குத் தானியமும் திராட்சரசமும்
பெருகியிருக்கிற காலத்தின் சந்தோஷத்தைப்
பார்க்கிலும், [6]அதிக சந்தோஷத்தை என் இரு
தயத்தில் தந்தீர்.
8 சமாதானத்தோடே படுத்துக்கொண்டு நித்தி
ரைசெய்வேன்; [7]கர்த்தாவே, நீர் ஒருவரே
என்னைச் சுகமாய்த் தங்கப்பண்ணுகிறீர்.

5 (நெகிலோத்தென்னும் வாத்தியத்தில் வாசிக்க
ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, என் வார்த்தைகளுக்குச் செவி
கொடும், என் தியானத்தைக் கவனியும்.
2 நான் உம்மிடத்தில் விண்ணப்பம் பண்ணு
வேன்; என் ராஜாவே, என் தேவனே, என்
வேண்டுதலின் சத்தத்தைக் கேட்டருளும்.
3 கர்த்தாவே, காலையிலே என் சத்தத்தைக்
கேட்டருளுவீர்; காலையிலே உமக்கு நேரே
வந்து ஆயத்தமாகி, காத்திருப்பேன்.
4 நீர் துன்மார்க்கத்தில் பிரியப்படுகிற தேவன்
அல்ல; [8]தீமை உம்மிடத்தில் சேர்வதில்லை.
5 வீம்புக்காரர் உம்முடைய கண்களுக்கு முன்
பாக நிலைநிற்கமாட்டார்கள்; அக்கிரமக்காரர்
யாவரையும் வெறுக்கிறீர்.
6 பொய் பேசுகிறவர்களை அழிப்பீர்; [9]இரத்
தப்பிரியனையும் சூதுள்ள மனுஷனையும் கர்த்
தர் அருவருக்கிறார்.
7 நானோ உமது மிகுந்த கிருபையினாலே
உமது ஆலயத்துக்குள் பிரவேசித்து, உமது
பரிசுத்த சந்நிதிக்கு நேரே பயபக்தியுடன்
பணிந்துகொள்ளுவேன்.
8 கர்த்தாவே, என் சத்துருக்களினிமித்தம்
என்னை உம்முடைய நீதியிலே நடத்தி, எனக்
கு முன்பாக உம்முடைய வழியைச்செவ்
வைப்படுத்தும்.
9 அவர்கள் வாயில் உண்மை இல்லை, அவர்
கள் உள்ளம் கேடுபாடுள்ளது; அவர்கள்தொண்
டை திறக்கப்பட்ட பிரேதக் குழி; [10]தங்கள்
நாவினால் இச்சகம் பேசுகிறார்கள்.
10 தேவனே, அவர்களைக் குற்றவாளிகளாகத்
தீரும்; அவர்கள் தங்கள் [11]ஆலோசனைகளாலே

1 2 தீமோ. 2.19. 2. பே. 2. 9
2 எபே. 4. 26
3 2 கொர. 13. 5
4 உபா. 33. 19
5 எண். 6. 26
6 ஏசா. 9. 3
7 3. 5
8 ஆப. 1. 13
9 வெளி. 21. 8
10 லூ. 11. 44. ரோ. 3. 13
11 2 சாமு. 15. 31
12 ஏசா. 65.13-16
13 எரே. 10. 24
14 41. 4: 57. 8. ஓசி. 6. 1
15 90. 13
16 எபே. 2. 7,8
17 ஏசா. 38. 18
18 யோபு 7. 3
19 மத். 7. 29: 25. 41
20 31. 15
21 ஏசா. 38. 18

யே விழும்படி செய்யும்; அவர்கள் துரோகங்
களினுடைய திரட்சியினிமித்தம் அவர்களைத்
தள்ளிவிடும்; உமக்கு விரோதமாய்க் கலகம்
பண்ணினார்களே.
உம்மை நம்புகிறவர்கள் யாவரும் சந்தோ 11
ஷித்து, [12]எந்நாளும் கெம்பீரிப்பார்களாக; நீர்
அவர்களைக் காப்பாற்றுவீர்; உம்முடைய நாமத்
தை நேசிக்கிறவர்கள் உம்மில் களிகூருவார்க
ளாக.
கர்த்தாவே, நீர் நீதிமானை ஆசீர்வதித்து, 12
காருணியம் என்னுங் கேடகத்தினால் அவனைச்
சூழ்ந்துகொள்ளுவீர்.

(நெகினோத்தென்னும் வாத்தியத்தில் செமினீத்தென்னும் 6
ராகத்தால் வாசிக்க ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்
பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்முடைய கோபத்திலே
என்னைக் கடிந்துகொள்ளாதேயும், [13]உம்மு
டைய உக்கிரத்திலே என்னைத் தண்டியாதே
யும்.
என்மேல் இரக்கமாயிரும் கர்த்தாவே, நான் 2
பெலனற்றுப்போனேன்; என்னைக் குணமாக்
கும் கர்த்தாவே, [14]என் எலும்புகள் நடுங்குகி
றது.
என் ஆத்துமா மிகவும் வியாகுலப்படுகிறது; 3
கர்த்தாவே, [15]எதுவரைக்கும் இரங்காதிருப்
பீர்.
திரும்பும் கர்த்தாவே, என் ஆத்துமாவை 4
விடுவியும்; [16]உம்முடைய கிருபையினிமித்தம்
என்னை ரட்சியும்.
மரணத்தில் உம்மை நினைவு கூர்வதில்லை, 5
[17]பாதாளத்தில் உம்மைத் துதிப்பவன் யார்?
என் பெருமூச்சினால் இளைத்துப் போ 6
னேன்; [18]இராமுழுவதும் என் கண்ணீரால்
என் படுக்கையை மிகவும் ஈரமாக்கி, என் கட்
டிலை நனைக்கிறேன்.
துயரத்தினால் என் கண்கள் குழிவிழுந்து 7
போயிற்று, என் சத்துருக்கள் அனைவர் நிமித்
தமும் மங்கிப்போயிற்று.
அக்கிரமக்காரரே, நீங்கள் எல்லாரும் [19]என் 8
னைவிட்டு அகன்றுபோங்கள்; கர்த்தர் என்
அழுகையின் சத்தத்தைக் கேட்டார்.
கர்த்தர் என் விண்ணப்பத்தைக் கேட்டார்; 9
கர்த்தர் என் ஜெபத்தை ஏற்றுக்கொள்ளுவார்.
என் பகைஞர் எல்லாரும் வெட்கி மிகவும் 10
கலங்கிப்போவார்கள்; அவர்கள் பின்னாகத்
திரும்பிச் சடிதியிலே வெட்கப்படுவார்கள்.

(பென்யமீனியனாகிய கூஷ் என்பவனுடைய வார்த்தை 7
களினிமித்தம் தாவீது கர்த்தரை நோக்கிப் பாடின
சிகாயோன் என்னும் சங்கீதம்.)

என் தேவனாகிய கர்த்தாவே, உம்மை
நம்பியிருக்கிறேன்; [20]என்னைத் துன்பப்படுத்து
கிறவர்கள் எல்லாருக்கும் என்னை விலக்கிரட்
சியும்.
சத்துரு சிங்கம்போல் என் ஆத்துமாவைப் 2
பிடித்துக் கொண்டுபோய், [21]விடுவிக்கிறவன்
இல்லாமையால், அதைப் பீறுதபடிக்கு என்
னைத் தப்புவியும்.

3 என் தேவனுகிய கர்த்தாவே, நான் இதைச்
செய்ததும், என் கைகளில் நியாயக்கேடிருக்
கிறதும்,
4 என்னேடே சமாதானமா யிருந்தவனுக்கு
நான் தீமைசெய்ததும், [1]காரணமில்லாமல்
எனக்குச் சத்துருவானவனை நான் கொள்ளை
யிட்டதும் உண்டானல்,
5 பகைஞன் என் ஆத்துமாவைத் தொடர்ந்து
பிடித்து, என் பிராணனைத் தரையிலே தள்ளி
மிதித்து, என் மகிமையைத் தூளிலே தாழ்த்
தக்கடவன்.
6 கர்த்தாவே, நீர் உம்முடைய கோபத்தில்
எழுந்திருந்து [2]என் சத்துருக்களுடைய மூர்க்
கங்களினிமித்தம் உம்மை உயர்த்தி, எனக்காக
விழித்துக்கொள்ளும்; [3]நியாயத்தீர்ப்பை நிய
மித்திருக்கிறீரே.
7 ஜனக்கூட்டம் உம்மைச் சூழ்ந்துகொள்
ளும்; அவர்களுக்காகத் திரும்பவும் உன்னதத்
திற்கு எழுந்தருளும்.
8 கர்த்தர் ஜனங்களுக்கு நியாயஞ் செய்வார்;
கர்த்தாவே, [4]என் நீதியின்படியும் என்னி
லுள்ள உண்மையின்படியும் எனக்கு நியாயஞ்
செய்யும்.
9 துன்மார்க்கனுடைய பொல்லாங்கை ஒழி
யப்பண்ணும்; நீதிமானை ஸ்திரப் படுத்துவீ
ராக; நீதியுள்ளவராயிருக்கிற தேவரீர் [5]இருத
யங்களையும் உள்ளிந்திரியங்களையும் சோதித்
தறிகிறவர்.
10 செம்மையான இருதயமுள்ளவர்களை ரட்
சிக்கிற தேவனிடத்தில் என் கேடகம் இருக்
கிறது.
11 தேவன் நீதியுள்ள நியாயாதிபதி; அவர் நாள்
தோறும் பாவியின்மேல் சினங்கொள்ளுகிற
தேவன்.
12 அவன் மனந்திரும்பாவிட்டால் [6]அவர் தம்
முடைய பட்டயத்தைக் கருக்காக்குவார்; அவர்
தம்முடைய வில்லை நாணேற்றி, அதை ஆயத்
தப்படுத்தியிருக்கிறார்.
13 அவனுக்கு மரணயுதங்களை ஆயத்தம் பண்
ணினார்; தம்முடைய [7]அம்புகளை அக்கினி
அம்புகளாக்கினார்.
14 இதோ, அவன் அக்கிரமத்தைப் பெறக்
கர்ப்ப வேதனைப்படுகிறான்; [8]தீவினையைக்
கர்ப்பந்தரித்து, பொய்யைப் பெறுகிறான்.
15 குழியை வெட்டி, அதை ஆழமாக்கினான்;
[9]தான் வெட்டின குழியில் தானே விழுந்
தான்.
16 அவன் தீவினை அவன் சிரசின்மேல் திரும்
பும், அவன் கொடுமை அவன் உச்சந்தலையின்
மேல் இறங்கும்.
17 நான் கர்த்தரை அவருடைய நீதியின்படி
துதித்து, உன்னதமான கர்த்தருடைய நாமத்
தைக் கீர்த்தனம் பண்ணுவேன்.

8

(கித்தீத் வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலைவனுக்கு
ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

எங்கள் ஆண்டவராகிய கர்த்தாவே, உம்
முடைய நாமம் பூமியெங்கும் எவ்வள
[10]மேன்மையுள்ளதாயிருக்கிறது! உம்முடைய
மகத்துவத்தை வானங்களுக்கு மேலாக வைத்
தீர்.
பகைஞனையும் பழிகாரனையும் அடக்கிப் 2
போட, தேவரீர் உம்முடைய சத்துருக்களி
னிமித்தம் [11]குழந்தைகள் பாலகர் வாயினால்
பெலன் உண்டுபண்ணினீர்.
உமது விரல்களின் கிரியையாகிய உம்மு 3
டைய வானங்களையும், நீர் ஸ்தாபித்த சந்திர
னையும் நட்சத்திரங்களையும் நான் பார்க்கும்
போது,
மனுஷனை நீர் நினைக்கிறதற்கும், [12]மனுஷ 4
குமாரனை நீர் விசாரிக்கிறதற்கும் அவன் எம்
மாத்திரம் என்கிறேன்.
நீர் அவனை தேவதூதரிலும் சற்று சிறியவ 5
னாக்கினீர்; மகிமையினாலும் கனத்தினாலும்
அவனை முடிசூட்டினீர்.
உம்முடைய கரத்தின் கிரியைகளின்மேல் 6
நீர் அவனுக்கு ஆளுகை தந்து, [13]சகலத்தை
யும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்தி
னீர்.
ஆடுமாடுகளெல்லாவற்றையும், காட்டு மிரு 7
கங்களையும்,
ஆகாயத்துப் பறவைகளையும், சமுத்திரத்து 8
மச்சங்களையும், கடல்களில் சஞ்சரிக்கிறவைக
ளையும் அவனுடைய பாதங்களுக்குக் கீழ்ப்ப
டுத்தினீர்.
எங்கள் ஆண்டவராகிய கர்த்தாவே, உம் 9
முடைய நாமம் பூமியெங்கும் எவ்வளவு மேன்
மையுள்ளதாயிருக்கிறது!

(முத்லபேன் வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலைவனுக்கு
ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, என் முழு இருதயத்தோடும்
உம்மைத் துதிப்பேன்; [14]உம்முடைய அதி
சயங்களையெல்லாம் விவரிப்பேன்.
உம்மில் மகிழ்ந்து களிகூருவேன்; உன்னத 2
மானவரே, [15]உமது நாமத்தைக் கீர்த்தனம்
பண்ணுவேன்.
என் சத்துருக்கள் பின்னாகத் திரும்பும் 3
போது, உமது சமுகத்தில் அவர்கள் இட
றுண்டு அழிந்துபோவார்கள்.
நீர் என் நியாயத்தையும் என் வழக்கையும் 4
தீர்த்து, நீதியுள்ள நியாயாதிபதியாய் சிங்கா
சனத்தின்மேல் வீற்றிருக்கிறீர்.
ஜாதிகளைக் கடிந்துகொண்டு, துன்மார்க்க 5
ரை அழித்து, [16]அவர்கள் நாமத்தை என்றென்
றைக்கும் இல்லாதபடி குலைத்துப்போட்டீர்.
சத்துருக்கள் என்றென்றைக்கும் பாழாக்கப் 6
பட்டார்கள்; அவர்கள் பட்டணங்களை நிர்மூல
மாக்கினீர்; அவர்கள் பேரும் [17]அவர்களோடே
கூட ஒழிந்துபோயிற்று.
கர்த்தரோ என்றென்றைக்கும் இருப்பார்; 7
[18]தம்முடைய சிங்காசனத்தை நியாயத்தீர்ப்
புக்கு ஆயத்தம் பண்ணினார்.
அவர் பூச்சக்கரத்தை நீதியாய் நியாயந்தீர்த் 8
து, [19]சகல ஜனங்களுக்கும் செம்மையாய் நீதி
செய்வார்.

1 1 சாமு. 24. 7.
2 94. 1, 2
3 44. 23. ஏசா. 51. 9
4 18. 20
5 வெளி. 2. 23
6 மத். 3. 10
7 45. 5. உபா. 32. 23
8 யோபு 15. 35. ஏசா. 33. 11
9 எஸ்தர், 7. 10: 9. 25. பிர. 10. 8
10 148. 13
11 மத். 11: 28: 21. 16. 1 கொ. 1. 27
12 144. 3. யோபு 7. 17. எபி 2. 6–9
13 ஆதி. 1. 26, 28. 1 கொ. 15. 27. எபி. 2. 8
14 139. 14
15 83. 17
16 உபா. 9. 14 நீதி. 10. 7
17 2 இரா. 19. 25. ஞ
18 102. 26. எபி. 1. 11
19 வெளி. 20. 12, 13

9 சிறுமைப்பட்டவனுக்குக் கர்த்தர் அடைக்
கலமானவர்; [1]நெருக்கப்படுகிற காலங்களில்
அவரே தஞ்சமானவர்.
10 கர்த்தாவே, உம்மைத் தேடுகிறவர்களை நீர்
கைவிடுகிறதில்லை; ஆதலால், உமது நாமத்தை
[2]அறிந்தவர்கள் உம்மை நம்பியிருப்பார்கள்.
11 சீயோனில் வாசமாயிருக்கிற கர்த்தரைக்
கீர்த்தனம்பண்ணி, அவர் செய்கைகளை ஜனங்
களுக்குள்ளே அறிவியுங்கள்.
12 இரத்தப்பழிகளைக்குறித்து அவர் விசாரணை
செய்யும்போது, [3]அவைகளை நினைக்கிறார்;
சிறுமைப்பட்டவர்களுடைய கூப்பிடுதலை மற
வார்.
13 மரணவாசல்களிலிருந்து என்னைத் தூக்கி
விடுகிற கர்த்தாவே, நான் உம்முடைய துதி
களையெல்லாம் சீயோன் குமாரத்தியின் வாசல்
களில் விவரித்து, உம்முடைய ரட்சிப்பினால்
[4]களிகூரும்படிக்கு,
14 தேவரீர் எனக்கு இரங்கி, என்னைப் பகைக்
கிறவர்களால் எனக்கு வரும் துன்பத்தை
நோக்கிப்பாரும்.
15 ஜாதிகள் தாங்கள் வெட்டின குழியில் தாங்க
ளேவிழுந்தார்கள்; [5]அவர்கள் மறைவாய்வைத்த
வலையில் அவர்களுடைய காலே அகப்பட்
டுக்கொண்டது.
16 கர்த்தர் தாம்செய்த நியாயத்தினால் அறியப்
படுகிறார்; துன்மார்க்கன் தன் கைகளின் செய்
கையிலே சிக்கிக்கொண்டான்.
17 துன்மார்க்கரும், தேவனை மறக்கிற எல்லா
ஜாதிகளும், [6]நரகத்திலே தள்ளப்படுவார்
கள்.
18 எளியவன் என்றைக்கும் மறக்கப்படுவ
தில்லை; [7]சிறுமைப்பட்டவர்களுடைய நம்
பிக்கை ஒருபோவதும் கெட்டுப்போவதில்லை.
19 எழுந்தருளும் கர்த்தாவே, மனுஷன் பெ
லன் கொள்ளாதபடி செய்யும்; ஜாதிகள் உம்மு
டைய சமுகத்தில் நியாயந்தீர்க்கப்படக்கட
வர்கள்.
20 ஜாதிகள் தங்களை மனுஷரென்று அறியும்
படிக்கு, அவர்களுக்குப் பயமுண்டாக்கும்,
[8]கர்த்தாவே.

**10** கர்த்தாவே, ஏன் தூரத்தில் நிற்கிறீர்?
ஆபத்துநேரிடுகிற சமயங்களில் நீர் ஏன்
மறைந்திருக்கிறீர்?
2 துன்மார்க்கன் தன் பெருமையினால் சிறு
மைப்பட்டவனைக் கடூரமாய்த் துன்பப்படுத்து
கிறான்; [9]அவர்கள் நினைத்த சதிமோசங்களில்
அவர்களே அகப்படுவார்கள்.
3 துன்மார்க்கன் தன் உள்ளம் இச்சித்ததைப்
பெற்றதினால் பெருமைபாராட்டி, [10]பொருளை
அபகரித்துத் தன்னைத்தான் போற்றி, கர்த்த
ரை அசட்டைபண்ணுகிறான்.
4 துன்மார்க்கன் தன் கர்வத்தினால் தேவனைத்
தேடான்; [11]அவன் நினைவுகளெல்லாம் †தே
வன் இல்லையென்பதே.
5 அவன் வழிகள் எப்போதும் கேடுள்ளவை
கள்; உம்முடைய நியாயத்தீர்ப்புகள் அவன்
பார்வைக்கு எட்டாமல் மிகவும் [12]உயரமாயிருக்
கிறது; தன் எதிராளிகளெல்லார்மேலும் சீறு
கிறான்.
நான் அசைக்கப்படுவதில்லை, [13]தலைமுறை 6
தலைமுறைதோறும் தீங்கு என்னை அணுகுவ
தில்லையென்று தன் இருதயத்தில் சொல்லிக்
கொள்ளுகிறான்.
அவன் வாய் சபிப்பினாலும் கபடத்தினாலும் 7
கொடுமையினாலும்நிறைந்திருக்கிறது;[14]அவன்
நாவின்கீழ் தீவினையும் அக்கிரமும் உண்டு.
கிராமங்களின் ஒளிப்பிடங்களிலே பதிவி 8
ருந்து, மறைவிடங்களிலே குற்றமற்றவனைக்
கொல்லுகிறான்; [15]திக்கற்றவர்களைப்பிடிக்க
அவன் கண்கள் நோக்கிக்கொண்டிருக்கிறது.
தன் கெபியிலிருக்கிற சிங்கத்தைப்போல 9
[16]மறைவில்பதிவிருக்கிறான்;ஏழையைப்பிடிக்
கப் பதிவிருந்து, ஏழையைத் தன் வலைக்குள்
இழுத்துப் பிடித்துக்கொள்ளுகிறான்.
திக்கற்றவர்கள் தன் ‡பலவான்கள் கையில் 10
விழும்படி அவன் பதுங்கிக்கிடக்கிறான்.
தேவன் அதை மறந்தார் என்றும், அவர் 11
தம்முடைய முகத்தை மறைத்து, [17]ஒருக்கா
லும் அதைக் காணமாட்டார் என்றும், தன்
இருதயத்திலே சொல்லிக்கொள்ளுகிறான்.
கர்த்தாவே, எழுந்தருளும்; தேவனே, உம் 12
முடைய கையை உயர்த்தும்; [18]ஏழைகளை மற
வாதேயும்.
துன்மார்க்கன் தேவனை அசட்டைபண்ணி: 13
நீர் கேட்டு விசாரிப்பதில்லை என்று தன் இரு
தயத்தில் சொல்லிக்கொள்வானேன்?
அதைப் பார்த்திருக்கிறீரே! உபத்திரவத் 14
தையும் குரோதத்தையும் கவனித்திருக்கிறீரே;
நீர் பதிலளிப்பீர்; ஏழையானவன் தன்னை
உமக்கு ஒப்புவிக்கிறான்; [19]திக்கற்றபிள்ளைக
ளுக்குச் சகாயர் நீரே.
துன்மார்க்கனும் பொல்லாதவனுமாயிருக்கி 15
றவனுடைய புயத்தை முறித்துவிடும்; [20]அவ
னுடைய ஆகாமியம் காணாமற்போகுமட்டும்
அதைத் தேடி விசாரியும்.
கர்த்தர் சதாகாலங்களுக்கும் ராஜாவாயிருக் 16
கிறார்; [21]புறஜாதியார் அவருடைய தேசத்தி
லிருந்து அழிந்துபோவார்கள்.
கர்த்தாவே, சிறுமைப்பட்டவர்களுடைய 17
வேண்டுதலைக் கேட்டிருக்கிறீர்; [22]அவர்கள்
இருதயத்தை ஸ்திரப்படுத்துவீர்.
மண்ணான மனுஷன் இனிப் பலவந்தஞ் 18
செய்யத் தொடராதபடிக்கு, தேவரீர் திக்கற்ற
பிள்ளைகளுக்கும் ஒடுக்கப்பட்டவர்களுக்கும்
நீதிசெய்ய [23]உம்முடைய செவிகளைச் சாய்த்
துக் கேட்டருளுவீர்.

**11**

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

நான் கர்த்தரை நம்பியிருக்கிறேன்; [24]பின்
னை ஏன் நீங்கள் என் ஆத்துமாவை நோக்கி:
பட்சியைப்போல உன் மலைக்குப் பறந்துபோ
என்று சொல்லுகிறீர்கள்.
இதோ, துன்மார்க்கர் வில்லை வளைத்து, 2

[1] 32. 7
[2] 91. 14. நீதி. 18. 10
[3] ஆதி. 9. 5
[4] 13. 5
[5] நீதி. 5. 22
* திடானம். 19. 14
[6] 50. 22
[7] நீதி. 23. 18. ஏசா. 41. 17
[8] 83. 15, 16
[9] நீதி. 5. 22
[10] நீதி. 28. 4. ரோ. 1. 32
[11] 14. 1, 2
† தேவனைப்பற்றும் சிந்தனை அவனுக்குள் இல்லை. எபே. 2. 12
[12] நீதி. 24. 7. ஏசா. 26. 11
[13] பிர. 8. 11. ஏசா. 56. 12. வெளி. 18. 7
[14] யோபு 20. 12
[15] ஆப. 3. 14
[16] மீகா. 7. 2
‡ வல்லமைக்குள்.
[17] பிர. 8. 11
[18] மீகா. 5. 9
[19] ஓசி. 14. 3. 2 தீமோ. 1. 12. 1 பே. 4. 19
[20] 37. 17
[21] 1 தீமோ. 6. 15, 16
[22] ஏசா. 65. 24
[23] ஏசா. 11. 4
[24] 56. 11. 1 சாமு. 26. 19, 20

[1]செம்மையான இருதயத்தார்மேல் அந்தகாரத்
தில் எய்யும்படி தங்கள் அம்புகளை நாணிலே
தொடுக்கிறார்கள்.
3 அஸ்திபாரங்களும் நிர்மூலமாகிறதே, [2]நீதி
மான் என்ன செய்வான்?
4 கர்த்தர் தம்முடைய பரிசுத்த ஆலயத்தில்
[3]இருக்கிறார்; கர்த்தருடைய சிங்காசனம் [4]பர
லோகத்தில் இருக்கிறது; அவருடைய கண்
கள் மனுபுத்திரரைப் பார்க்கிறது; அவரு
டைய இமைகள் அவர்களைச் சோதித்தறி
கிறது.
5 கர்த்தர் நீதிமானைச் சோதித்தறிகிறார்,
[5]துன்மார்க்கனையும் கொடுமையில் பிரியமுள்
ளவனையும் அவருடைய உள்ளம் வெறுக்கிறது.
6 துன்மார்க்கர்மேல் கண்ணிகளை வருஷிக்
கப்பண்ணுவார்; [6]அக்கினியும் கந்தகமும்
கடுங்கோடைக் கொந்தளிப்பும் அவர்கள் குடிக்
கும் பாத்திரத்தின் பங்கு.
7 கர்த்தர் நீதியுள்ளவர், நீதியின்மேல் பிரியப்
படுவார்; அவருடைய முகம் செம்மையான
வனை நோக்கியிருக்கிறது.

**12** (செமினீத்தென்னும் எண்ணரம்புக் கின்னரத்தில்
வாசிக்க இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீ
தின் சங்கீதம்.)

இரட்சியும் கர்த்தாவே, பக்தியுள்ளவன்
அற்றுப்போகிறான்; [7]உண்மையுள்ளவர்கள்
மனுபுத்திரரில் குறைந்திருக்கிறார்கள்.
2 அவரவர் தங்கள் தோழரோடே பொய்
பேசுகிறார்கள்; [8]இச்சக உதடுகளால் இருமன
தாய்ப் பேசுகிறார்கள்.
3 இச்சகம் பேசுகிற எல்லா உதடுகளையும்,
[9]பெருமைகளைப் பேசுகிற நாவையும் கர்த்தர்
அறுத்துப்போடுவார்.
4 அவர்கள்: எங்கள் நாவுகளால் மேற்கொள்
ளுவோம், எங்கள் உதடுகள் எங்களுடையது;
யார் எங்களுக்கு ஆண்டவன் என்று சொல்
லுகிறார்கள்.
5 ஏழைகள் பாழாக்கப்பட்டதினிமித்தமும்,
எளியவர்கள் விடும் பெருமூச்சினிமித்தமும்,
நான் இப்பொழுது எழுந்து, அவன்மேல்
சீறுகிறவர்களுக்கு அவனைக் காத்துச் சுகமா
யிருக்கப்பண்ணுவேன் என்று கர்த்தர் சொல்
லுகிறார்.
6 கர்த்தருடைய சொற்கள் மண் குகையில்
ஏழுதரம் உருக்கி, [10]புடமிடப்பட்ட வெள்ளிக்
கொப்பான சுத்த சொற்களாயிருக்கிறது.
7 கர்த்தாவே, நீர் அவர்களைக் காப்பாற்றி,
அவர்களை என்றைக்கும் இந்தச் சந்ததிக்கு
விலக்கிக் காத்துக்கொள்ளுவீர்.
8 மனுபுத்திரரில் சண்டாளர் உயர்ந்திருக்கும்
போது, துன்மார்க்கர் எங்கும் சுற்றித்திரி
வார்கள்.

**13** (இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, எதுவரைக்கும் என்னை மறந்
திருப்பீர், [11]எதுவரைக்கும் உம்முடைய முகத்
தை எனக்கு மறைப்பீர்?

[1] 64. 2-4
[2] 82. 5. 2 தீமோ. 2. 19
[3] ஆப. 2. 20
[4] ஏசா. 66. 1 மத். 5. 34. வெளி. 4. 2
[5] ஆதி. 22. 1. யாக். 1. 12
[6] ஆதி. 19. 24
[7] ஏசா. 57. 1
[8] ரோ. 16. 18
[9] 1 சாமு. 2. 3. தானி. 7. 8. 25
[10] 119. 140. 2 சாமு. 22. 31. நீதி. 30. 5
[11] 88. 14. ஏசா. 59. 2
[12] எரே. 51. 39
[13] 10. 4: 53. 1. ழ
[14] ஆதி. 6. 11. 12. ரோ. 3. 10 ழ
[15] எரே. 10. 25
[16] ரோ. 11. 26
[17] 24. 3. ழ
[18] ஏசா. 33. 15. எபே. 4. 25

என் இருதயத்திலே சஞ்சலத்தை நித்தம் 2
நித்தம் வைத்து, எதுவரைக்கும் என் ஆத்து
மாவிலே ஆலோசனைபண்ணிக்கொண்டிருப்
பேன்? எதுவரைக்கும் என் சத்துரு என்
மேல் தன்னை உயர்த்துவான்?
என் தேவனாகிய கர்த்தாவே, நீர் நோக்கிப் 3
பார்த்து, எனக்குச் செவிகொடுத்தருளும்;
[12]நான் மரணநித்திரை அடையாதபடிக்கு என்
கண்களைத் தெளிவாக்கும்.
அவனை மேற்கொண்டேன் என்று என் 4
பகைஞன் சொல்லாதபடிக்கும், நான் தள்ளா
டுகிறதினால் என் சத்துருக்கள் களிகூராதபடிக்
கும் இப்படிச் செய்தருளும்.
நான் உம்முடைய கிருபையின்மேல் நம் 5
பிக்கையாயிருக்கிறேன்; உம்முடைய இரட்
சிப்பினால் என் இருதயம் களிகூரும்.
கர்த்தர் எனக்கு நன்மை செய்தபடியால் 6
அவரைப் பாடுவேன்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட **14**
தாவீதின் சங்கீதம்.)

தேவன் இல்லை என்று மதிகெட்டவன்
தன் இருதயத்தில் சொல்லிக்கொள்ளுகிறான்.
[13]அவர்கள் தங்களைக் கெடுத்து, அருவருப்பான
கிரியைகளைச் செய்துவருகிறார்கள்; [14]நன்மை
செய்கிறவன் ஒருவனும் இல்லை.
தேவனைத் தேடுகிற உணர்வுள்ளவன் உண் 2
டோ என்று பார்க்க கர்த்தர் பரலோகத்தி
லிருந்து மனுபுத்திரரைக் கண்ணோக்கினார்.
எல்லாரும் வழிவிலகி, ஏகமாய்க் கெட்டுப் 3
போனார்கள்; நன்மை செய்கிறவன் இல்லை,
ஒருவனாகிலும் இல்லை.
அக்கிரமக்காரரில் ஒருவனுக்கும் அறிவு 4
இல்லையோ? அப்பத்தைப் பட்சிக்கிறதுபோல,
என் ஜனத்தைப் பட்சிக்கிறார்களே; [15]அவர்
கள் கர்த்தரைத் தொழுதுகொள்ளுகிறதில்லை.
அங்கே அவர்கள் மிகவும் பயந்தார்கள்; 5
தேவன் நீதிமானுடைய சந்ததியோடே இருக்
கிறாரே.
சிறுமைப்பட்டவனுக்குக் கர்த்தர் அடைக் 6
கலமாயிருக்கிறார் என்று சொல்லி, நீங்கள்
அவனுடைய ஆலோசனையை அலட்சியம்
பண்ணினீர்கள்.
சீயோனிலிருந்து [16]இஸ்ரவேலுக்கு இரட் 7
சிப்பு வருவதாக; கர்த்தர் தம்முடைய ஜனத்
தின் சிறையிருப்பைத் திருப்பும்போது, யாக்
கோபுக்குக் களிப்பும், இஸ்ரவேலுக்கு மகிழ்ச்
சியும் உண்டாகும்.

(தாவீதின் சங்கீதம்.) **15**

கர்த்தாவே, யார் உம்முடைய கூடாரத்
தில் தங்குவான்? [17]யார் உம்முடைய பரிசுத்த
பர்வதத்தில் வாசம்பண்ணுவான்?
உத்தமனாய் நடந்து, நீதியை நடப்பித்து, 2
[18]மனதாரச் சத்தியத்தைப் பேசுகிறவன்தானே.
அவன் தன் நாவினால் புறங்கூறாமலும், 3
தன் தோழனுக்குத் தீங்கு செய்யாமலும், தன்
அயலான்மேல் சொல்லப்படும் நிந்தையான
பேச்சை எடுக்காமலும் இருக்கிறான்.

4 ஆகாதவன் அவன் பார்வைக்குத் தீழ்ப்பா
னவன்; கர்த்தருக்குப் பயந்தவர்களையோ கனம்
பண்ணுகிறான்; ஆணையிட்டதில் தனக்கு நஷ்
டம் வந்தாலும் [1]தவறுதிருக்கிறான்.
5 தன் பணத்தை வட்டிக்குக் கொடாமலும்,
[2]குற்றமில்லாதவனுக்கு விரோதமாய்ப் பரிதா
னம் வாங்காமலும் இருக்கிறான். இப்படிச்
செய்கிறவன் என்றென்றைக்கும் [3]அசைக்கப்
படுவதில்லை.

16 (தாவீது எழுதின மிக்தாம் என்னும் பொற்பணதிக்கீதம்.)
தேவனே, என்னைக் காப்பாற்றும், உம்மை
நம்பியிருக்கிறேன்.
2 என் நெஞ்சமே, நீ கர்த்தரை நோக்கி:
தேவரீர் என் ஆண்டவராயிருக்கிறீர், என்
செல்வம் [4]உமக்கு வேண்டியதாயிராமல்;
3 பூமியிலுள்ள பரிசுத்தவான்களுக்கும், நான்
என் முழுப்பிரியத்தையும் வைத்திருக்கிற
மகாத்துமாக்களுக்கும், [5]அது வேண்டியதா
யிருக்கிறது என்று சொன்னாய்.
4 அந்நிய தேவனை நாடிப் பின்பற்றுகிறவர்
களுக்கு வேதனைகள் பெருகும்; அவர்கள்
செலுத்துகிற ரத்த பானபலிகளை நான் செ
லுத்தமாட்டேன், [6]அவர்கள் நாமங்களை என்
உதடுகளினால் உச்சரிக்கவுமாட்டேன்.
5 கர்த்தர் என் சுதந்தரமும் [7]என் பாத்திரத்
தின் பங்குமானவர்; என் சுதந்தரத்தை தேவ
ரீர் காப்பாற்றுகிறீர்.
6 நேர்த்தியான இடங்களில் எனக்குப் பங்கு
கிடைத்தது; ஆம், சிறப்பான சுதந்தரம்
எனக்கு உண்டு.
7 எனக்கு ஆலோசனை தந்த கர்த்தரைத்துதிப்
பேன்; இராக்காலங்களிலும் என் உள்ளிந்திரி
யங்கள் என்னை உணர்த்தும்.
8 கர்த்தரை எப்பொழுதும் எனக்கு முன்பாக
வைத்திருக்கிறேன்; [8]அவர் என் வலதுபாரிசத்
தில் இருக்கிறபடியால் நான் அசைக்கப்படுவ
தில்லை. ஆகையால் என் இருதயம் பூரித்தது,
9 என் மகிமை களிகூர்ந்தது; என் மாம்ச
மும் நம்பிக்கையோடே தங்கியிருக்கும்.
10 என் ஆத்துமாவைப் பாதாளத்தில் விடீர்,
[9]உம்முடைய பரிசுத்தவானை அழிவைக் காண
வொட்டீர்.
11 ஜீவமார்க்கத்தை [10]எனக்குத் தெரியப்படுத்
துவீர்; உம்முடைய சமுகத்தில் பரிபூரண
ஆனந்தமும் [11]உம்முடைய வலதுபாரிசத்தில்
நித்திய பேரின்பமும் உண்டு.

17 (தாவீதின் விண்ணப்பம்.)
கர்த்தாவே, நியாயத்தைக் கேட்டருளும்,
என் கூப்பிடுதலைக் கவனியும்; கபடமில்லாத
உதடுகளினின்று பிறக்கும் என் விண்ணப்பத்
திற்குச் செவிகொடும்.
2 உம்முடைய சந்நிதியிலிருந்து என் நியா
யம் வெளிப்படுவதாக; உம்முடைய கண்கள்
நியாயமானவைகளை நோக்குவதாக.
3 நீர் என் இருதயத்தைப் பரிசோதித்து,
[12]இராக்காலத்தில் அதை விசாரித்து, என்னைப்
புடமிட்டுப் பார்த்தும் ஒன்றும் காணாதிருக்கி
றீர்; [13]என் வாய் மீறுதபடிக்குத் தீர்மானம்
பண்ணினேன்.
மனுஷரின் செய்கைகளைக் குறித்து, நான் 4
உம்முடைய உதடுகளின்வாக்கினாலே[14]துஷ்ட
னுடைய பாதைகளுக்கு விலக்கமாய் என்னைக்
காத்துக்கொள்ளுகிறேன்.
என் காலடிகள் வழுவாதபடிக்கு, [15]என் 5
நடைகளை உமது வழிகளில் ஸ்திரப்படுத்தும்.
தேவனே, நான் உம்மை நோக்கிக் கெஞ்சு 6
கிறேன், எனக்குச் செவிகொடுக்கிறீர்; என்
னிடத்தில் உம்முடைய செவியைச் சாய்த்து,
என் வார்த்தையைக் கேட்டருளும்.
உம்மை நம்புகிறவர்களை அவர்களுக்கு 7
விரோதமாய் எழும்புகிறவர்களினின்று உமது
வலதுகரத்தினால் தப்புவித்து ரட்சிக்கிறவரே!
உம்முடைய அதிசயமான கிருபையை விளங்
கப்பண்ணும்.
கண்மணியைப்போல [16]என்னைக் காத்தரு 8
ளும்.
என்னை ஒடுக்குகிற துன்மார்க்கருக்கும்; 9
என்னைச் சூழ்ந்துகொள்ளுகிற என் பிராணப்
பகைஞருக்கும் மறைவாக, [17]உம்முடையசெட்
டைகளின் நிழலிலே என்னைக் காப்பாற்றும்.
அவர்கள் நிணந்துன்னியிருக்கிறார்கள், தங் 10
கள் வாயினால் வீம்பு பேசுகிறார்கள்.
நாங்கள் செல்லும் பாதைகளில் இப்பொ 11
ழுது எங்களை வளைந்துகொண்டார்கள்; எங்க
ளைத் தரையிலே தள்ளும்படி அவர்கள் கண்
கள் எங்களை நோக்கிக்கொண்டிருக்கிறது.
பீறுகிறதற்கு ஆவலுள்ள சிங்கத்துக்கும், 12
மறைவிடங்களில் பதிவிருக்கிற பாலசிங்கத்
துக்கும் ஒப்பாயிருக்கிறார்கள்.
கர்த்தாவே, நீர் எழுந்திருந்து, அவனுக்கு 13
எதிரிட்டு, அவனை மடங்கடியும்; கர்த்தவே,
என் ஆத்துமாவைத் துன்மார்க்கனுடைய கைக்
கு [18]உம்முடைய பட்டயத்தினால் தப்பிவியும்.
மனுஷனுடைய கைக்கும், இம்மையில் தங் 14
கள் பங்கைப் பெற்றிருக்கிற[19]உலக மக்களின்
கைக்கும் உம்முடைய கரத்தினால் என்னைத்
தப்புவியும்; அவர்கள் வயிற்றை உமது திரவி
யத்தினால் நிரப்புகிறீர்; அவர்கள் புத்திரபாக்
கியத்தினால் திருப்தியடைந்து, தங்களுக்கு
மீதியான பொருளைத் தங்கள் குழந்தைகளுக்கு
வைக்கிறார்கள்.
நானோ நீதியில் உம்முடைய முகத்தைத் 15
தரிசிப்பேன்; [20]நான் விழிக்கும்போது உமது
சாயலால் திருப்தியாவேன்.

18 (இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம் கர்த்த
ருடைய தாசனாகிய தாவீது இந்தப் பாட்டின் வார்த்
தைகளைக் கர்த்தர் தன்னைத் தன்னுடைய எல்லாச் சத்து
ருக்களின் கைக்கும் சவுலின் கைக்கும் நீங்கலாக்கி விடு
வித்த நாளிலே பாடினது.)
என் பெலனாகிய கர்த்தாவே, [21]உம்மில்
அன்புகூருவேன்.
கர்த்தர் என் கன்மலையும், என் கோட் 2
டையும், என் ரட்சகரும், என் தேவனும், நான்
நம்பியிருக்கிற என் துருகமும், என் கேடக

[1] நியா. 11. 35
[2] எசே. 18. 8, 17: 22. 12
[3] 2 பே. 1. 10
[4] நன்மை = வாழ்வு யோபு 35. 7, 8. லூ. 17. 10
[5] மல். 3. 17, 18
[6] ஓசி. 2. 16,17
[7] புல. 3. 24
[8] 73. 23-26. அப். 2. 25. ழ
[9] அப். 3. 15
[10] மத். 7. 14
[11] 36. 8. மத். 5. 8: 25. 23. 1 கொ. 13.12. 1 யோ. 3. 2
[12] 139. 1, 23
[13] 39. 1, 2
[14] நீதி. 2. 10-15
[15] 119. 133
[16] உபா. 32.10. சகரி. 2. 8
[17] ரூத். 2. 12
[18] ஏசா. 10. 5
[19] 16. 25. யாக். 5. 5
[20] 1 யோ. 3. 2
[21] 1 யோ. 4. 19

மும், என் ரட்சணியக்கொம்பும், என் உயர்ந்த
அடைக்கலமுமாயிருக்கிறார்.
3 துதிக்குப் பாத்திரராகிய கர்த்தரை நோக்
கிக் கூப்பிடுவேன்; [1]அதனால் என் சத்து
ருக்களுக்கு நீங்கலாகி ரட்சிக்கப்படுவேன்.
4 மரணக்கட்டுகள் என்னைச் சுற்றிக்கொண்
டது; துர்ச்சனப்பிரவாகம் என்னைப் பயப்
படுத்தினது.
5 பாதாளக்கட்டுகள் என்னைச் சூழ்ந்துகொண்
டது; மரணக் கண்ணிகள் என்மேல்விழுந்தது.
6 எனக்கு உண்டான நெருக்கத்திலே கர்த்
தரை நோக்கிக் கூப்பிட்டு, என் தேவனை
நோக்கி அபயமிட்டேன்; தமது * ஆலயத்தி
லிருந்து என் சத்தத்தைக் கேட்டார், என் கூப்
பிடுதல் அவர் சந்நிதியில் போய், அவர் செவி
களில் ஏறிற்று.
7 அப்பொழுது பூமி அசைந்து அதிர்ந்தது;
[2]அவர் கோபங்கொண்டபடியால் பர்வதங்
களின் அஸ்திபாரங்கள் குலுங்கி அசைந்
தது.
8 அவர் நாசியிலிருந்து புகை எழும்பிற்று,
அவர் வாயிலிருந்து பட்சிக்கிற அக்கினி புறப்
பட்டது; அதனால் தழல் மூண்டது.
9 வானங்களைத் தாழ்த்தி இறங்கினார்; [3]அவர்
பாதங்களின்கீழ் காரிருள் இருந்தது.
10 கேருபீன்மேல் ஏறி வேகமாய்ச் சென்றார்;
காற்றின் செட்டைகளைக்கொண்டு பறந்தார்.
11 இருளைத் தமக்கு மறைவிடமாக்கினார்; கரும்
புனல்களையும், ஆகாயத்துக் கார்மேகங்களையும்
தம்மைச்சூழக் கூடாரமாக்கினார்.
12 அவருடைய சந்நிதிப்பிரகாசத்தினால் அவ
ருடைய மேகங்கள் பறந்து விலகிற்று, கல்
மழையும் நெருப்புத்தழலும் விழுந்தது.
13 கர்த்தர் வானங்களிலே குமுறினார், [4]உன்
னதமானவர் தமது சத்தத்தைத் தொனிக்கப்
பண்ணினார்; கல்மழையும் நெருப்புத்தழலும்
விழுந்தது.
14 தம்முடைய அம்புகளை எய்து, அவர்களைச்
சிதறடித்தார்; மின்னல்களைப் பிரயோகித்து,
அவர்களைக் கலங்கப்பண்ணினார்.
15 அப்பொழுது கர்த்தாவே, உம்முடைய
கண்டிதத்தினாலும் உம்முடைய நாசியின் சுவா
சக்காற்றினாலும் தண்ணீர்களின் மதகுகள்
திறவுண்டு, [5]பூதலத்தின் அஸ்திபாரங்கள்
காணப்பட்டது.
16 உயரத்திலிருந்து அவர் கைநீட்டி, என்
னைப்பிடித்து, ஜலப்பிரவாகத்திலிருக்கிற என்
னைத் தூக்கிவிட்டார்.
17 என்னிலும் அதிக பலவான்களாயிருந்த
என் பலத்த சத்துருவுக்கும் என்னைப் பகைக்
கிறவர்களுக்கும் என்னை விடுவித்தார்.
18 என் ஆபத்துநாளில் எனக்கு எதிரிட்டு வந்
தார்கள்; [6]கர்த்தரோ எனக்கு ஆதரவாயிருந்தார்.
19 அவர் விசாலமான இடத்திலே என்னைக்
கொண்டுவந்து என்மேல் பிரியமாயிருந்தபடி
யால், என்னைத்தப்புவித்தார்.
20 கர்த்தர் என் நீதிக்குத் தக்கதாக எனக்குப்
பதிலளித்தார்; [7]என் கைகளின் சுத்தத்திற்குத்
தக்கதாக எனக்குச் சரிக்கட்டினார்.
கர்த்தருடைய வழிகளைக் கைக்கொண்டுவந் 21
தேன்; நான் என் தேவனுக்குத் துரோகம்
பண்ணினதில்லை.
அவருடைய நியாயங்களையெல்லாம் எனக் 22
கு முன்பாக நிறுத்தினேன்; அவருடைய பிர
மாணங்களை நான் தள்ளிப்போடவில்லை.
அவர் முன்பாக நான் மனவுண்மையா 23
யிருந்து, என் துர்க்குணத்துக்கு என்னை விலக்
கிக் காத்துக்கொண்டேன்.
ஆகையால் கர்த்தர் என் நீதிக்கும், [8]தம்மு 24
டைய கண்களுக்கு முன்னிருக்கிற என் கைக
ளின் சுத்தத்திற்கும் தக்கதாக எனக்குப் பல
னளித்தார்.
தயவுள்ளவனுக்கு நீர் தயவுள்ளவராகவும், 25
[9]உத்தமனுக்கு நீர் உத்தமராகவும்; புனித
னுக்கு நீர் புனிதராகவும்,
மாறுபாடுள்ளவனுக்கு நீர் மாறுபடுகிறவ 26
ராகவும் தோன்றுவீர்
தேவரீர் சிறுமைப்பட்ட ஜனத்தை ரட்சிப் 27
பீர்; [10]மேட்டிமையான கண்களைத்தாழ்த்துவீர்.
தேவரீர் என் விளக்கை ஏற்றுவீர்; [11]என் 28
தேவனாகிய கர்த்தர் என் இருளை வெளிச்ச
மாக்குவார்.
உம்மாலே நான் ஒரு சேனைக்குள் பாய்ந்து 29
போவேன்; என் தேவனாலே ஒரு மதிலைத்
தாண்டுவேன்.
தேவனுடைய வழி உத்தமமானது; கர்த்த 30
ருடைய வசனம் புடமிடப்பட்டது; [12]தம்மை
நம்புகிற அனைவருக்கும் அவர் கேடகமா
யிருக்கிறார்.
கர்த்தரையல்லாமல் தேவன் யார்? [13]நம்மு 31
டைய தேவனையன்றிக் கன்மலையும் யார்?
என்னைப் பலத்தால் இடைகட்டி, [14]என் 32
வழியைச் செவ்வைப்படுத்துகிறவர் தேவனே.
அவர் என் கால்களை மான்களுடைய கால் 33
களைப்போலாக்கி, என்னுடைய உயர்தலங்க
ளில் என்னை நிறுத்துகிறார்.
வெண்கல வில்லும் என் புயங்களால் வளை 34
யும்படி, என் கைகளை யுத்தத்திற்குப் பழக்கு
விக்கிறார்.
உம்முடைய ரட்சிப்பின் கேடகத்தையும் 35
எனக்குத் தந்தீர்; உம்முடைய வலதுகரம்
என்னைத் தாங்குகிறது; [15]உம்முடைய காரு
ணியம் என்னைப் பெரியவனாக்கும்.
என் கால்கள் வழுவாதபடிக்கு, [16]நான் 36
நடக்கிற வழியை அகலமாக்கினீர்.
என் சத்துருக்களைப் பின்தொடர்ந்து, அவர் 37
களைப் பிடிப்பேன்; அவர்களை நிர்மூலமாக்
கும் வரைக்கும் திரும்பேன்.
அவர்கள் எழுந்திருக்க மாட்டாதபடிக்கு, 38
[17]என் பாதங்களின கீழ் விழத்தக்கதாக அவர்
களை வெட்டினேன்.
யுத்தத்திற்கு நீர் என்னைப் பலத்தால் இடை 39
கட்டி, என்மேல் எழும்பினவர்களை என்கீழ்
மடங்கப்பண்ணினீர்.

1 வெளி. 5. 11–13
* பரலோகம்.
2 நாளா. 30. 27
2 அப். 4. 31
3 144. 5
4 1 சாமு. 7. 10
5 106. 9
6 1 சாமு. 30. 6
7 1 சாமு. 24. 17, 20
8 1 சாமு. 26. 23
9 2 சாமு. 22. 27. 1 இரா. 8. 32
10 நீதி. 6. 16, 17
11 நீதி. 20. 27
12 12. 6. நீதி. 30. 5
13 உபா. 32. 31, 39. ஏசா. 45. 5
14 2 கொ. 3. 5
15 2 சாமு. 22. 36
16 நீதி. 4. 12
17 2 சாமு. 5. 20

40 நான் என் பகைஞரைச் சங்கரிக்கும்படி
யாக, என் சத்துருக்களின் பிடரியை எனக்கு
ஒப்புக்கொடுத்தீர்.
41 அவர்கள் கூப்பிடுகிறார்கள், அவர்களை ரட்
சிப்பார் ஒருவருமில்லை; கர்த்தரை நோக்கிக்
கூப்பிடுகிறார்கள், [1]அவர்களுக்கு அவர் உத்
தரவு கொடுக்கிறதில்லை.
42 நான் அவர்களைக் காற்று முகத்திலே பறக்
கிற தூளாக இடித்து, தெருக்களிலுள்ள சேற்
றைப்போல் அவர்களை எறிந்துபோடுகிறேன்.
43 ஜனங்களின் சண்டைகளுக்கு நீர் என்னைத்
தப்புவித்து, ஜாதிகளுக்கு என்னைத் தலைவனாக்
குகிறீர்; நான் அறியாத ஜனங்கள் [2]என்னைச்
சேவிக்கிறார்கள்.
44 அவர்கள் என் சத்தத்தைக் கேட்டவுடனே
எனக்குக் கீழ்ப்படிகிறார்கள்; அந்நியரும்
எனக்கு இச்சகம் பேசி அடங்குகிறார்கள்.
45 அந்நியர் முனைவிழுந்துபோய், [3]தங்கள்
அரண்களிலிருந்து தத்தளிப்பாய்ப் புறப்படு
கிறார்கள்.
46 கர்த்தர் ஜீவனுள்ளவர்; என் கன்மலையான
வர் துதிக்கப்படுவாராக; என் ரட்சிப்பின் தே
வன் உயர்ந்திருப்பாராக.
47 அவர் எனக்காகப் பழிக்குப் பழிவாங்கி
ஜனங்களை எனக்குக் கீழ்ப்படுத்துகிற தேவனா
னவர்.
48 அவரே என் சத்துருக்களுக்கு என்னை
விலக்கி விடுவிக்கிறவர்; எனக்கு விரோதமாய்
எழும்புகிறவர்கள் மேல் என்னை நீர் உயர்த்தி,
கொடுமையான மனுஷனுக்கு என்னைத் தப்பு
விக்கிறீர்.
49 இதினிமித்தம் கர்த்தாவே, ஜாதிகளுக்
குள்ளே உம்மைத் துதித்து, உம்முடைய நாமத்
திற்குச் சங்கீதம் பாடுவேன்.
50 தாம் ஏற்படுத்தின ராஜாவுக்கு மகத்தான
ரட்சிப்பை அளித்து, [4]தாம் அபிஷேகம் பண்
ணின தாவீதுக்கும் அவன் சந்ததிக்கும் சதாகா
லமும் கிருபை செய்கிறார்.

## 19

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

வானங்கள் தேவனுடைய மகிமையை
வெளிப்படுத்துகிறது, [5]ஆகாயவிரிவு அவரு
டைய கரங்களின் கிரியையை அறிவிக்கிறது.
2 ப[illegible]க்குப் பகல் வார்த்தைகளைப் பொழிகி
றது; [illegible]யுக்கு இரவு அறிவைத் தெரிவிக்கிறது.
3 அவைகளுக்குப் பேச்சுமில்லை, வார்த்தையு
மில்லை, அவைகளின் சத்தம் கேட்கப்படுவது
மில்லை.
4 ஆகிலும் அவைகளின் சத்தம் பூமியெங்
கும், [6]அவைகளின் வசனங்கள் பூச்சக்கரத்
தின் கடைசிவரைக்கும் செல்லுகிறது; அவைக
ளில் சூரியனுக்கு ஒரு கூடாரத்தை ஸ்தா
பித்தார்.
5 அது தன் மணவறையிலிருந்து புறப்படுகிற
மணவாளனைப்போ லிருந்து, [7]பராக்கிரம
சாலியைப்போல் தன் பாதையில் ஓட
மகிழ்ச்சியாயிருக்கிறது.

அது வானங்களின் ஒரு முனையிலிருந்து 6
புறப்பட்டு, அவைகளின் மறுமுனைவரைக்கும்
சுற்றியோடுகிறது; அதின் காந்திக்கு மறைவா
னது ஒன்றுமில்லை.
கர்த்தருடைய வேதம் குறைவற்றதும், [8]ஆத் 7
துமாவை உயிர்ப்பிக்கிறதுமாயிருக்கிறது; கர்த்
தருடைய சாட்சி சத்தியமும், பேதையை
ஞானியாக்குகிறதுமா யிருக்கிறது.
கர்த்தருடைய நியாயங்கள் செம்மையும், 8
[9]இருதயத்தைச் சந்தோஷிப்பிக்கிறதுமா யிருக்
கிறது; கர்த்தருடைய கற்பனை தூய்மையும்,
கண்களைத் தெளிவிக்கிறதுமாயிருக்கிறது.
கர்த்தருக்குப் பயப்படுகிற பயம் சுத்தமும், 9
என்றைக்கும் நிலைக்கிறதுமாயிருக்கிறது; கர்த்
தருடைய நியாயங்கள் உண்மையும், அவை
கள் அனைத்தும் நீதியுமாயிருக்கிறது.
அவைகள் பொன்னிலும் மிகுந்த பசும் 10
பொன்னிலும் விரும்பப்படத்தக்கதும், [10]தே
னிலும் தேன்கூட்டிலிருந்து ஒழுகும் தெளி
தேனிலும் மதுரமுள்ளதுமாய் இருக்கிறது.
அன்றியும் அவைகளால் உமது அடியேன் 11
எச்சரிக்கப்படுகிறேன்; [11]அவைகளைக் கைக்
கொள்ளுகிறதினால் மிகுந்தபலன் உண்டு.
தன் பிழைகளை உணருகிறவன் யார்? [12]மறை 12
வான குற்றங்களுக்கு என்னை நீங்கலாக்கும்.
துணிகரமான பாவங்களுக்கு உமது அடி 13
யேனை விலக்கிக் காரும்; [13]அவைகள் என்னை
ஆண்டுகொள்ள ஒட்டாதிரும்; அப்பொழுது
நான் உத்தமனாகி, பெரும் பாதகத்துக்கு நீங்க
லாயிருப்பேன்.
என் கன்மலையும் என் மீட்பருமாகிய கர்த் 14
தாவே, என் வாயின் வார்த்தைகளும், என்
இருதயத்தின் தியானமும், உமது சமுகத்தில்
*பிரீதியாயிருப்பதாக.

## 20

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

ஆபத்துநாளிலே கர்த்தர் உமது ஜெபத்
தைக் கேட்பாராக; [14]யாக்கோபின் தேவனு
டைய நாமம் உமக்கு உயர்ந்த அடைக்கலமா
வதாக.
அவர் பரிசுத்த ஸ்தலத்திலிருந்து உமக்கு 2
ஒத்தாசையனுப்பி, சீயோனிலிருந்து உம்மை
ஆதரிப்பாராக.
நீர் செலுத்தும் காணிக்கைகளையெல்லாம் 3
அவர் நினைத்து, உமது சர்வாங்கதகனபலியைப்
பிரியமாய் ஏற்றுக் கொள்வாராக.
அவர் உமது மனவிருப்பத்தின்படி உமக் 4
குத் தந்தருளி, [15]உமது ஆலோசனைகளையெல்
லாம் நிறைவேற்றுவாராக.
நாங்கள் உமது ரட்சிப்பினால் மகிழ்ந்து, 5
எங்கள் தேவனுடைய நாமத்திலே கொடியேற்
றுவோம்; உமது வேண்டுதல்களையெல்லாம்
கர்த்தர் நிறைவேற்றுவாராக.
கர்த்தர் தாம் அபிஷேகம் பண்ணினவரை 6
[16]ரட்சிக்கிறார் என்பதை இப்பொழுது அறிந்
திருக்கிறேன்; தமது வலதுகரம் செய்யும் ரட்
சிப்பின் வல்லமைகளைக் காண்பித்து, தமது

1 எசே. 11. 11
2 ஏசா. 55. 5
3 மீகா. 7. 17
4 2 சாமு. 7. 13. ரோ. 11. 29
5 ஆதி. 1. 6. ஏசா. 40. 22. ரோ. 1. 19,20
6 ரோ. 1. 19, 28: 10. 18
7 பிர. 1. 5
8 111. 7
9 12. 6
10 119. 72, 127. நீதி. 8. 10, 11: 19
11 நீதி. 29. 18
12 40. 12: 90. 8
13 ஆதி. 20. 6. ரோ. 6. 12–14
* அங்கீகரிக்கப்படுவதாக.
14 நீதி. 18. 10
15 21. 2
16 2. 2

பரிசுத்தவானத்திலிருந்து அவருடைய ஜெபத்
தைக் கேட்பார்.
7 சிலர் ரதங்களைக்குறித்தும், சிலர் குதிரை
களைக்குறித்தும் மேன்மை பாராட்டுகிறார்கள்;
நாங்களோ எங்கள் தேவனாகிய கர்த்தருடைய
நாமத்தைக் குறித்தே [1]மேன்மை பாராட்டு
வோம்.
8 அவர்கள் முறிந்து விழுந்தார்கள்; நாங்
களோ எழுந்து நிமிர்ந்து நிற்கிறோம்.
9 கர்த்தாவே, ரட்சியும்; நாங்கள் கூப்பிடுகிற
நாளிலே ராஜா எங்களுக்குச் செவிகொடுப்
பாராக.

21 (இராகத்தலைவனுக்குஒப்புவிக்கப்பட்டதாவீதின்சங்கீதம்)
கர்த்தாவே, உம்முடைய வல்லமையிலே
ராஜா மகிழ்ச்சியாயிருக்கிறார்; உம்முடைய
ரட்சிப்பிலே எவ்வளவாய்க் களிகூருகிறார்!
2 அவருடைய மனவிருப்பத்தின்படி நீர் அவ
ருக்குத் தந்தருளி, [2]அவருடைய உதடுகளின்
விண்ணப்பத்தைத் தள்ளாதிருக்கிறீர்.
3 உத்தம ஆசீர்வாதங்களோடு நீர் அவருக்கு
எதிர்கொண்டுவந்து, [3]அவர் சிரசில் பொற்கிரீ
டம் தரிப்பிக்கிறீர்.
4 அவர் உம்மிடத்தில் ஆயுசைக் கேட்டார்;
[4]நீர் அவருக்கு என்றென்றைக்குமுள்ள தீர்க்
காயுசை அளித்தீர்.
5 உமது ரட்சிப்பினால் அவர் மகிமை பெரி
தாயிருக்கிறது; மேன்மையையும் மகத்துவத்
தையும் அவருக்கு அருளினீர்.
6 அவரை நித்திய ஆசீர்வாதங்களுள்ளவராக்
குகிறீர்; [5]அவரை உம்முடைய சமுகத்தின்
மகிழ்ச்சியினால் பூரிப்பாக்குகிறீர்.
7 ராஜா கர்த்தர்மேல் நம்பிக்கையாயிருக்கி
றார்; [6]உன்னதமானவருடைய தயவினால்
அசைக்கப்படாதிருப்பார்.
8 உமது கை உமது சத்துருக்களெல்லாரை
யும் எட்டிப்பிடிக்கும்; [7]உமது வலதுகரம் உம்
மைப் பகைக்கிறவர்களைக் கண்டுபிடிக்கும்.
9 உமது கோபத்தின் காலத்திலே அவர்களை
அக்கினிச் சூளையாக்கிப்போடுவீர்; [8]கர்த்தர்
தமது கோபத்திலே அவர்களை அழிப்பார்;
[9]அக்கினி அவர்களைப் பட்சிக்கும்.
10 அவர்கள் கனியைப் பூமியிலிராதபடி நீர்
அழித்து, [10]அவர்கள் சந்ததியை மனுபுத்திரரி
லிராதபடி ஒழியப்பண்ணுவீர்.
11 அவர்கள் உமக்கு விரோதமாய்ப் பொல்
லாங்கு நினைத்தார்கள்; தீவினையை எத்தனம்
பண்ணினார்கள்;ஒன்றும்வாய்க்காமற்போயிற்று.
12 அவர்களை இலக்காகவைத்து, உம்முடைய
அம்புகளை நாணேற்றி அவர்கள் முகத்திற்கு
நேரே விடுகிறீர்.
13 கர்த்தாவே, உம்முடைய பலத்திலே நீர்
எழுந்தருளும்; [11]அப்பொழுது உம்முடைய
வல்லமையைப் பாடிக் கீர்த்தனம்பண்ணு
வோம்.

22 (அகிலேத் ஷகார் என்னும் ராகத்தில் பாடி இராகத்
தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)
என் தேவனே, என் தேவனே, ஏன் என்
னைக் கைவிட்டீர்? [12]எனக்கு உதவிசெய்யா
மலும், நான் கதறிச் சொல்லும் வார்த்தைக
ளைக் கேளாமலும் ஏன் தூரமாயிருக்கிறீர்?
என் தேவனே நான் பகலிலே கூப்பிடுகி 2
றேன், உத்தரவு கொடீர்; இரவிலே கூப்பிடு
கிறேன், எனக்கு அமைதலில்லை.
இஸ்ரவேலின் துதிகளுக்குள் [13]வாசமாயி 3
ருக்கிற தேவரீரே பரிசுத்தர்.
எங்கள் பிதாக்கள் உம்மிடத்தில் நம்பிக்கை 4
வைத்தார்கள்; நம்பின அவர்களை நீர் விடுவித்
தீர்.
உம்மை நோக்கிக் கூப்பிட்டுத் தப்பினார்கள்; 5
உம்மை நம்பி வெட்கப்பட்டுப் போகாதிருந்
தார்கள்.
நானோ ஒரு *புழு, மனுஷனல்ல; மனுஷ 6
ரால் நிந்திக்கப்பட்டும், [14]ஜனங்களால் அவ
மதிக்கப்பட்டும் இருக்கிறேன்.
என்னைப் பார்க்கிறவர்களெல்லாரும் என் 7
னைப் பரியாசம்பண்ணி, [15]உதட்டைப் பிதுக்
கி, தலையைத் துலுக்கி,
கர்த்தர்மேல் நம்பிக்கையா யிருந்தானே, 8
அவர் இவனை விடுவிக்கட்டும்; [16]இவன்மேல்
பிரியமாயிருக்கிறாரே, இப்பொழுது இவனை
மீட்டுவிடட்டும் என்கிறார்கள்.
நீரே என்னைக்கர்ப்பத்திலிருந்து எடுத்தவர்; 9
என் தாயின் முலைப்பாலை நான் உண்கையில்
என்னை உம்முடையபேரில் நம்பிக்கையா
யிருக்கப்பண்ணினீர்.
கர்ப்பத்திலிருந்து வெளிப்பட்டபோதே 10
உமது சார்பில் விழுந்தேன்; [17]நான் என்
தாயின்வயிற்றில் இருந்ததுமுதல் நீர் என்
தேவனாயிருக்கிறீர்.
என்னை விட்டுத் தூரமாகாதேயும்; ஆபத்து 11
கிட்டியிருக்கிறது, சகாயரும் இல்லை.
அநேகம் காளைகள் என்னைச் சூழ்ந்திருக் 12
கிறது; [18]பாசான் தேசத்துப் பலத்த எருதுகள்
என்னை வளைந்துகொண்டது.
பீறி கெர்ச்சிக்கிற சிங்கத்தைப்போல், என் 13
மேல் தங்கள் வாயைத்திறக்கிறார்கள்.
தண்ணீரைப்போல ஊற்றுண்டேன்; என் 14
எலும்புகளெல்லாம் கட்டுவிட்டது, [19]என் இரு
தயம் மெழுகுபோலாகி, என் குடல்களின்
நடுவே உருகிற்று.
என் பெலன் ஓட்டைப்போல் [illegible]ந்தது; 15
என் நாவு மேல்வாயோடே [20]ஒட்டி[illegible]காண்
டது; என்னை மரணத்தூளிலே போடுகி
றீர்.
நாய்கள் [21]என்னைச்சூழ்ந்திருக்கிறது;பொல் 16
லாதவர்களின் கூட்டம் என்னை வளைந்து
கொண்டது; என் கைகளையும் என் கால்களை
யும் [22]உருவக் குத்தினார்கள்.
என் எலும்புகளையெல்லாம் நான் எண்ண 17
லாம்; [23]அவர்கள் என்னைநோக்கிப் பார்த்துக்
கொண்டிருக்கிறார்கள்.
என் வஸ்திரங்களைத் தங்களுக்குள்ளே பங் 18
கிட்டு, [24]என் உடையின்பேரில் சீட்டுப்போடு
கிறார்கள்.

1 எஸ்ற. 9. 23, 24
2 20. 4, 5
3 2 சாமு. 12. 30
4 2 சாமு. 7. 19
5 16. 11. அப். 2. 28
6 1 சாமு. 30. 6
7 ஆமோ. 9. 2, 3
8 மல். 4. 1
9 ஏசா. 26. 11
10 37. 28
11 யோபு 9. 19
12 மத். 27. 46. லூ. 24. 44
13 65. 1. உபா. 10. 21
* பூச்சி. ஏசா. 41. 14
14 ஏசா. 53. 3
15 புல. 1. 22. மத். 27. 39.ழ. மாற். 15. 29. ழ. லூ. 23. 35. ழ
16 91. 14
17 ஏசா. 46. 3. 49. 1
18 எசே. 39. 18
19 தானி. 5. 6
20 யோ. 19. 28
21 வெளி. 22. 15
22 யோ. 19. 23: 20. 25–27
23 ஏசா. 52. 14. லூ. 23. 27, 35
24 லூ. 23. 24. யோ. 19. 23, 24

19 ஆனாலும் கர்த்தாவே, நீர் எனக்குத் தூர
மாகாதேயும்; என் பெலனே, எனக்குச் சகா
யம்பண்ணத் தீவிரித்துக்கொள்ளும்.
20 என் ஆத்துமாவைப் பட்டயத்திற்கும்,
*எனக்கு அருமையானதை நாய்களின் துஷ்
டத்தனத்திற்கும் தப்புவியும்.
21 என்னைச் சிங்கத்தின் வாயிலிருந்து ரட்சி
யும்; [1]நான் காண்டாமிருகத்தின் கொம்புக
ளில் இருக்கும்போது எனக்குச் செவிகொடுத்
தருளினீர்.
22 உம்முடைய நாமத்தை என் சகோதரருக்கு
[2]அறிவித்து, சபைநடுவில் உம்மைத் துதிப்
பேன்.
23 கர்த்தருக்குப் பயப்படுகிறவர்களே, [3]அவ
ரைத்துதியுங்கள்; யாக்கோபின் சந்ததியாரே,
நீங்கள் எல்லாரும் அவரைக் கனம் பண்ணுங்
கள்; இஸ்ரவேலின் வம்சத்தாரே, நீங்கள் எல்
லாரும் அவர்பேரில் பயபக்தியாயிருங்கள்.
24 உபத்திரவப்பட்டவனுடைய உபத்திரவத்
தை அவர் அற்பமாயெண்ணாமலும் அருவருக்
காமலும், தம்முடைய முகத்தை அவனுக்கு
மறைக்காமலுமிருந்து, [4]தம்மைநோக்கி அவன்
கூப்பிடுகையில் அவனைக் கேட்டருளினார்.
25 மகாசபையிலே நான் உம்மைத்துதிப்பேன்;
[5]அவருக்குப் பயப்படுகிறவர்களுக்கு முன்
பாக என் பொருத்தனைகளைச் செலுத்துவேன்.
26 சாந்தகுணமுள்ளவர்கள் [6]புசித்துத் திருப்தி
யடைவார்கள்; கர்த்தரைத் தேடுகிறவர்கள்
அவரைத் துதிப்பார்கள்; உங்கள் இருதயம்
என்றென்றைக்கும் வாழும்.
27 பூமியின் எல்லைகளெல்லாம் †நினைவு
கூர்ந்து கர்த்தரிடத்தில் திரும்பும்; ஜாதிகளு
டைய சந்ததிகளெல்லாம் உமது சமுகத்தில்
தொழுதுகொள்ளும்.
28 ராஜ்யம் கர்த்தருடையது; [7]அவர் ஜாதிகளை
ஆளுகிறவர்.
29 பூமியின் செல்வவான்கள் யாவரும் புசித்
துப் பணிந்துகொள்வார்கள்; [8]புழுதியில் இறங்
குகிறவர்கள் யாவரும் அவருக்கு முன்பாக
வணங்குவார்கள்.
ஒருவனும் தன் ஆத்துமா அழியாதபடி அதைக்
காக்கக்கூடாதே.
30 ஒரு சந்ததி அவரைச் சேவிக்கும்; தலை
முறை தலைமுறையாக அது ஆண்டவருடைய
சந்ததி என்னப்படும்.
31 அவர்கள் வந்து: அவரே இவைகளைச் செய்
தார் என்று பிறக்கப்போகிற ஜனங்களுக்கு
[9]அவருடைய நீதியை அறிவிப்பார்கள்.

## 23

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தர் என் மேய்ப்பராயிருக்கிறார்;
[10]நான் ‡தாழ்ச்சியடையேன்.
2 அவர் என்னைப் புல்லுள்ள இடங்களில்
மேய்த்து, [11]அமர்ந்த தண்ணீர்கள் அண்டை
யில் என்னைக்கொண்டுபோய் விடுகிறார்.
3 அவர் என் ஆத்துமாவைத் தேற்றி, [12]தம்
முடைய நாமத்தினிமித்தம் என்னை நீதியின்
பாதைகளில் நடத்துகிறார்.

* என் ஆருயிரை.
1 2 தீமோ. 4. 17
2 40. 9. எபி. 2. 11, 12
3 115. 11, 13
4 எபி. 5. 7
5 66. 13, 16
6 மத். 5. 5
† புத்திதெளிந்து
7 மத். 6. 13
8 ஏசா. 26. 19. பிலி. 2. 10
9 ஏசா. 60. 3. ரோ. 3. 21–26
10 ஏசா. 40. 11. யோ. 10. 11, 14
‡ எனக்கு ஒரு குறைவுமில்லை. 84. 11 உபா. 2. 7–9. பிலி. 4–19
11 எசே. 34. 14. வெளி. 7. 17
12 நீதி. 8. 20
13 ஏசா. 43. 2
14 104. 15
15 யோ. 8. 35. 1 தீமோ. 3. 15
16 1 கொ. 10. 26, 28
17 ஆதி. 1. 9. 2 பே. 3. 5
18 சங். 15
19 மத். 5. 8
20 ஏசா. 33. 15, 16
§ உம்முடைய சமுகத்தை நாடுகிற யாக்கோபின் தேவனே.
21 ஏசா. 26. 2. ஆகாய் 2. 7. மல். 3. 1. 1 கொ. 2. 8
22 ஏசா. 49. 23
23 ஏசா. 2. 3. எரே. 50. 5

நான் மரண இருளின் பள்ளத்தாக்கிலே 4
நடந்தாலும் பொல்லாப்புக்குப் பயப்படேன்;
[13]தேவரீர் என்னோடேகூட இருக்கிறீர்; உமது
கோலும் உமது தடியும் என்னைத் தேற்றும்.
என் சத்துருக்களுக்கு முன்பாக [14]நீர் 5
எனக்கு ஒரு பந்தியை ஆயத்தப்படுத்தி, என்
தலையை எண்ணெயால் அபிஷேகம் பண்ணு
கிறீர், என் பாத்திரம் நிரம்பி வழிகிறது.
என் ஜீவனுள்ள நாளெல்லாம் நன்மையும் 6
கிருபையும் என்னைத் தொடரும்; நான் கர்த்
தருடைய வீட்டிலே [15]நீடித்த நாட்களாய்
நிலைத்திருப்பேன்.

## 24

(தாவீதின் சங்கீதம்.)

பூமியும் அதின் நிறைவும், [16]உலகமும் அதி
லுள்ள குடிகளும் கர்த்தருடையது.
அவரே அதைக் கடல்களுக்கு மேலாக அஸ் 2
திபாரப்படுத்தி; [17]அதை நதிகளுக்கு மேலாக
ஸ்தாபித்தார்.
யார் கர்த்தருடைய பர்வதத்தில் ஏறுவான்? 3
[18]யார் அவருடைய பரிசுத்த ஸ்தலத்தில் நிலைத்
திருப்பான்?
கைகளில் சுத்தமுள்ளவனும் இருதயத்தில் 4
மாசில்லாதவனுமாயிருந்து, [19]தன் ஆத்துமா
வை மாயைக்கு ஒப்புக்கொடாமலும், கபடாய்
ஆணையிடாமலும் இருக்கிறவனே.
அவன் கர்த்தரால் ஆசீர்வாதத்தையும், [20]தன் 5
ரட்சிப்பின் தேவனால் நீதியையும் பெறுவான்.
இதுவே அவரைத் தேடி விசாரித்து, §அவ 6
ருடைய சமுகத்தை நாடுகிற யாக்கோபு என்
னும் சந்ததி.
வாசல்களே, உங்கள் தலைகளை உயர்த்துங் 7
கள்; அநாதி கதவுகளே, உயருங்கள்; [21]மகி
மையின் ராஜா உட்பிரவேசிப்பார்.
யார் இந்த மகிமையின் ராஜா? அவர் வல்ல 8
மையும் பராக்கிரமமுமுள்ள கர்த்தர்; அவர்
யுத்தத்தில் பராக்கிரமமுள்ள கர்த்தராமே.
வாசல்களே, உங்கள் தலைகளை உயர்த்துங் 9
கள்; அநாதி கதவுகளே, உயருங்கள்; மகிமை
யின் ராஜா உட்பிரவேசிப்பார்.
யார் இந்த மகிமையின் ராஜா? அவர் சேனை 10
களின் கர்த்தரானவர்; அவரே மகிமையின்
ராஜா.

## 25

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்மிடத்தில் என் ஆத்து
மாவை உயர்த்துகிறேன்.
என் தேவனே உம்மை நம்பியிருக்கிறேன், 2
நான் வெட்கப்பட்டுப்போகாதபடி செய்யும்;
[22]என் சத்துருக்கள் என்னை மேற்கொண்டு
மகிழவிடாதேயும்.
உம்மை நோக்கிக் காத்திருக்கிற ஒருவரும் 3
வெட்கப்பட்டுப்போகாதபடி செய்யும்; முகாந்
தரமில்லாமல் துரோகம் பண்ணுகிறவர்களே
வெட்கப்பட்டுப்போவார்களாக.
கர்த்தாவே, உம்முடைய வழிகளை எனக் 4
குத் தெரிவியும்; [23]உம்முடைய பாதைகளை
எனக்குப் போதித்தருளும்.

5 உம்முடைய சத்தியத்திலே என்னை நடத்தி,
என்னைப் போதித்தருளும்; நீரே என் ரட்சிப்
பின் தேவன், உம்மை நோக்கி நாள்முழுதும்
காத்திருக்கிறேன்.
6 கர்த்தாவே, உம்முடைய இரக்கங்களையும்
உம்முடைய காருணியங்களையும் நினைத்தரு
ளும், [1]அவைகள் அநாதிகாலமுதல் இருக்
கிறதே.
7 என் இளவயதின் பாவங்களையும் என் மீறு
தல்களையும் நினையாதிரும்; [2]கர்த்தாவே, உம்
முடைய தயவினிமித்தம் என்னை உமது கிரு
பையின்படியே [3]நினைத்தருளும்.
8 கர்த்தர் நல்லவரும் உத்தமருமாயிருக்கிறார்;
ஆகையால் பாவிகளுக்கு வழியைத் தெரிவிக்
கிறார்.
9 சாந்தகுணமுள்ளவர்களை நியாயத்திலே
நடத்தி, சாந்தகுணமுள்ளவர்களுக்குத் தமது
வழியைப் போதிக்கிறார்.
10 கர்த்தருடைய உடன்படிக்கையையும் அவ
ருடைய சாட்சிகளையும் கைக்கொள்கிறவர்க
ளுக்கு, [4]அவருடைய பாதைகளெல்லாம் கிரு
பையும் சத்தியமுமானவைகள்.
11 கர்த்தாவே, என் அக்கிரமம் பெரிது; [5]உம்
முடைய நாமத்தினிமித்தம் அதை மன்னித்
தருளும்.
12 கர்த்தருக்குப் பயப்படுகிற மனுஷன் எவ
னோ [6]அவனுக்குத் தாம் தெரிந்துகொள்ளும்
வழியைப் போதிப்பார்.
13 அவன் ஆத்துமா நன்மையில் தங்கும்; அவன்
சந்ததி பூமியைச் சுதந்தரித்துக்கொள்ளும்.
14 கர்த்தருடைய இரகசியம் அவருக்குப் பயந்
தவர்களிடத்தில் இருக்கிறது; [7]அவர்களுக்குத்
தம்முடைய உடன்படிக்கையைத் தெரியப்
படுத்துவார்.
15 என் கண்கள் எப்போதும் கர்த்தரை நோக்
கிக்கொண்டிருக்கிறது; அவரே என் கால்
களை வலைக்கு நீங்கலாக்கி விடுவார்.
16 என்மேல் நோக்கமாகி, எனக்கு இரங்கும்;
[8]நான் தனித்தவனும் சிறுமைப்படுகிறவனுமா
யிருக்கிறேன்.
17 என் இருதயத்தின் வியாகுலங்கள் பெரு
கியிருக்கிறது; [9]என் இடுக்கண்களுக்கு என்னை
நீங்கலாக்கிவிடும்.
18 என் துன்பத்தையும் என் வருத்தத்தையும்
பார்த்து, என் பாவங்களையெல்லாம் மன்னித்
தருளும்.
19 என் சத்துருக்களைப் பாரும்; அவர்கள்
பெருகியிருந்து, உக்கிரபகையாய் என்னைப்
பகைக்கிறார்கள்.
20 என் ஆத்துமாவைக் காப்பாற்றி என்னை
விடுவியும்; நான் வெட்கப்பட்டுப் போகாதபடி
செய்யும்; உம்மை நம்பியிருக்கிறேன்.
21 உத்தமமும் நேர்மையும் என்னைக் காக்கக்
கடவது; நான் உமக்குக் காத்திருக்கிறேன்.
22 தேவனே, இஸ்ரவேலை *அவனுடைய
எல்லா இக்கட்டுகளுக்கும் நீங்கலாக்கி [10]மீட்டு
விடும்.

[1] ஏசா. 63. 15
[2] யோபு 13. 26
[3] 51. 1
[4] ஓசி. 14. 9
[5] எசே. 36. 22, 32. சோ. 5. 15–21. 1 யோ. 2. 12
[6] 37. 23
[7] நீதி. 3. 22. யோ. 7. 17. எபே. 1. 9, 18
[8] மீகா. 7. 19
[9] ஆப. 3. 17. 19
* அதின்.
[10] 130. 8
[11] 139. 23. சகரி. 13. 9
[12] 1. 1
† என் குற்றமில்லாமை விளங்க யாத். 30. 19. 20. மத். 27. 24. 1 தீமோ. 2. 8
[13] 27. 4. 84. 1 2
[14] ஏசா. 33. 15
[15] ஏசா. 60. 19. 20. மீகா. 7. 7, 8
[16] 14. 4
[17] 63. 2: 65. 4. லூ. 2. 27

(தாவீதின் சங்கீதம்.)

## 26

கர்த்தாவே, என்னை நியாயம் விசாரியும்,
நான் என் உத்தமத்திலே நடக்கிறேன்; நான்
கர்த்தரை நம்பியிருக்கிறேன், ஆகையால் நான்
தள்ளாடுவதில்லை.
கர்த்தாவே, என்னைப் பரீட்சித்து, என் 2
னைச் சோதித்துப்பாரும்; [11]என் உள்ளிந்திரி
யங்களையும் என் இருதயத்தையும் புடமிட்டுப்
பாரும்.
உம்முடைய கிருபை என் கண்களுக்கு 3
முன்பாக இருக்கிறது; உம்முடைய சத்தியத்
திலே நடந்துகொள்ளுகிறேன்.
வீணரோடே நான் உட்காரவில்லை, [12]வஞ் 4
சகரிடத்தில் நான் சேருவதில்லை.
பொல்லாதவர்களின் கூட்டத்தைப் பகைக் 5
கிறேன்; துன்மார்க்கரோடே உட்காரேன்.
கர்த்தாவே, நான் துதியின் சத்தத்தை 6
தொனிக்கப்பண்ணி, உம்முடைய அதிசயங்
களை யெல்லாம் விவரிப்பதற்காக,
நான் †குற்றமில்லாமையிலே என் கைக 7
ளைக்கழுவி, உம்முடைய பீடத்தைச் சுற்றி
வருகிறேன்.
கர்த்தாவே, உமது ஆலயமாகிய வாசஸ் 8
தலத்தையும், [13]உமது மகிமை தங்கிய ஸ்தானத்
தையும் வாஞ்சிக்கிறேன்.
என் ஆத்துமாவைப் பாவிகளோடும், என் 9
ஜீவனை ரத்தப் பிரியரோடுங்கூட வாரிக்கொள்
ளாதேயும்.
அவர்கள் கைகளிலே தீவினை யிருக்கிறது; 10
[14]அவர்கள் வலதுகை பரிதானங்களால் நிறைந்
திருக்கிறது.
நானோ என் உத்தமத்திலே நடப்பேன்; 11
என்னை மீட்டுக்கொண்டு என்மேல் இரக்கமா
யிரும்.
என் கால் செம்மையான இடத்திலே நிற் 12
கிறது; சபைகளிலே நான் கர்த்தரைத் துதிப்
பேன்.

(தாவீதின் சங்கீதம்.)

## 27

கர்த்தர் என் [15]வெளிச்சமும் என் ரட்சிப்
புமானவர், யாருக்குப் பயப்படுவேன்? கர்த்
தர் என் ஜீவனின் பெலனானவர், யாருக்கு
அஞ்சுவேன்?
என் சத்துருக்களும் என் பகைஞருமாகிய 2
பொல்லாதவர்கள் என் மாம்சத்தைப் பட்
சிக்க, [16]என்னை நெருக்குகையில் அவர்களே
இடறி விழுந்தார்கள்.
எனக்கு விரோதமாக ஒரு பாளயமிறங் 3
கினாலும், என் இருதயம் பயப்படாது; என்
மேல் யுத்தம் எழும்பினாலும், இதிலே நான்
நம்பிக்கையாயிருப்பேன்.
கர்த்தரிடத்தில் ஒன்றை நான் கேட்டேன், 4
அதையே நாடுவேன்; நான் கர்த்தருடைய
மகிமையைப் பார்க்கும்படியாகவும், [17]அவரு
டைய ஆலயத்தில் ஆராய்ச்சி செய்யும்படியா
கவும், நான் என் ஜீவனுள்ள நாளெல்லாம்
கர்த்தருடைய ஆலயத்தில் தங்கியிருப்பதையே
நாடுவேன்.

5 தீங்குநாளில் அவர் என்னைத் தம்முடைய
கூடாரத்தில் மறைத்து; [1]என்னைத் தமது
கூடாரமறைவிலே ஒளித்துவைத்து, என்னைக்
கன்மலையின்மேல் உயர்த்துவார்.
6 இப்பொழுது என் தலை என்னைச்சுற்றிலும்
இருக்கிற என் சத்துருக்களுக்குமேலாக உயர்த்
தப்படும்; அதினிமித்தம் அவருடைய கூடா
ரத்திலே நான் ஆனந்த பலிகளையிட்டு, கர்த்த
ரைப் பாடி, அவரைக் கீர்த்தனம் பண்ணு
வேன்.
7 கர்த்தாவே, நான் கூப்பிடுகிற சத்தத்தை
நீர் கேட்டு, எனக்கு இரங்கி, எனக்கு உத்த
ரவு அருளிச்செய்யும்.
8 என் முகத்தைத் தேடுங்கள் என்று சொன்
னீரே, [2]உம்முடைய முகத்தையே தேடுவேன்
கர்த்தாவே, என்று என் இருதயம் உம்மிடத்
தில் சொல்லிற்று.
9 உமது முகத்தை எனக்கு மறையாதேயும்;
நீர் கோபத்துடன் உமது அடியேனை விலக்கிப்
போடாதேயும்; நீரே எனக்குச் சகாயர்; என்
ரட்சிப்பின் தேவனே, என்னை நெகிழவிடா
மலும் என்னைக் கைவிடாமலும் இரும்.
10 என் தகப்பனும் என் தாயும் என்னைக்
கைவிட்டாலும், [3]கர்த்தர் என்னைச் சேர்த்துக்
கொள்ளுவார்.
11 கர்த்தாவே, உமது வழியை எனக்குப்
போதித்து, என் சத்துருக்களினிமித்தம் செவ்
வையான பாதையில் என்னை நடத்தும்.
12 என் சத்துருக்களின் இஷ்டத்துக்கு என்னை
ஒப்புக்கொடாதேயும்; [4]பொய்ச்சாட்சிகளும்
ஆக்கிரமித்துச் சீறுகிறவர்களும் எனக்கு
விரோதமாய் எழும்பியிருக்கிறார்கள்.
13 நானோ, ஜீவனுள்ளோர் தேசத்திலே கர்த்
தருடைய நன்மையைக் காண்பேன் என்று
விசுவாசியாதிருந்தால் [5]கெட்டுப்போயிருப்
பேன்.
14 கர்த்தருக்குக் காத்திரு; [6]அவர் உன் இரு
தயத்தை ஸ்திரப்படுத்துவார்; திடமனதாயி
ருந்து, கர்த்தருக்கே காத்திரு.

## 28

(தாவீதின் சங்கீதம்.)

என் கன்மலையாகிய கர்த்தாவே, உம்மை
நோக்கிக் கூப்பிடுகிறேன்; நீர் கேளாதவர்
போல மவுனமாயிராதேயும்; நீர்மவுனமாயிருந்
தால் நான் குழியில் இறங்குகிறவர்களுக்கு
ஒப்பாவேன்.
2 நான் உம்மை நோக்கிச் சத்தமிட்டு, உம்மு
டைய பரிசுத்த சந்நிதிக்கு நேராகக் கையெ
டுக்கையில், [7]என் விண்ணப்பங்களின் சத்தத்
தைக் கேட்டருளும்
3 அயலானுக்குச் சமாதான வாழ்த்துதலைச்
சொல்லியும், தங்கள் இருதயங்களில் பொல்
லாப்பை வைத்திருக்கிற துன்மார்க்கரோடும்
அக்கிரமக்காரரோடும் என்னை [8]வாரிக்கொள்
ளாதேயும்.
4 அவர்களுடைய கிரியைகளுக்கும் அவர்
களுடைய நடத்தைகளின் பொல்லாங்குக்கும்
தக்கதாக அவர்களுக்குச் செய்யும்; [9]அவர்கள்
கைகளின் செய்கைக்குத் தக்கதாக அவர்க
ளுக்கு அளியும், அவர்களுக்குச் சரிக்குச் சரிக்
கட்டும்.
அவர்கள் கர்த்தருடைய செய்கைகளையும் 5
அவர் கரத்தின் கிரியைகளையும் கவனியாதபடி
யால், [10]அவர்களை இடித்துப் போடுவார், அவர்
களைக் கட்டமாட்டார்.
கர்த்தருக்கு ஸ்தோத்திரம்; அவர் என் விண் 6
ணப்பங்களின் சத்தத்தைக் கேட்டார்.
கர்த்தர் என் பெலனும் என் கேடகமுமாயி 7
ருக்கிறார்; என் இருதயம் அவரை நம்பியிருந்
தது; நான் சகாயம் பெற்றேன்; ஆகையால்
என் இருதயம் களிகூருகிறது; என் பாட்டி
னால் அவரைத் துதிப்பேன்.
கர்த்தர் அவர்களுடைய பெலன்; அவரே 8
தாம் அபிஷேகம் பண்ணினவனுக்குஅரணான
அடைக்கலமானவர்.
தேவரீர் உமது ஜனத்தை ரட்சித்து, உமது 9
சுதந்தரத்தை ஆசீர்வதியும்; [11]அவர்களைப் போ
ஷித்து, அவர்களை என்றென்றைக்கும் உயர்த்
தியருளும்.

## 29

(தாவீதின் சங்கீதம்.)

பலவான்களின் புத்திரரே, கர்த்தருக்கு மகி
மையையும் வல்லமையையும் செலுத்துங்கள்;
[12]கர்த்தருக்கே அதைச் செலுத்துங்கள்.
கர்த்தருடைய நாமத்திற்குரிய மகிமையை 2
அவருக்குச் செலுத்துங்கள்; [13]பரிசுத்த அலங்
காரத்துடனே கர்த்தரைத் தொழுதுகொள்
ளுங்கள்.
கர்த்தருடைய சத்தம் தண்ணீர்களின்மேல் 3
தொனிக்கிறது; [14]மகிமையுள்ள தேவன் முழங்
குகிறார்; கர்த்தர் திரளான தண்ணீர்களின்
மேல் இருக்கிறார்.
கர்த்தருடைய சத்தம் வல்லமையுள்ளது; 4
கர்த்தருடைய சத்தம் மகத்துவமுள்ளது.
கர்த்தருடையசத்தம் கேதுருமரங்களைமுறிக் 5
கிறது; [15]கர்த்தர் லீபனோனின் கேதுருமரங்
களை முறிக்கிறார்.
அவைகளைக் கன்றுக்குட்டிகளைப் போல 6
வும், லீபனோனையும் [16]சீரியோனையும் காண்டா
மிருகக் குட்டிகளைப்போலவும் துள்ளப்பண்
ணுகிறார்.
கர்த்தருடைய சத்தம் அக்கினிஜுவாலை 7
களைப் பிளக்கும்.
கர்த்தருடைய சத்தம் வனாந்தரத்தை அதிரப் 8
பண்ணும்; கர்த்தர் [17]காதேஸ் வனாந்தரத்தை
அதிரப்பண்ணுகிறார்.
கர்த்தருடையசத்தம் பெண்மான்களை ஈனும் 9
படி செய்து, [18]காடுகளை வெளியாக்கும்; அவ
ருடைய ஆலயத்திலுள்ள யாவரும் [19]அவரு
டைய மகிமையைப் பிரஸ்தாபிக்கிறார்கள்.
கர்த்தர் *ஜலப்பிரவாகத்தின்மேல் உட்கார்ந் 10
திருக்கிறார்; [20]கர்த்தர் என்றென்றைக்கும்
ராஜாவாக வீற்றிருக்கிறார்.
கர்த்தர் தமது ஜனத்திற்குப் பெலன் கொ 11
டுப்பார்; [21]கர்த்தர் தமது ஜனத்திற்குச் சமாதா
னம் அருளி, [22]அவர்களை ஆசீர்வதிப்பார்.

1 ஏசா. 4. 5, 6
2 24. 6
3 ஏசா. 40. 15
4 35. 25. அப். 9. 1
5 எபே. 2. 8
6 ஏசா. 25. 9. ஆப. 2. 3
7 138. 2
8 125. 5. எரே. 9. 8
9 2 தீமோ. 14. 4. வெளி. 18. 6
10 யோபு 34. 26, 27. ஏசா. 5. 12
11 1 இரா. 8.51, 53
12 96. 7–9. 1 நாளா. 16. 28, 29
13 90. 17. 2 நாளா. 20. 21
14 யோபு 37. 4, 5
15 ஏசா. 2. 13
16 உபா. 3. 9
17 எண். 13. 26
18 யோபு 39. 1–3
19 63. 2
* ஆதி. 8. 1, 2
20 2. 6–9
21 ஏசா. 40.29-31
22 85. 8, 10

## 30

(கிரகப் பிரதிஷ்டையின் பாட்டாகிய
தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, என் சத்துருக்கள் என்னை
மேற்கொண்டு மகிழவொட்டாமல், நீர் என்
னைக் கைதூக்கி எடுத்தபடியினால், நான் உம்
மைப் போற்றுவேன்.
2 என் தேவனாகிய கர்த்தாவே, உம்மை
நோக்கிக் கூப்பிட்டேன்,
3 [1]என்னை நீர் குணமாக்கினீர் கர்த்தாவே,
நீர் என் ஆத்துமாவைப் பாதாளத்திலிருந்து
ஏறப்பண்ணி, [2]நான் குழியில் இறங்காதபடி
என்னை உயிரோடே காத்தீர்.
4 கர்த்தருடைய பரிசுத்தவான்களே, அவ
ரைக் கீர்த்தனம்பண்ணி, அவருடைய *பரி
சுத்தத்தின் நினைவுகூருதலைக் கொண்டாடுங்
கள்.
5 அவருடைய கோபம் ஒரு நிமிஷம், அவ
ருடைய தயவோ நீடியவாழ்வு; [3]சாயங்காலத்
தில் அழுகை தங்கும் விடியற்காலத்திலே
களிப்புண்டாகும்.
6 நான் ஒருக்காலும் அசைக்கப்படுவதில்லை
யென்று, [4]என் வாழ்விலே சொன்னேன்.
7 கர்த்தாவே, உம்முடைய தயவினால் நீர்
என் பர்வதத்தைத் திடமாய் நிற்கப்பண்ணி
யிருந்தீர்; [5]உமது முகத்தை நீர் மறைத்துக்
கொண்டபோதோ நான் கலங்கினவனானேன்.
8 நான் குழியில் இறங்குகையில் என் இரத்
தத்தால், என்ன லாபமுண்டு? புழுதி உம்மைத்
துதித்து, உமது சத்தியத்தை அறிவிக்குமோ?
9 கர்த்தாவே, நீர் எனக்குச் செவிகொடுத்து
என்மேல் இரக்கமாயிரும்; கர்த்தாவே, நீர்
எனக்குச் சகாயராயிரும், என்று சொல்லி;
10 கர்த்தாவே, உம்மை நோக்கிக் கூப்பிட்
டேன்; கர்த்தரை நோக்கிக் கெஞ்சினேன்.
11 என் புலம்பலை [6]ஆனந்தக்களிப்பாக மாறப்
பண்ணினீர்; †என் மகிமை அமர்ந்திராமல்
உம்மைக் கீர்த்தனம்பண்ணும்படியாக நீர் என்
இரட்டைக் களைந்துபோட்டு, மகிழ்ச்சியென்
னும் கட்டினால் என்னை இடைகட்டினீர்.
12 என் தேவனாகிய கர்த்தாவே, உம்மை
என்றென்றைக்கும் துதிப்பேன்.

## 31

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்மை நம்பியிருக்கிறேன்;
[7]நான் ஒருக்காலும் வெட்கமடையாதபடிசெய்
யும்; உமது நீதியினிமித்தம் [8]என்னை விடு
வியும்.
2 உமது செவியை எனக்குச் சாய்த்து, சீக்
கிரமாய் என்னைத் தப்புவியும்; நீர் எனக்குப்
பலத்த துருகமும், எனக்கு அடைக்கலமான
அரணுமாயிரும்.
3 என் கன்மலையும் என் கோட்டையும் நீரே;
உமது நாமத்தினிமித்தம் எனக்கு வழிகாட்டி,
என்னை நடத்தியருளும்.
4 அவர்கள் எனக்கு மறைவாய் வைத்த
வலைக்கு என்னை நீங்கலாக்கிவிடும்; தேவரீரே
எனக்கு அரண்.
உமது கையில் என் ஆவியை ஒப்புவிக்கி 5
றேன்; [9]சத்தியபரனாகிய கர்த்தாவே, நீர்
என்னை மீட்டுக்கொண்டீர்.
வீண் ‡மாயைகளைப் பற்றிக்கொள்ளுகிற 6
வர்களை நான் வெறுத்து, கர்த்தரையே நம்பி
யிருக்கிறேன்.
உமது கிருபையிலே களிகூர்ந்து மகிழு 7
வேன்; நீர் என் உபத்திரவத்தைப் பார்த்து,
என் ஆத்தும வியாகுலங்களை [10]அறிந்திருக்
கிறீர்.
சத்துருவின் கையில் என்னை ஒப்புக்கொ 8
டாமல், [11]என் பாதங்களை விசாலத்திலே
நிறுத்தினீர்.
எனக்கு இரங்கும் கர்த்தாவே, நான் நெ 9
ருக்கப்படுகிறேன், துக்கத்தினால் என் [12]கண்
ணும் என் ஆத்துமாவும் என் வயிறுங்கூடக்
கருகிப்போயிற்று.
என் பிராணன் சஞ்சலத்தினாலும், என் 10
வருஷங்கள் தவிப்பினாலும் கழிந்துபோ
யிற்று; என் அக்கிரமத்தினாலே என் பெலன்
குறைந்து, என் எலும்புகள் உலர்ந்துபோயிற்று.
என் சத்துருக்களாகிய யாவர்நிமித்தமும், 11
நான் என் அயலாருக்கு நிந்தையும், [13]எனக்கு
அறிமுகமானவர்களுக்கு அருக்களிப்புமா
னேன்; வீதியிலே என்னைக் கண்டவர்கள்
எனக்கு விலகி ஓடிப்போனார்கள்.
செத்தவனைப்போல எல்லாராலும் முழு 12
வதும் மறக்கப்பட்டேன்; [14]உடைந்த பாத்தி
ரத்தைப்போலானேன்.
அநேகர் சொல்லும் அவதூறைக் கேட் 13
டேன்; எனக்கு விரோதமாக அவர்கள் ஏக
மாய் ஆலோசனைபண்ணுகிறதினால் திகில்
என்னைச் சூழ்ந்துகொண்டது; என் பிரா
ணனை வாங்கத் தேடுகிறார்கள்.
நானோ, கர்த்தாவே, உம்மை நம்பியிருக் 14
கிறேன்; நீரே என் தேவன் என்று சொன்
னேன்.
என் §காலங்கள் உமது கரத்திலிருக்கிறது; 15
என் சத்துருக்களின் கைக்கும் என்னைத் துன்
பப்படுத்துகிறவர்களின் கைக்கும் என்னைத்
தப்புவியும்.
நீர் உமது முகத்தை உமது ஊழியக்காரன் 16
மேல் பிரகாசிக்கப்பண்ணி, [15]உமது கிருபை
யினாலே என்னை ரட்சியும்.
கர்த்தாவே, உம்மை நோக்கிக் கூப்பிட் 17
டேன்; நான் வெட்கப்பட்டுப்போகாதபடி
செய்யும்; துன்மார்க்கர் வெட்கப்பட்டுப் பாதா
ளத்தில் மவுனமாயிருக்கட்டும்.
நீதிமானுக்கு விரோதமாய்ப் பெருமையோ 18
டும் இகழ்ச்சியோடும் கடினமாய்ப் பேசுகிற
பொய் உதடுகள் கட்டப்பட்டுப்போவதாக.
உமக்குப் பயந்தவர்களுக்கும், மனுபுத்திர 19
ருக்கு முன்பாக உம்மை நம்புகிறவர்களுக்கும்,
நீர் உண்டுபண்ணிவைத்திருக்கிற உம்முடைய
நன்மை [16]எவ்வளவு பெரிதாயிருக்கிறது!
மனுஷருடைய அகங்காரத்துக்கு அவர்களை 20
உமது சமுகத்தின் மறைவிலே மறைத்து, நா

[1] 6. 2. 103. 3
[2] எசா. 38. 17
* பரிசுத்த நாமத்தை. பாத். 3. 15. எசா. 26. 8
[3] 2 கொ. 4. 17
[4] யோபு 29. 18
[5] 18. 35, 36
[6] 126. 12. எசா. 61. 3. எரே. 31. 4
† என் நாவு, அல்லது ஆத்துமா. 16. 9. ஆதி. 45. 6
[7] 71. 1–4
[8] 143. 1
[9] லூ. 23 46. அப். 7. 59
‡ விக்கிரகங்களை, யோனா. 2. 8
[10] 142. 3
[11] 18. 19
[12] 6. 7
[13] யோபு 19. 13. எசா. 53. 4
[14] 88. 4, 5
§ சகதுக்கங்கள்.
[15] எண். 6. 25: 26
[16] எசா. 64. 4. 1 கொ. 2. 9

வுகளின் சண்டைக்கு அவர்களை விலக்கி,
[1]உமது கூடாரத்திலே ஒளித்துவைத்துக் காப்
பாற்றுகிறீர்.
21 கர்த்தர் அரணான நகரத்தில் எனக்குத்
தமது கிருபையை அதிசயமாய் விளங்கப்
பண்ணினபடியால், [2]அவருக்கு ஸ்தோத்
திரம்.
22 உம்முடைய கண்களுக்குமுன்பாக இராத
படிக்கு வெட்டுண்டேன் [3]என்று நான் என்
மனக்கலக்கத்திலே சொன்னேன்; ஆனாலும்
நான் உம்மை நோக்கிக் கூப்பிட்டபோது,
[4]என் விண்ணப்பங்களின் சத்தத்தைக்
கேட்டீர்.
23 கர்த்தருடைய பரிசுத்தவான்களே, [5]நீங்க
ளெல்லாரும் அவரில் அன்புகூருங்கள்; உண்
மையானவனைக் கர்த்தர் தற்காத்து, இடும்பு
செய்கிறவனுக்குப் பூரணமாய்ப் பதிலளிப்
பார்.
24 கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்களே, நீங்க
ளெல்லாரும் திடமனதாயிருங்கள், [6]அவர்
உங்கள் இருதயத்தை ஸ்திரப்படுத்துவார்.

**32** (மஸ்கீல் என்னும் தாவீதின் போதக சங்கீதம்.)

எவனுடைய மீறுதல் மன்னிக்கப்பட்ட
தோ, [7]எவனுடைய பாவம் மூடப்பட்டதோ,
அவன் பாக்கியவான்.
2 எவனுடைய அக்கிரமத்தைக் கர்த்தர் [8]எண்
ணாதிருக்கிறாரோ, எவனுடைய ஆவியில்
[9]கபடமில்லாதிருக்கிறதோ, அவன் பாக்கிய
வான்.
3 நான் அடக்கிவைத்தமட்டும், நித்தம் என்
கதறுதலினாலே என் எலும்புகள் உலர்ந்து
போயிற்று.
4 இரவும் பகலும் என்மேல் உம்முடைய
கை பாரமாயிருந்ததினால், [10]என் சாரம்
உஷ்ணகால வறட்சிபோலவறண்டுபோயிற்று.
5 நான் என் அக்கிரமத்தை மறைக்காமல், என்
பாவத்தை உமக்கு அறிவித்தேன்; [11]என் மீறு
தல்களைக் கர்த்தருக்கு அறிக்கையிடுவேன் என்
றேன்; தேவரீர் என் பாவத்தின் *தோஷத்தை
மன்னித்தீர்.
6 இதற்காகச் சகாயங்கிடைக்குங் காலத்தில்
பக்தியுள்ளவனெவனும் உம்மை நோக்கி விண்
ணப்பஞ்செய்வான்; [12]அப்பொழுது மிகுந்த
ஜலப்பிரவாகம் வந்தாலும் அது அவனை அணு
காது.
7 [13]நீர் எனக்கு மறைவிடமாயிருக்கிறீர்;
என்னை நீர் இக்கட்டுக்கு விலக்கிக் காத்து,
இரட்சணியப் பாடல்கள் [14]என்னைச் சூழ்ந்து
கொள்ளும்படி செய்வீர்.
8 நான் உனக்குப் போதித்து, நீ நடக்கவேண்
டிய வழியை உனக்குக் காட்டுவேன்; உன்
மேல் என் கண்ணை †வைத்து, உனக்கு
ஆலோசனை சொல்லுவேன்.
9 வாரினாலும் கடிவாளத்தினாலும் வாய் [15]கட்
டப்பட்டாலொழிய, உன் கிட்டச் சேராத
[16]புத்தியில்லாக் குதிரையைப்போலவும் கோ

[1] யோபு 5. 21
[2] 1 சாமு. 23. 7
[3] யோபு 35. 14
[4] ஏசா. 38. 11, 12. யோனா. 2. 4
[5] 34. 9
[6] 27. 14
[7] ரோ. 4. 6–8
[8] 2 கொ. 5. 19
[9] யோ. 1. 47
[10] 1 சாமு. 5. 6, 11
[11] 2 சாமு. 12. 13. நீதி. 28. 13. ஏசா. 65. 24. லூ. 15. 18, 21. 1 யோ. 1. 9
* கொடுமையை.
[12] ஏசா. 55. 6. 1 தீமோ 1. 16
[13] 143. 9. ஏசா. 43. 2
[14] யாத். 15. 1. வெளி. 15. 2, 3
† உன்னைக் கடாட்சித்து. ஏசா. 30. 21
[15] நீதி. 26. 3. யாக். 3. 3
[16] யோபு 35. 11
[17] 16. 4. 1 தீமோ. 6. 10. 1 பே. 2. 3
[18] 97. 12. பிலி. 4. 4
[19] 144. 9. வெளி. 5. 9
[20] 119. 64
[21] ஆதி. 2. 1. யோ. 1. 1–3. எபி. 11. 3
[22] யோபு 26. 10. 38. 8–10
[23] எரே. 10. 7
[24] ஆதி. 1. 3.
[25] ஏசா. 44. 25
[26] ஏசா. 46. 10
[27] 65. 4: 144. 15
[28] நீதி. 15. 3
[29] 44. 3–7

வேறு கழுதையைப்போலவும் இருக்கவேண்
டாம்.
துன்மார்க்கனுக்கு அநேக வேதனைக 10
ளுண்டு; [17]கர்த்தரை நம்பியிருக்கிறவனையோ
கிருபை சூழ்ந்து கொள்ளும்.
நீதிமான்களே, கர்த்தருக்குள் மகிழ்ந்து களி 11
கூருங்கள்; செம்மையான இருதயமுள்ளவர்
களே, நீங்கள் எல்லாரும் ஆனந்த முழக்க
மிடுங்கள்.

நீதிமான்களே, [18]கர்த்தருக்குள் களிகூருங் **33**
கள்; துதி செய்வது செம்மையானவர்களுக்
குத் தகும்.
சுரமண்டலத்தினால் கர்த்தரைத் துதித்து, 2
பத்துநரம்பு வீணையினாலும் அவரைக் கீர்த்த
னம் பண்ணுங்கள்.
அவருக்குப் புதுப்பாட்டைப் பாடுங்கள்; 3
[19]ஆனந்த சத்தத்தோடே வாத்தியங்களை நேர்த்
தியாய் வாசியுங்கள்.
கர்த்தருடைய வார்த்தை உத்தமமும், அவ 4
ருடைய செய்கையெல்லாம் சத்தியமுமாயிருக்
கிறது.
அவர் நீதியிலும் நியாயத்திலும் பிரியப்படு 5
கிறார்; பூமி கர்த்தருடைய காருணியத்தினால்
[20]நிறைந்திருக்கிறது.
கர்த்தருடைய வார்த்தையினால் வானங்க 6
ளும், [21]அவருடைய வாயின் சுவாசத்தினால்
அவைகளின் சர்வ சேனையும் உண்டாக்கப்
பட்டது.
அவர் சமுத்திர ஜலங்களைக் குவியலாகச் 7
சேர்த்து, [22]ஆழமான ஜலங்களைப் பொக்கிஷ
வைப்பாக வைக்கிறார்.
பூமியெல்லாம் கர்த்தருக்குப் பயப்படுவதாக; 8
[23]உலகத்திலுள்ள குடிகளெல்லாம் அவருக்கு
அஞ்சியிருப்பதாக.
அவர் சொல்ல ஆகும், [24]அவர் கட்டளை 9
யிட நிற்கும்.
கர்த்தர் ஜாதிகளின் ஆலோசனையை விரு 10
தாவாக்கி [25]ஜனங்களுடைய நினைவுகளை அவ
மாக்குகிறார்.
கர்த்தருடைய ஆலோசனை நித்திய கால 11
மாகவும், [26]அவருடைய இருதயத்தின் நினைவு
கள் தலைமுறை தலைமுறையாகவும் நிற்கும்.
கர்த்தரைத் தங்களுக்குத் தெய்வமாகக் 12
கொண்ட ஜாதியும், [27]அவர் தமக்குச் சுதந்தர
மாகத் தெரிந்துகொண்ட ஜனமும் பாக்கிய
முள்ளது.
கர்த்தர் வானத்திலிருந்து நோக்கிப்பார்த்து, 13
எல்லா மனுபுத்திரரையும் காண்கிறார்.
தாம் வாசமாயிருக்கிற ஸ்தானத்திலிருந்து 14
பூமியின் குடிகள் எல்லார்மேலும் [28]கண்
ணோக்கமாயிருக்கிறார்.
அவர்களுடைய இருதயங்களையெல்லாம் 15
அவர் உருவாக்கி, அவர்கள் செய்கைகளை
யெல்லாம் கவனித்திருக்கிறார்.
எந்த ராஜாவும் தன் சேனையின் மிகுதி 16
யால் ரட்சிக்கப்படான்; [29]சவுரியவானும் தன்
பலத்தின் மிகுதியால் தப்பான்.

17 இரட்சிக்கிறதற்குக் குதிரை விருதா; [1]அது
தன் மிகுந்த வீரியத்தால் தப்புவியாது.
18 தமக்குப் பயந்து, தமது கிருபைக்குக் காத்
திருக்கிறவர்களின் ஆத்துமாக்களை மரணத்
திற்கு விலக்கி விடுவிக்கவும்;
19 பஞ்சத்தில் அவர்களை உயிரோடே காக்க
வும், கர்த்தருடைய கண் [2]அவர்கள்மேல்
நோக்கமாயிருக்கிறது.
20 நம்முடைய ஆத்துமா கர்த்தருக்குக் காத்
திருக்கிறது; [3]அவரே நமக்குத் துணையும்
நமக்குக் கேடகமுமானவர்.
21 அவருடைய பரிசுத்த நாமத்தை நாம் நம்பி
யிருக்கிறபடியால், [4]நம்முடைய இருதயம்
அவருக்குள் களிகூரும்.
22 கர்த்தாவே, நாங்கள் உம்மை நம்பியிருக்
கிறபடியே உமது கிருபை எங்கள்மேல்
இருப்பதாக.

**34** (தாவீது அபிமெலேக்குக்கு முன்பாக வேஷமாறினபோது
அவனால் துரத்திவிடப்படுகையில் பாடின சங்கீதம்.)

கர்த்தரை நான் எக்காலத்திலும் ஸ்தோத்தி
ரிப்பேன்; [5]அவர் துதி எப்போதும் என் வாயி
லிருக்கும்.
2 கர்த்தருக்குள் என் ஆத்துமா மேன்மை
பாராட்டும்; [6]சிறுமைப்பட்டவர்கள் அதைக்
கேட்டு [7]மகிழுவார்கள்.
3 என்னோடே கூடக் கர்த்தரை மகிமைப்
படுத்துங்கள்; [8]நாம் ஒருமித்து அவர் நாமத்
தை உயர்த்துவோமாக.
4 நான் கர்த்தரைத் தேடினேன், [9]அவர்
எனக்குச் செவிகொடுத்து, என்னுடைய எல்
லாப் பயத்துக்கும் என்னை நீங்கலாக்கிவிட்டார்.
5 அவர்கள் அவரை நோக்கிப்பார்த்துப் பிர
காசமடைந்தார்கள்; அவர்கள் முகங்கள் வெட்
கப்படவில்லை.
6 இந்த ஏழை கூப்பிட்டான், கர்த்தர் கேட்
டு, [10]அவனை அவன் இடுக்கண்களுக்கெல்லாம்
நீங்கலாக்கி ரட்சித்தார்.
7 கர்த்தருடைய தூதன் [11]அவருக்குப் பயந்த
வர்களைச் சூழப் பாளயமிறங்கி, அவர்களை
விடுவிக்கிறார்.
8 கர்த்தர் நல்லவர் என்பதை [12]ருசித்துப்பா
ருங்கள்; அவர்மேல் நம்பிக்கையாயிருக்கிற
மனுஷன் பாக்கியவான்.
9 கர்த்தருடைய பரிசுத்தவான்களே, அவருக்
குப் பயந்திருங்கள்; அவருக்குப் பயந்தவர்
களுக்குக் குறைவில்லை.
10 சிங்கக்குட்டிகள் தாழ்ச்சியடைந்து பட்டி
னியாயிருக்கும்; [13]கர்த்தரைத் தேடுகிறவர்க
ளுக்கோ ஒரு நன்மையுங் குறைவுபடாது.
11 பிள்ளைகளே, வந்து எனக்குச் செவிகொ
டுங்கள்; கர்த்தருக்குப் பயப்படுதலை உங்களுக்
குப் போதிப்பேன்.
12 நன்மையைக்காணும்படி, ஜீவனை விரும்பி,
[14]நீடித்தநாட்களை அபேட்சிக்கிறமனுஷன்யார்?
13 உன் நாவைப் பொல்லாப்புக்கும், உன்
உதடுகளைக் கபட்டு வசனிப்புக்கும் விலக்கிக்
காத்துக்கொள்.

1 நீதி. 21. 31. ஓசி. 14. 3
2 37. 19. 1 பே. 3. 12
3 115. 9-11
4 ஏசா. 25. 9. சகரி. 10. 7. யோ. 16. 22
5 எபே. 5. 20
6 1 கொ. 1. 31
7 119. 74
8 லூ. 1. 46- ழ
9 லூ. 11. 9
10 3. 4
11 தானி. 6. 22. எபி. 1. 14
12 1 பே. 2. 3
13 யோபு 4. 10, 11
14 1 பே. 3. 10- ழ
15 2 தீமோ. 2. 19
16 மத். 5. 9. ரோ. 12. 18
17 1 பே. 3. 12
18 எசே. 14. 7, 8
19 ஏசா 65. 24
20 ஏசா. 57.15
21 2 தீமோ. 3. 11, 12
22 யோ. 19. 36
23 84. 11, 12
24 புல. 3. 58
25 ஏசா. 42. 13
26 71. 24
27 யோபு 21. 18

தீமையை விட்டு விலகி, [15]நன்மை செய்; 14
சமாதானத்தைத் தேடி, [16]அதைத் தொடர்ந்து
கொள்.
கர்த்தருடைய கண்கள் நீதிமான்கள்மேல் 15
நோக்கமாயிருக்கிறது; [17]அவருடைய செவி
கள் அவர்கள் கூப்பிடுதலுக்குத் திறந்திருக்
கிறது.
தீமை செய்கிறவர்களுடைய பேரைப் பூமி 16
யில் இராமல் அற்றுப்போகப்பண்ண, [18]கர்த்
தருடைய முகம் அவர்களுக்கு விரோதமா
யிருக்கிறது.
நீதிமான்கள் கூப்பிடும்போது கர்த்தர் 17
கேட்டு, [19]அவர்களை அவர்களுடைய எல்லா
உபத்திரவங்களுக்கும் நீங்கலாக்கிவிடுகிறார்.
நொறுங்குண்ட இருதய முள்ளவர்களுக் 18
குக் கர்த்தர் சமீபமாயிருந்து, [20]நருங்குண்ட
ஆவியுள்ளவர்களை ரட்சிக்கிறார்.
நீதிமானுக்கு வரும் துன்[illegible]ள் அநேக 19
மாயிருக்கும்; [21]கர்த்தர் அ[illegible]களெல்லாவற்
றிலும் நின்று அவனை விடுவிப்பார்.
அவனுடைய எலும்புகளையெல்லாம் காப் 20
பாற்றுகிறார்; [22]அவைகளில் ஒன்றும் முறிக்
கப்படுவதில்லை.
தீமை துன்மார்க்கனைக் கொல்லும்; நீதிமா 21
னைப் பகைக்கிறவர்கள் குற்றவாளிகளாவார்
கள்.
கர்த்தர் தமது ஊழியக்காரரின் ஆத்துமா 22
வை மீட்டுக்கொள்ளுகிறார்; [23]அவரை நம்பு
கிற ஒருவன்மேலும் குற்றஞ் சுமராது.

(தாவீதின் சங்கீதம்.) **35**

கர்த்தாவே, நீர் என் வழக்காளிகளோடே
வழக்காடி, [24]என்னோடு யுத்தம் பண்ணுகிறவர்
களோடே யுத்தம் பண்ணும்.
நீர் கேடகத்தையும் பரிசையையும் பிடித்து, 2
[25]எனக்கு ஒத்தாசையாக எழுந்து நில்லும்.
என்[illegible]த் துன்பப்படுத்துகிறவர்களோடு 3
எதிர்த்து[illegible]ன்று, ஈட்டியையோங்கி அவர்களை
மறித்து: நான் உன் ரட்சிப்பு என்று என்
ஆத்துமாவுக்குச் சொல்லும்.
என் பிராணனை வாங்கத் தேடுகிறவர்கள் 4
வெட்கப்பட்டுக் கலங்குவார்களாக; [26]எனக்
குத் தீங்குசெய்ய நினைக்கிறவர்கள் நாண
மடைவார்களாக.
அவர்கள் காற்றுமுகத்தில் பறக்கும் [27]பத 5
ரைப்போலாவார்களாக; கர்த்தருடைய தூதன்
அவர்களைத் துரத்துவானாக.
அவர்களுடைய வழி இருளும் சறுக்கலு 6
மாயிருப்பதாக; கர்த்தருடைய தூதன் அவர்க
ளைப் பின் தொடருவானாக.
முகாந்தரமில்லாமல் எனக்காகத் தங்கள் 7
வலையைக் குழியில் ஒளித்துவைத்தார்கள்;
முகாந்தரமில்லாமல் என் ஆத்துமாவுக்குப் படு
குழி வெட்டினார்கள்.
அவன் நினையாத அழிவு அவனுக்கு வர 8
வும், அவன் மறைவாய் வைத்த வலை அவனை
யே பிடிக்கவுங் கடவது; அவனே அந்தக்
குழியில் விழுந்து அழிவானாக.

9 என் ஆத்துமா கர்த்தரில் களிகூர்ந்து, அவ
ருடைய ரட்சிப்பில் மகிழ்ந்திருக்கும்.
10 சிறுமைப்பட்டவனை அவனிலும் பலவானு
டைய கைக்கும், [1]சிறுமையும் எளிமையுமா
னவனைக் கொள்ளையிடுகிறவனுடைய கைக்
கும் தப்புவிக்கிற உமக் கொப்பானவர் யார்
கர்த்தாவே, என்று என் எலும்புகளெல்லாம்
சொல்லும்.
11 கொடுமையான சாட்சிகள் எழும்பி, [2]நான்
அறியாததை என்னிடத்தில் கேட்கிறார்கள்.
12 நான் செய்த நன்மைக்குப் பதிலாகத் தீமை
செய்கிறார்கள்; [3]என் ஆத்துமா திக்கற்றுப்
போகப் பார்க்கிறார்கள்.
13 அவர்கள் வியாதியாயிருந்தபோது இரட்டு
என் உடுப்பாயிருந்தது; நான் உபவாசத்தால்
என் ஆத்துமாவை உபத்திரவப்படுத்தினேன்;
என் ஜெபமும் என் மடியிலே திரும்ப வந்தது.
14 நான் அவனை என் சிநேகிதனாகவும் சகோ
தரனாகவும் பாவித்து நடந்துகொண்டேன்;
தாய்க்காகத் துக்கிக்கிறவனைப்போல் துக்க
வஸ்திரம் தரித்துத் தலைகவிழ்ந்து நடந்தேன்.
15 ஆனாலும் எனக்கு ஆபத்துண்டானபோது
அவர்கள் சந்தோஷப்பட்டுக் கூட்டங் கூடி
னார்கள்; நீசரும் [4]நான் அறியாதவர்களும்
எனக்கு விரோதமாய்க் கூட்டங்கூடி, ஓயா
மல் என்னை நிந்தித்தார்கள்.
16 அப்பத்திற்காக இச்சகம் பேசுகிற பரியா
சக் காரரோடே சேர்ந்துகொண்டு என்பே
ரில் [5]பற்கடிக்கிறார்கள்.
17 ஆண்டவரே, எதுவரைக்கும் இதைப் பார்த்
துக்கொண்டிருப்பீர்? என் ஆத்துமாவை அழி
வுக்கும், *எனக்கு அருமையானதைச் சிங்கக்
குட்டிகளுக்கும் தப்புவியும்.
18 மகா சபையிலே உம்மைத் துதிப்பேன்;
திரளான ஜனங்களுக்குள்ளே உம்மைப் புகழு
வேன்.
19 வீணாய் எனக்குச் சத்துருக்களானவர்கள்
என்னிமித்தம் சந்தோஷியாமலும், முகாந்தர
மில்லாமல் [6]என்னைப் பகைக்கிறவர்கள் கண்
சிமிட்டாமலும் இருப்பார்களாக.
20 அவர்கள் சமாதானமாய்ப் பேசாமல், தேசத்
திலே அமைதலாயிருக்கிறவர்களுக்கு விரோ
தமாய் [7]வஞ்சகமான காரியங்களைக் கருதுகி
றார்கள்.
21 எனக்கு விரோதமாகத் தங்கள் வாயை விரி
வாய்த் திறந்து, ஆ ஆ, ஆ ஆ, எங்கள் கண்
கண்டது என்கிறார்கள்.
22 கர்த்தாவே, நீர் இதைக் கண்டீர், மவுன
மாயிராதேயும்; [8]ஆண்டவரே, எனக்குத் தூர
மாகாதேயும்.
23 என் தேவனே, என் ஆண்டவரே, எனக்கு
நியாயஞ்செய்யவும் என் வழக்கைத் தீர்க்கவும்
விழித்துக்கொண்டு [9]எழுந்தருளும்.
24 என் தேவனாகிய கர்த்தாவே, உம்முடைய
நீதியின்படி [10]என்னை நியாயம் விசாரியும்,
என்னைக்குறித்து அவர்களை மகிழ வொட்டா
திரும்.

1 நீதி. 22. 22, 23
2 27.12. மத். 26. 59–61
3 யோ. 10. 32
4 யோபு 30. 1, 8. ழ
5 புல. 2. 16. அப். 7. 54
* என் ஆருயிரை. 22. 20
6 யோ. 15. 25
7 மத். 12. 24
8 50. 21. எசா. 65. 6
9 80. 2
10 1 பே. 2. 23
11 70. 4
12 34. 1
13 ரோ. 3. 18
14 உபா. 29. 19
15 எரே. 4. 22
16 நீதி. 4. 16
17 97. 10
18 ரோ. 11. 33
19 65. 4. வெளி. 22. 1, 17
20 எரே. 2. 15. யோ. 4. 10, 14. 1 பே. 2. 9

அவர்கள் தங்கள் இருதயத்திலே: ஆ ஆ, 25
இதுவே நாங்கள் விரும்பினது என்று சொல்
லாதபடிக்கும், அவனை விழுங்கிவிட்டோம்
என்று பேசாதபடிக்கும் செய்யும்.
எனக்கு நேரிட்ட ஆபத்துக்காகச் சந்தோ 26
ஷிக்கிறவர்கள் ஏகமாய் வெட்கி நாணி,
எனக்கு விரோதமாய்ப் பெருமைபாராட்டுகிற
வர்கள் வெட்கத்தாலும் இலச்சையாலும்
மூடப்படக்கடவர்கள்.
என் நீதி விளங்க விரும்புகிறவர்கள் கெம் 27
பீரித்து மகிழ்ந்து, [11]தமது ஊழியக்காரனு
டைய சுகத்தை விரும்புகிற கர்த்தருக்கு
மகிமை உண்டாவதாக என்று எப்போதும்
சொல்லக்கடவர்கள்.
என் நாவு உமது நீதியையும், நாள்முழு 28
தும் உமது துதியையும், [12]சொல்லிக்கொண்
டிருக்கும்.

(கர்த்தருடைய தாசனாகிய தாவீது ராகத்தலைவனுக்கு 36
ஒப்புவித்த சங்கீதம்.)

துன்மார்க்கனுடைய துரோகப்பேச்சு என்
உள்ளத்திற்குத் தெரியும்; [13]அவன் கண்களுக்கு
முன் தெய்வபயம் இல்லை.
அவன், தன் அக்கிரமம் அருவருப்பான 2
தென்று காணப்படுமளவும், [14]தன் பார்வைக்
கேற்றபடி தனக்குத்தானே இச்சகம் பேசு
கிறான்.
அவன் வாயின் வார்த்தைகள் அக்கிரமமும் 3
வஞ்சகமுமுள்ளது; புத்தியாய் நடந்துகொள்
வதையும் [15]நன்மை செய்வதையும் விட்டுவிட்
டான்.
அவன் தன் படுக்கையின்மேல் அக்கிரமத் 4
தையோசித்து, [16]நல்லதல்லாதவழியிலே நிலைத்
து, [17]பொல்லாப்பை வெறுக்காதிருக்கிறான்.
கர்த்தாவே, உமது கிருபை வானங்களில் 5
விளங்குகிறது; உமது சத்தியம் மேகமண்ட
லங்கள் பரியந்தம் எட்டுகிறது.
உமது நீதிமகத்தான பர்வதங்கள்போலவும், 6
உமது நியாயங்கள் மகா ஆழமாகவும் [18]இருக்
கிறது; கர்த்தாவே, மனுஷரையும் மிருகங்
களையும் காப்பாற்றுகிறீர்.
தேவனே, உம்முடைய கிருபை எவ்வளவு 7
அருமையானது! அதினால் மனுபுத்திரர் உமது
செட்டைகளின் நிழலிலே வந்தடைகிறார்கள்.
உமது ஆலயத்திலுள்ள சம்பூரணத்தினால் 8
திருப்தியடைவார்கள்; [19]உமது பேரின்ப நதி
யினால் அவர்கள் தாகத்தைத் தீர்க்கிறீர்.
ஜீவஊற்று உம்மிடத்தில் இருக்கிறது; 9
[20]உம்முடைய வெளிச்சத்திலே வெளிச்சம்
காண்கிறோம்.
உம்மை அறிந்தவர்கள்மேல் உமது கிருபை 10
யையும், செம்மையான இருதயமுள்ளவர்கள்
மேல் உமது நீதியையும் பாராட்டியருளும்.
பெருமைக்காரரின் கால் என்மேல் வாராம 11
லும், துன்மார்க்கருடைய கை என்னைப் பறக்
கடியாமலும் இருப்பதாக.
அதோ அக்கிரமக்காரர் விழுந்தார்கள்; எழுந் 12
திருக்கமாட்டாமல் தள்ளுண்டுபோனார்கள்.

# 37

(தாவீதின் சங்கீதம்.)

பொல்லாதவர்களைக்குறித்து எரிச்சலடை
யாதே; [1]நியாயக்கேடு செய்கிறவர்கள்மேல்
பொறாமைகொள்ளாதே.
2 அவர்கள் புல்லைப்போல் சீக்கிரமாய் அறுப்
புண்டு, பசும் பூண்டைப்போல் வாடிப்போ
வார்கள்.
3 கர்த்தரை நம்பி நன்மை செய்; தேசத்தில்
குடியிருந்து சத்தியத்தை மேய்ந்துகொள்.
4 கர்த்தரிடத்தில் மனமகிழ்ச்சியாயிரு; [2]அவர்
உன் இருதயத்தின் வேண்டுதல்களை உனக்கு
அருள்செய்வார்.
5 உன் வழியைக் [3]கர்த்தருக்கு ஒப்புவித்து,
அவர்மேல் நம்பிக்கையாயிரு; அவரே காரி
யத்தை வாய்க்கப்பண்ணுவார்.
6 உன் நீதியை வெளிச்சத்தைப்போலவும்,
[4]உன் நியாயத்தைப் பட்டப்பகலைப்போல
வும் விளங்கப் பண்ணுவார்.
7 கர்த்தரை நோக்கி அமர்ந்து, அவருக்குக்
காத்திரு; [5]காரியசித்தியுள்ளவன்மேலும் தீவி
னைகளைச் செய்கிற மனுஷன்மேலும் எரிச்ச
லாகாதே.
8 கோபத்தை நெகிழ்ந்து, [6]உக்கிரத்தை
விட்டுவிடு; பொல்லாப்புச் செய்ய ஏதுவான
எரிச்சல் உனக்கு வேண்டாம்.
9 பொல்லாதவர்கள் அறுப்புண்டு போவார்
கள்; கர்த்தருக்குக் காத்திருக்கிறவர்களோ [7]பூ
மியைச் சுதந்தரித்துக்கொள்வார்கள்.
10 இன்னுங் கொஞ்சநேரந்தான், அப்போது
துன்மார்க்கன் இரான்; [8]அவன் ஸ்தானத்தை
உற்று விசாரித்தாயானால் அவன் இல்லை.
11 சாந்தகுணமுள்ளவர்கள் பூமியைச் சுதந்த
ரித்து, [9]மிகுந்த சமாதானத்தினால் மனமகிழ்ச்
சியாயிருப்பார்கள்.
12 துன்மார்க்கன் நீதிமானுக்கு விரோதமாய்த்
தீங்கு நினைத்து, அவன்பேரில் பற்கடிக்கிறான்.
13 ஆண்டவர் அவனைப் பார்த்து நகைக்கி
றார்; அவனுடைய நாள் வருகிறதென்று காண்
கிறார்.
14 சிறுமையும் எளிமையுமானவனை மடிவிக்க
வும், செம்மை மார்க்கத்தாரை விழப்பண்ண
வும், துன்மார்க்கர் பட்டயத்தை உருவி, தங்
கள் வில்லை நாணேற்றுகிறார்கள்.
15 ஆனாலும் அவர்கள் பட்டயம் அவர்களு
டைய இருதயத்திற்குள் உருவிப்போம்; அவர்
கள் வில்லுகள் முறியும்.
16 அநேக துன்மார்க்கருக்குள்ள செல்வத்
திரட்சியைப் பார்க்கிலும், [10]நீதிமானுக்குள்ள
கொஞ்சமே நல்லது.
17 துன்மார்க்கருடைய புயங்கள் முறியும்;
நீதிமான்களையோ கர்த்தர் தாங்குகிறார்.
18 உத்தமர்களின் நாட்களைக் கர்த்தர் அறிந்
திருக்கிறார்; [11]அவர்கள் சுதந்தரம் என்றென்
றைக்கும் இருக்கும்.
19 அவர்கள் ஆபத்துக்காலத்திலே வெட்கப்
பட்டுப்போகாதிருந்து, பஞ்சகாலத்திலே
திருப்தியடைவார்கள்.

துன்மார்க்கரோ அழிந்துபோவார்கள், கர்த் 20
தருடைய சத்துருக்கள் ஆட்டுக்குட்டிகளின்
நிணத்தைப் போல் புகைந்துபோவார்கள்,
அவர்கள் புகையாய்ப் புகைந்துபோவார்
கள்.
துன்மார்க்கன் கடன்வாங்கிச் செலுத்தாமற் 21
போகிறான்; [12]நீதிமானோ இரங்கிக் கொடுக்
கிறான்.
அவரால் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள் பூமி 22
யைச் சுதந்தரித்துக்கொள்ளுவார்கள்; [13]அவ
ரால் சபிக்கப்பட்டவர்களோ அறுப்புண்டுபோ
வார்கள்.
நல்ல மனுஷனுடைய நடைகள் கர்த்த 23
ரால் உறுதிப்படும்; [14]அவனுடைய வழியின்
மேல் அவர் பிரியமாயிருக்கிறார்.
அவன் விழுந்தாலும் தள்ளுண்டுபோவதில் 24
லை; [15]கர்த்தர் தமது கையினால் அவனைத் தாங்
குகிறார்.
நான் இளைஞனாயிருந்தேன், முதிர் வய 25
துள்ளவனுமானேன்; [16]ஆனாலும் நீதிமான் கை
விடப்பட்டதையும், அவன் சந்ததி அப்பத்துக்
கு இரந்து திரிகிறதையும் நான் காணவில்லை.
அவன் நித்தம் இரங்கிக் கடன்கொடுக்கி 26
றான், [17]அவன் சந்ததி ஆசீர்வதிக்கப்படும்.
தீமையை விட்டு விலகி, நன்மை செய்; 27
[18]என்றென்றைக்கும் நிலைத்திருப்பாய்.
கர்த்தர் நியாயத்தை விரும்புகிறவர்; [19]அவர் 28
தமது பரிசுத்தவான்களைக் கைவிடுவதில்லை;
[20]அவர்கள் என்றைக்கும் காக்கப்படுவார்கள்;
[21]துன்மார்க்கருடைய சந்ததியோ அறுப்புண்டு
போம்.
நீதிமான்கள் பூமியைச் சுதந்தரித்துக்கொண் 29
டு, என்றைக்கும் அதிலே வாசமாயிருப்பார்
கள்.
நீதிமானுடைய வாய்ஞானத்தை உரைத்து, 30
[22]அவனுடைய நாவு நியாயத்தைப்பேசும்.
அவனுடைய தேவன் அருளிய வேதம் 31
அவன் இருதயத்தில் இருக்கிறது; [23]அவன்
நடைகளில் ஒன்றும் பிசகுவதில்லை.
துன்மார்க்கன் நீதிமான்மேல் கண்வைத்து, 32
அவனைக்கொல்ல வகைதேடுகிறான்.
கர்த்தரோ அவனை இவன் கையில் விடுவ 33
தில்லை; [24]அவன் நியாயம் விசாரிக்கப்படுகை
யில் அவனை [25]ஆக்கினைக்குள்ளாகத் தீர்ப்பது
மில்லை.
நீ கர்த்தருக்குக் காத்திருந்து, [26]அவருடைய 34
வழியைக் கைக்கொள்; அப்பொழுது நீ பூமி
யைச் சுதந்தரித்துக்கொள்வதற்கு அவர் உன்
னை உயர்த்துவார்; துன்மார்க்கர் அறுப்புண்டு
போவதை நீ காண்பாய்.
கொடிய பலவந்தனான ஒரு துன்மார்க்க 35
னைக் கண்டேன் [27]அவன் தனக்கேற்ற நிலத்
தில் முளைத்திருக்கிற பச்சைமரத்தைப்போல்
தழைத்தவனாயிருந்தான்.
ஆனாலும் அவன் ஒழிந்துபோனான்; பாருங் 36
கள், அவன் இல்லை: [28]அவனைத் தேடினேன்,
அவன் காணப்படவில்லை.

1 1 சாமு. 1. 6. நீதி. 24. 17. 19
2 சங். 58. 14
3 மத். 6. 25. 1 பே. 5. 7
4 யோபு 11. 17. மீகா. 7. 8, 9
5 நீதி. 20. 22. புல. 3. 25, 26
6 எபே. 4. 26
7 சங். 57. 13
8 யோபு 7. 10
9 மத். 5. 5
10 நீதி. 15. 16. 1 தீமோ. 6. 6
11 1 பே. 1. 3, 4
12 112. 5, 9
13 நீதி. 3. 33
14 1 சாமு. 2. 9. நீதி. 16. 9
15 மீகா. 7. 8. 2 கொ. 4. 9
16 ஏசா. 33. 16. எபி. 13. 5, 6
17 உபா. 15. 8–10
18 ஏசா. 1. 16, 17
19 ஏசா. 30. 18
20 1 பே. 1. 5
21 ஏசா. 14. 20
22 மத். 12. 35
23 உபா. 6. 6. ஏசா. 51. 7
24 2 பே. 2. 9
25 ரோ. 8. 1, 34
26 7, 9. வச.
27 யோபு 5. 3. ஏசா. 14. 14, 19
28 யோ. 20. 5. ஞ

37 நீ உத்தமனை நோக்கி, செம்மையானவனைப்
பார்த்திரு; [1]அந்த மனுஷனுடைய முடிவு
சமாதானம்.
38 அக்கிரமக்காரர் ஏகமாய் அழிக்கப்படுவார்
கள்; [2]அறுப்புண்டு போவதே துன்மார்க்கரின்
முடிவு.
39 நீதிமான்களுடைய ரட்சிப்பு கர்த்தரால்
வரும்; இக்கட்டுக்காலத்தில் அவரே அவர்கள்
அடைக்கலம்.
40 கர்த்தர் அவர்களுக்கு உதவிசெய்து, அவர்
களை விடுவிப்பார்; அவர்கள் அவரை நம்பியிருக்
கிறபடியால், [3]அவர்களைத் துன்மார்க்கருடைய
கைக்குத் தப்புவித்து ரட்சிப்பார்.

38 (நினைவு கூருதலுக்காகத் தாவீது பாடின வியாஸ்கர்
என்னும் சங்கீதம்.)

கர்த்தாவே, உம்முடைய கோபத்தில் என்
னைக் கடிந்துகொள்ளாதேயும்; [4]உம்முடைய
உக்கிரத்தில் என்னைத் தண்டியாதேயும்.
2 உம்முடைய அம்புகள் எனக்குள்ளே தைத்
திருக்கிறது; [5]உமது கை என்னை இறுத்துகி
றது.
3 உமது கோபத்தினால் என் மாம்சத்தில் ஆ
ரோக்கியமில்லை; [6]என் பாவத்தினால் என்
எலும்புகளில் சவுக்கியமில்லை.
4 என் அக்கிரமங்கள் என் தலைக்கு மேலா
கப் பெருகிற்று, [7]அவைகள் பாரச்சுமை
யைப்போல என்னால் தாங்கக்கூடாத பாரமா
யிற்று.
5 என் மதிகேட்டினிமித்தம் என் புண்கள்
அழுகி [8]நாற்றமெடுத்தது.
6 நான் வேதனைப்பட்டு ஒடுங்கினேன்; நான்
முழுதும் துக்கப்பட்டுத் திரிகிறேன்.
7 என் குடல்கள் எரிபந்தமாய் எரிகிறது;
[9]என் மாம்சத்தில் ஆரோக்கியம் இல்லை.
8 நான் பெலனற்றுப்போய், மிகவும் நொறுக்
கப்பட்டேன்; என் இருதயத்தின் கொந்தளிப்
பினால் கதறுகிறேன்.
9 ஆண்டவரே, என் ஏங்கலெல்லாம் உமக்கு
முன்பாக இருக்கிறது; என் தவிப்பு உமக்கு
மறைவாயிருக்கவில்லை.
10 என் உள்ளம் குழம்பி அலைகிறது; என்
பெலன் என்னைவிட்டு விலகி, என் கண்க
ளின் ஒளிமுதலாய் இல்லாமற்போயிற்று.
11 என் சிநேகிதரும் என் தோழரும் என்
வாதையைக் கண்டு விலகுகிறார்கள்; [10]என்
இனத்தாரும் தூரத்திலே நிற்கிறார்கள்.
12 என் பிராணனை வாங்கத் தேடுகிறவர்கள்
எனக்கு கண்ணிகளை வைக்கிறார்கள்; எனக்
குப் பொல்லாங்கு தேடுகிறவர்கள் கேடான
வைகளைப்பேசி, நாள் முழுதும் வஞ்சனைகளை
யோசிக்கிறார்கள்.
13 நானோ செவிடனைப்போலக் கேளாதவனாக
வும், [11]ஊமையனைப்போல வாய்திறவாதவனா
கவும் இருக்கிறேன்.
14 காது கேளாதவனும், தன் வாயில் மறு உத்
தரவுகள் இல்லாதவனுமாயிருக்கிற மனுஷ
னைப்போலானேன்.

[1] நீதி. 14. 32. ஏசா. 32. 17: 57. 2
[2] மத். 13. 30
[3] தானி. 3. 17-28
[4] 6. 1
[5] யோபு 6. 4
[6] 51. 8
[7] எஸ்றா. 9. 6
[8] ஏசா. 1. 5, 6
[9] யோபு 7. 5
[10] ஓசி. 10. 31, 32: 23. 49
[11] 2 சாமு. 16. 10. ஆ. ஏசா. 42 19, 20
[12] நீதி. 28. 13. 2 கொ. 7. 9, 10
[13] 1 பே. 3. 13. 1 கொ. 3. 12
[14] ஏசா. 12. 2
[15] நீதி. 21. 23. கொலோ. 4. 5. யாக். 3. 2
* நல்வார்த்தை.
[16] எரே. 20. 9
[17] 90. சங்கீதம் காண்க.
[18] பிர. 2. 18. ஆ. ஓ. 12. 20, 21. 1 கொ. 7. 31. யாக். 4. 14
[19] 2 சாமு. 16. 10. யோபு 2. 10
[20] யோபு 9. 34: 13. 21

கர்த்தாவே, உமக்குக் காத்திருக்கிறேன்; 15
என் தேவனாகிய ஆண்டவரே, நீர் மறுஉத்த
ரவு கொடுப்பீர்.
அவர்கள் என்னிமித்தம் சந்தோஷப்படாத 16
படிக்கு இப்படிச் சொன்னேன்; என் கால்
தவறும்போது என்மேல் பெருமை பாராட்டு
வார்களே.
நான் தடுமாறி விழ ஏதுவாயிருக்கிறேன்; 17
என் துக்கம் எப்பொழுதும் என் முன்பாக
இருக்கிறது.
என் அக்கிரமத்தை நான் அறிக்கையிட்டு, 18
[12]என் பாவத்தினிமித்தம் விசாரப்படுகிறேன்.
என் சத்துருக்கள் வாழ்ந்து பலத்திருக்கிறார் 19
கள்; முகாந்தரமில்லாமல் என்னைப் பகைக்கி
றவர்கள் பெருகியிருக்கிறார்கள்.
நான் நன்மையைப் பின்பற்றுகிறபடியால், 20
[13]நன்மைக்குத் தீமைசெய்கிறவர்கள் என்னை
விரோதிக்கிறார்கள்.
கர்த்தாவே, என்னைக் கைவிடாதேயும்; 21
என் தேவனே, எனக்குத் தூரமாயிராதேயும்.
என் ரட்சிப்பாகிய ஆண்டவரே, [14]எனக்குச் 22
சகாயஞ்செய்யத் தீவிரியும்.

(எதுத்தூன் இடத்தில் ஒப்புவித்த
தாவீதின் சங்கீதம்.) 39

என் நாவினால் பாவஞ்செய்யாதபடிக்கு நான்
என் வழிகளைக் காத்து, [15]துன்மார்க்கன் எனக்
கு முன்பாக இருக்குமட்டும் என் வாயைக்
கடிவாளத்தால் அடக்கிவைப்பேன் என்றேன்.
நான் மவுனமாகி, ஊமையனாயிருந்தேன், 2
*நலமானதையும் பேசாமல் அமர்ந்திருந்தேன்;
ஆனாலும் என் துக்கம் அதிகரித்தது;
என் இருதயம் எனக்குள்ளே அனல்கொண் 3
டது; [16]நான் தியானிக்கையில் அக்கினி மூண்
டது; அப்பொழுது என் நாவினால் விண்ணப்
பம் செய்தேன்.
கர்த்தாவே, நான் எவ்வளவாய் நிலையற்ற 4
வன் என்று உணரும்படி என் முடிவையும்
[17]என் நாட்களின் அளவு இவ்வளவு என்பதை
யும் எனக்குத் தெரிவியும்.
இதோ, என் நாட்களை நாலு விரற்கடை 5
யளவாக்கினீர்; என் ஆயுசு உமது பார்வைக்கு
இல்லாததுபோலிருக்கிறது; எந்த மனுஷனும்
மாயையே என்பது நிச்சயம்.
வேஷமாகவே மனுஷன் திரிகிறான்; [18]விரு 6
தாவாகவே சஞ்சலப்படுகிறான், ஆஸ்தியைச்
சேர்க்கிறான், யார் அதை வாரிக்கொள்ளுவான்
என்று அறியான்.
இப்போதும் ஆண்டவரே, நான் எதற்கு 7
எதிர்பார்த்திருக்கிறேன்? நீரே என் நம்பிக்கை.
என் மீறுதல்கள் எல்லாவற்றிலுமிருந்து 8
என்னை விடுதலையாக்கும், மூடனுடைய நிந்த
னைக்கு என்னை ஒப்புக்கொடாதேயும்.
நீரே இதைச் செய்தீர் [19]என்று நான் என் 9
வாயைத்திறவாமல் மவுனமாயிருந்தேன்.
என்னிலிருந்து உம்முடைய வாதையை 10
எடுத்துப்போடும்; [20]உமது கரத்தின் அடிகளால்
நான் சோர்ந்துபோனேன்.

11 அக்கிரமத்தினிமித்தம் நீர் மனுஷனைக் கடிந்
துகொண்டு தண்டிக்கிறபோது, அவன் வடி
வைப் பொட்டரிப்பைப்போல் அழியப்பண்
ணுகிறீர்; [1]நிச்சயமாக எந்த மனுஷனும் மா
யையே.
12 கர்த்தாவே, என் ஜெபத்தைக் கேட்டு,
என் கூப்பிடுதலுக்குச் செவிகொடும்; என்
கண்ணீருக்கு மவுனமாயிராதேயும்; என் பிதாக்
களெல்லாரையும்போல நானும் உமக்கு முன்
பாக [2]அந்நியனும் பரதேசியுமாயிருக்கிறேன்.
13 நான் இனி இராமற்போகு முன்னே, †தே
றுதலடையும்படி என்னிடத்தில் பொறுமை
யாயிரும்.

## 40 (இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

, கர்த்தருக்காகப் பொறுமையுடன் காத்தி
ருந்தேன்; அவர் என்னிடமாய்ச் சாய்ந்து,
என் கூப்பிடுதலைக் கேட்டார்.
2 பயங்கரமான குழியிலும் உளையான சேற்
றிலுமிருந்து என்னைத் தூக்கியெடுத்து, என்
கால்களைக் கன்மலையின்மேல் நிறுத்தி, என்
அடிகளை உறுதிப்படுத்தி,
3 நமது தேவனைத் துதிக்கும் புதுப்பாட்டை
அவர் என் வாயிலே கொடுத்தார்; அநேகர்
அதைக் கண்டு, பயந்து, கர்த்தரை நம்புவார்கள்.
4 அகங்காரிகளையும் ‡பொய்யைச் சார்ந்திருக்
கிறவர்களையும் நோக்காமல், கர்த்தரையே தன்
நம்பிக்கையாக வைக்கிற மனுஷன் பாக்கிய
வான்.
5 என் தேவனாகிய கர்த்தாவே, நீர் எங்கள்
நிமித்தஞ் செய்த உம்முடைய அதிசயங்களும்
உம்முடைய யோசனைகளும் அநேகமாயிருக்
கிறது; [3]ஒருவரும் அவைகளை உமக்கு விவ
ரித்துச் சொல்லிமுடியாது; நான் அவைகளைச்
சொல்லி அறிவிக்கவேண்டுமானால் அவைகள்
எண்ணிக்கைக்கு மேலானவைகள்.
6 பலியையும் காணிக்கையையும் நீர் விரும்பா
மல், [4]என் செவிகளைத் திறந்தீர்; சர்வாங்க தக
னபலியையும் பாவநிவாரண பலியையும் நீர்
கேட்கவில்லை.
7 அப்பொழுது நான்: இதோ, வருகிறேன்,
§புஸ்தகச்சுருளில் என்னைக் குறித்து எழுதியி
ருக்கிறது;
8 என் தேவனே, உமக்குப் பிரியமானதைச்
செய்ய விரும்புகிறேன்; [5]உமது நியாயப்பிர
மாணம் என் உள்ளத்திற்குள் இருக்கிறது என்
று சொன்னேன்.
9 மகா சபையிலே நீதியைப் பிரசங்கித்தேன்;
[6]என் உதடுகளை மூடேன்; கர்த்தாவே, நீர்
அதை அறிவீர்.
10 உம்முடைய நீதியை நான் என் இருதயத்
திற்குள் மறைத்துவைக்கவில்லை; [7]உமது சத்
தியத்தையும் உமது ரட்சிப்பையும் சொல்லி
யிருக்கிறேன்; உமது கிருபையையும் உமது
உண்மையையும் [8]மகா சபைக்கு அறிவியாத
படிக்கு நான் ஒளித்து வைக்கவில்லை.
11 கர்த்தாவே, நீர் உம்முடைய இரக்கங்களை
எனக்குக் கிடையாமற்போகப் பண்ணாதேயும்;
உமது கிருபையும் உமது உண்மையும் எப்
பொழுதும் என்னைக் காக்கக்கடவது.
எண்ணிக்கைக்கு அடங்காத தீமைகள் என் 12
னைச் சூழ்ந்துகொண்டது, என் அக்கிரமங்கள்
என்னைத் தொடர்ந்து பிடித்தது, நான் நிமிர்ந்
து பார்க்கக் கூடாதிருக்கிறது, [9]அவைகள்
என் தலைமயிரிலும் அதிகமாயிருக்கிறது, என்
இருதயம் சோர்ந்துபோகிறது.
கர்த்தாவே, என்னை விடுவித்தருளும்; கர்த் 13
தாவே, எனக்குச் சகாயம்பண்ணத் தீவிரியும்.
என் பிராணனை அழிக்கத் தேடுகிறவர்கள் 14
ஏகமாய் வெட்கி நாணி, எனக்குத் தீங்குசெய்
ய விரும்புகிறவர்கள் பின்னிட்டு லச்சையடை
வார்களாக.
என் பேரில் ஆ ஆ! ஆ ஆ! என்று சொல் 15
லுகிறவர்கள்; தங்கள் வெட்கத்தின் பலனை
யடைந்து கைவிடப்படுவார்களாக.
உம்மைத் தேடுகிற அனைவரும் உமக்குள் 16
மகிழ்ந்துசந்தோஷப்படுவார்களாக; உம்முடை
ய இரட்சிப்பை விரும்புகிறவர்கள் கர்த்தருக்கு
மகிமை உண்டாவதாக என்று எப்பொழுதும
சொல்வார்களாக.
நான் சிறுமையும் எளிமையுமானவன், [10]கர்த் 17
தரோ என்மேல் நினைவாயிருக்கிறார்; தேவரீர்
என் துணையும் என்னை விடுவிக்கிறவருமாயி
ருக்கிறீர்; என் தேவனே, தாமதியாதேயும்.

## 41 (இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

சிறுமைப்பட்டவன்மேல் சிந்தையுள்ளவன்
பாக்கியவான்; [11]தீங்குநாளில் கர்த்தர் அவனை
விடுவிப்பார்.
கர்த்தர் அவனைப் பாதுகாத்து அவனை உயி 2
ரோடே வைப்பார்; பூமியில் அவன் பாக்கிய
வானாயிருப்பான்; அவன் சத்துருக்களின் இஷ்
டத்திற்கு நீர் அவனை ஒப்புக்கொடீர்.
படுக்கையின்மேல் வியாதியாய்க் கிடக்கிற 3
அவனைக் கர்த்தர் தாங்குவார்; அவனுடைய
வியாதியிலே அவன் படுக்கை முழுவதையும்
மாற்றிப்போடுவீர்.
கர்த்தாவே, என்மேல் இரக்கமாயிரும்; 4
உமக்கு விரோதமாய்ப் பாவஞ்செய்தேன்,
[12]என் ஆத்துமாவைக் குணமாக்கும் என்று நான்
சொன்னேன்.
அவன் எப்பொழுது சாவான், அவன் பேர் 5
எப்பொழுது அழியும்? என்று என் சத்துருக்
கள் எனக்கு விரோதமாய்ச் சொல்லுகிறார்கள்.
ஒருவன் என்னைப் பார்க்கவந்தால் வஞ்சனை 6
யாய்ப் பேசுகிறான்; [13]அவன் தன் இருதயத்
தில் அக்கிரமத்தைச் சேகரித்துக்கொண்டு, தெ
ருவிலே போய், அதைத் தூற்றுகிறான்.
என் பகைஞரெல்லாரும் என்மேல் ஏகமாய் 7
முணுமுணுத்து எனக்கு விரோதமாயிருந்து,
எனக்குப் பொல்லாங்கு நினைத்து,
தீராவியாதி அவனைப்பிடித்துக்கொண்டது; 8
படுக்கையில் கிடக்கிற அவன்: இனி எழுந்தி
ருப்பதில்லை என்கிறார்கள்.

[1] ஒசி. 5. 12
[2] ஆதி. 23. 4. எபி. 11. 13. 1 பே. 1. 17
† தெளிவடையும் படி. பேரு 10. 20, 21: 14. 5. 12
‡ பொய்மை விக்கிரகத்தை. 15. 4: 125. 5
[3] பேரு 9. 10
[4] 1 சாமு. 15. 22 பேரு 33. 16. ஓசி. 6. 6. மத். 12. 7. எபி. 10. 4–26
§ வேதத்தில். லூ. 24. 44. பேர. 5. 39
[5] பேர. 4. 34. பேர. 7. 22
[6] லூ. 4. 16–22
[7] அப். 20. 20, 27
[8] 85. 10
[9] லூ. 18. 13, 14
[10] 1 பே. 5. 7
[11] நீதி. 14. 21. எபி. 6. 10
[12] 147. 3. ஓசி. 6. 1
[13] நீதி. 26. 24, 25

9 என் பிராணசிநேகிதனும், நான் நம்பினவ
னும், என் அப்பம் புசித்தவனுமாகிய மனுஷ
னும், [1]என்மேல் தன் குதிகாலைத் தூக்கினான்.
10 கர்த்தாவே, நீர் எனக்கு இரங்கி, நான்
அவர்களுக்குச் சரிக்கட்ட என்னை எழுந்திருக்
கப்பண்ணும்.
11 என் சத்துரு என்மேல் ஜெயங்கொள்ளாத
தினால், நீர் என்மேல் பிரியமாயிருக்கிறீரென்
று அறிவேன்.
12 நீர் என் உத்தமத்திலே என்னைத் தாங்கி,
என்றென்றைக்கும் உம்முடைய சமுகத்தில்
என்னை நிலைநிறுத்துவீர்.
13 இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் அநாதி
யாய் என்றென்றைக்குமுள்ள சதாகாலங்களி
லும் ஸ்தோத்திரிக்கப்படத்தக்கவர். ஆமென்,
ஆமென்.

42 (கோராகின் புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட மஸ்கீல் என்னும் தாவீதின் சங்கீதம்.)

மானானது நீரோடைகளை வாஞ்சித்துக்
கதறுவதுபோல, தேவனே, என் ஆத்துமா
உம்மை வாஞ்சித்துக் கதறுகிறது.
2 என் ஆத்துமா தேவன்மேல், ஜீவனுள்ள
தேவன்மேலேயே தாகமாயிருக்கிறது; [2]நான்
எப்பொழுது தேவனுடைய சந்நிதியில் வந்து
நிற்பேன்?
3 உன் தேவன் எங்கே என்று அவர்கள் நாள்
தோறும் என்னிடத்தில் சொல்லுகிறபடியால்,
இரவும் பகலும் என் கண்ணீரே எனக்கு உண
வாயிற்று.
4 முன்னே நான் பண்டிகையை ஆசரிக்கிற
ஜனங்களோடேகூட நடந்து, கூட்டத்தின்
களிப்பும் துதியுமான சத்தத்தோடே [3]தேவால
யத்திற்குப் போய்வருவேனே; இவைகளை
நான் நினைக்கும்போது என் உள்ளம் எனக்
குள்ளே உருகுகிறது.
5 என் ஆத்துமாவே, நீ ஏன் கலங்குகிறாய்?
ஏன் எனக்குள் தியங்குகிறாய்? தேவனை நோக்
கிக் காத்திரு; *அவர் சமுகத்து ரட்சிப்பினி
மித்தம் நான் இன்னும் அவரைத் துதிப்பேன்.
6 என் தேவனே, என் ஆத்துமா எனக்குள்
கலங்குகிறது; ஆகையால் யோர்தான் தேசத்
திலும் எர்மோன் மலைகளிலும் சிறுமலையிலு
மிருந்து உம்மை நினைக்கிறேன்.
7 உமது மதகுகளின் இரைச்சலால் †ஆழத்தை
ஆழம் கூப்பிடுகிறது; உமது அலைகளும் திரை
களும் எல்லாம் என்மேல் புரண்டுபோகிறது.
8 ஆகிலும் கர்த்தர் பகற்காலத்திலே தமது
கிருபையைக் கட்டளையிடுகிறார்; இராக்காலத்
திலே அவரைப் பாடும் பாட்டு என் வாயிலி
ருக்கிறது; என் ஜீவனுடைய தேவனை நோக்
கி விண்ணப்பஞ்செய்கிறேன்.
9 நான் என் கன்மலையாகிய தேவனை நோக்
கி: ஏன் என்னை மறந்தீர்? சத்துருவினால் ஒடுக்
கப்பட்டு, நான் ஏன் துக்கத்துடனே திரிய
வேண்டும் என்று சொல்லுகிறேன்.
10 உன் தேவன் எங்கே என்று என் சத்துருக்
கள் நாள்தோறும் என்னோடே சொல்லி, என்
னை நிந்திப்பது என் எலும்புகளை உருவக்குத்
துகிறதுபோல் இருக்கிறது.
என் ஆத்துமாவே, நீ ஏன் கலங்குகிறாய்? 11
ஏன் எனக்குள் தியங்குகிறாய்? தேவனை நோக்
கிக் காத்திரு; என் முகத்திற்கு ரட்சிப்பும் என்
தேவனுமாயிருக்கிறவரை நான் இன்னும்
துதிப்பேன்.

தேவனே, நீர் என் நியாயத்தை விசா 43
ரித்து, பக்தியில்லாத ஜாதியாரோடு எனக்
காக வழக்காடி, சூதும் அநியாயமுமான மனு
ஷனுக்கு என்னைத் தப்புவியும்.
என் அரணாகிய தேவன் நீர்; ஏன் என்னைத் 2
தள்ளிவிடுகிறீர்? சத்துருவினால் ஒடுக்கப்பட்டு
நான் ஏன் துக்கத்துடனே திரியவேண்டும்?
உமது ‡வெளிச்சத்தையும் உமது சத்தியத் 3
தையும் அனுப்பியருளும்; அவைகள் என்னை
நடத்தி, உமது பரிசுத்த பர்வதத்திற்கும் உமது
வாசஸ்தலங்களுக்கும் என்னைக் கொண்டுபோ
வதாக.
அப்பொழுது நான் தேவனுடைய பீடத் 4
தண்டைக்கும், எனக்கு ஆனந்த மகிழ்ச்சியா
யிருக்கிறதேவனிடத்திற்கும்பிரவேசிப்பேன்.
தேவனே, என் தேவனே, உம்மைச் சுரமண்
டலத்தால் துதிப்பேன்.
என் ஆத்துமாவே, நீ ஏன் கலங்குகிறாய்? 5
ஏன் எனக்குள் தியங்குகிறாய்? [4]தேவனை நோக்
கிக் காத்திரு; என் முகத்திற்கு ரட்சிப்பும் என்
தேவனுமாயிருக்கிறவரை நான் இன்னும் து
திப்பேன்.

(கோராகின் புத்திரரில் ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட மஸ்கீல் என்னும் சங்கீதம்.) 44

தேவனே, எங்கள் பிதாக்களுடைய நாட்
களாகிய பூர்வநாட்களில் நீர் நடப்பித்த கிரி
யைகளை* அவர்கள் எங்களுக்கு அறிவித்தார்
கள்; [5]அவைகளை எங்கள்* காதுகளால் கேட்
டோம்.
தேவரீர் உம்முடைய கையினாலே ஜாதி 2
களைத் துரத்தி, [6]இவர்களை நாட்டி; ஜனங்க
ளைத் துன்பப்படுத்தி, இவர்களைப் பரவப்பண்
ணினீர்.
அவர்கள் தங்கள் பட்டயத்தால் தேசத்தைக் 3
கட்டிக்கொள்ளவில்லை; [7]அவர்கள் புயமும்
அவர்களை ரட்சிக்கவில்லை; நீர் அவர்கள்மேல்
பிரியமாயிருந்தபடியால், [8]உம்முடைய வலது
கரமும், உம்முடைய புயமும், உம்முடைய
முகத்தின் பிரகாசமும் அவர்களை ரட்சித்தது.
தேவனே, நீர் என் ராஜா; §யாக்கோபுக்கு 4
ரட்சிப்பைக் கட்டளையிடும்.
உம்மாலே எங்கள் சத்துருக்களைக் கீழே 5
விழத்தாக்கி, [9]எங்களுக்கு விரோதமாய் எழும்
புகிறவர்களை உம்முடைய நாமத்தினால் மிதிப்
போம்.
என் வில்லை நான் நம்பேன், [10]என் பட்டயம் 6
என்னை ரட்சிப்பதில்லை.
நீரே எங்கள் சத்துருக்களினின்று எங்களை 7
ரட்சித்து, எங்களைப் பகைக்கிறவர்களை வெட்
கப்படுத்துகிறீர்.

[1] யோபு 19. 19 யோ. 13. 18
[2] 68. 1: 84. 2. யோ. 7. 37
[3] 122. 1. எசா. 30. 29
* எண். 6. 26
† அலைமேலலை, விக்கினத்தின் மேல் விக்கினம். எரே. 4. 20. எசே. 7. 26. யோனா. 2. 3
‡ ஊரீம் தும்மீம், யாத். 28. 30
[4] 42. 5, 11
[5] யாத். 12. 26, 27
[6] யாத். 15. 17. உபா. 7. 1
[7] யோசு. 24. 12
[8] உபா. 4. 37
§ இஸ்ரவேலுக்கு.
[9] தானி. 8. 4
[10] ஓசி. 1. 7

8 தேவனுக்குள் நித்தம் மேன்மை பாராட்டு
வோம்; [1]உமது நாமத்தை என்றென்றைக்கும்
துதிப்போம்.
9 நீர் எங்களைத் தள்ளிவிட்டு, [2]நாணப்பண்
ணுகிறீர்; எங்கள் சேனைகளுடனே செல்லா
திருக்கிறீர்.
10 சத்துருவுக்கு நாங்கள் இடைந்து [3]பின்னிட்
டுத் திரும்பிப்போகப் பண்ணுகிறீர்; எங்கள்
பகைஞர் தங்களுக்கென்று எங்களைக் கொள்
ளையிடுகிறார்கள்.
11 நீர் எங்களை ஆடுகளைப்போல இரையாக
ஒப்புக்கொடுத்து [4]ஜாதிகளுக்குள்ளே எங்க
ளைச் சிதறடிக்கிறீர்.
12 நீர் உம்முடைய ஜனங்களை இலவசமாக
விற்கிறீர்; [5]அவர்கள் கிரயத்தினால் உமக்கு
லாபமில்லையே.
13 எங்கள் அயலாருக்கு எங்களை நிந்தையாக
வும், [6]எங்கள் சுற்றுப்புறத்தாருக்குப் பரியாச
மும் சக்கந்தமுமாகவும் வைக்கிறீர்.
14 நாங்கள் ஜாதிகளுக்குள்ளே பழமொழியா
யிருக்கவும், ஜனங்கள் எங்களைக் குறித்துத்
தலை துலுக்கவும் செய்கிறீர்.
15 நிந்தித்துத் தூஷிக்கிறவனுடைய சத்தத்தி
னிமித்தமும், சத்துருவினிமித்தமும், [7]பழி
வாங்குகிறவனிமித்தமும்,
16 என் இலச்சை நித்தம் எனக்கு முன்பாக
இருக்கிறது; என் முகத்தின் வெட்கம் என்
னை மூடுகிறது.
17 இவையெல்லாம் எங்கள்மேல் வந்திருந்தும்,
உம்மை நாங்கள் மறக்கவும் இல்லை, [8]உம்மு
டைய உடன்படிக்கைக்குத் துரோகம்பண்ண
வும் இல்லை.
18 நீர் எங்களை வலுசர்ப்பங்களுள்ள இடத்தி
லே நொறுக்கி, [9]மரண இருளினாலே எங்
களை மூடியிருந்தும்;
19 எங்கள் இருதயம் பின்வாங்கவும் இல்லை,
[10]எங்கள் காலடி உம்முடைய பாதையை
விட்டு விலகவும் இல்லை.
20 நாங்கள் எங்கள் தேவனுடைய நாமத்தை
மறந்து, [11]அந்நிய தேவனை நோக்கிக் கையெ
டுத்திருந்தோமானால்,
21 தேவன் அதை ஆராய்ந்து, விசாரியாதிருப்
பாரோ? இருதயத்தின் அந்தரங்கங்களை அவர்
அறிந்திருக்கிறாரே.
22 உமது நிமித்தம் எந்நேரமும் கொல்லப்படு
கிறோம்; [12]அடிக்கப்படும் ஆடுகளைப்போல
எண்ணப்படுகிறோம்.
23 ஆண்டவரே, விழித்துக்கொள்ளும்; ஏன்
நித்திரைபண்ணுகிறீர்? எழுந்தருளும், [13]எங்
களை என்றைக்கும் தள்ளிவிடாதிரும்.
24 ஏன் உம்முடைய முகத்தைமறைத்து, [14]எங்
கள் சிறுமையையும் எங்கள் நெருக்கத்தையும்
மறந்துவிடுகிறீர்?
25 எங்கள் ஆத்துமா புழுதிமட்டும் தாழ்ந்திருக்
கிறது; எங்கள் வயிறு தரையோடு ஒட்டியிருக்
கிறது.
26 எங்களுக்கு ஒத்தாசையாக எழுந்தருளும்;
உம்முடைய கிருபையினிமித்தம் எங்களை மீட்
டுவிடும்.

## 45

(சோஷனீம் என்னும் வாத்தியத்திலே வாசிக்கக்கோரா
கின் புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்
பட்ட நேசப்பாட்டாகிய சங்கீதம்.)

என் இருதயம் நல்ல விசேஷத்தினால்
பொங்குகிறது; நான் ராஜாவைக் குறித்துப்
பாடினகவியைச் சொல்லுகிறேன்; என் நாவு
விரைவாய் எழுதுகிறவனுடைய எழுத்தாணி.
எல்லா மனுபுத்திரரிலும் நீர் மகா சவுந்தரிய 2
முள்ளவர்; [15]உம்முடைய உதடுகளில் அருள்
பொழிகிறது; [16]ஆகையால் தேவன் உம்மை
என்றென்றைக்கும் ஆசீர்வதிக்கிறார்.
சவுரியவானே, உமது மகிமையும் உமது 3
மகத்துவமுமாகிய [17]உம்முடைய பட்டயத்தை
நீர் உம்முடைய அரையிலே கட்டிக்கொண்டு,
சத்தியத்தினிமித்தமும், நீதியுடன்கூடிய 4
சாந்தத்தினிமித்தமும், [18]உமது மகத்துவத்தி
லே ஜெயமாக ஏறிவாரும்; உமது வலதுகரம்
பயங்கரமானவைகளை உமக்கு விளங்கப்பண்
ணும்.
உம்முடைய அம்புகள் கூர்மையானவை 5
கள், [19]அவைகள் ராஜாவுடைய சத்துருக்க
ளின் இருதயத்திற்குள் பாயும்; ஜனசதளங்கள்
உமக்குக் கீழே விழுவார்கள்.
தேவனே, உமது சிங்காசனம் என்றென் 6
றைக்குமுள்ளது, [20]உமது ராஜ்யத்தின் செங்
கோல் நீதியுள்ள செங்கோலாயிருக்கிறது.
நீர் நீதியை விரும்பி, அக்கிரமத்தை வெறுக் 7
கிறீர்; ஆதலால் தேவனே, உம்முடைய தே
வன் உமது தோழரைப்பார்க்கிலும் [21]உம்மை
ஆனந்த தைலத்தினால் அபிஷேகம்பண்ணி
னார்.
தந்தத்தினால் செய்த அரமனைகளிலிருந்து 8
புறப்படுகையில், நீர் மகிழும்படி உமது வஸ்
திரங்களெல்லாம் வெள்ளைப்போளம் சந்தனம்
லவங்கம் இவைகளின் [22]வாசனை பொருந்திய
தாயிருக்கிறது.
உமது நாயகிகளுக்குள்ளே அரசரின் குமா 9
ரத்திகளுண்டு, [23]ராஜஸ்திரீ ஓப்பீரின் தங்கம்
அணிந்தவளாய் உமது வலது பாரிசத்தில் நிற்
கிறாள்.
குமாரத்தியே கேள், நீ உன் செவியைச் 10
சாய்த்துச் சிந்தித்துக்கொள்; [24]உன் ஜனத்தை
யும் உன் தகப்பன் வீட்டையும் மறந்துவிடு.
அப்பொழுது ராஜா உன் அழகில் பிரியப் 11
படுவார்; [25]அவர் உன் ஆண்டவர், [26]ஆகை
யால் அவரைப் பணிந்துகொள்.
தீருகுமாரத்தி காணிக்கை கொண்டுவரு 12
வாள்; [27]ஜனங்களில் ஐசுவரியவான்களும்
உன் தயவை நாடிவணங்குவார்கள்.
ராஜகுமாரத்தி உள்ளாக பூரணமகிமையுள் 13
ளவள்; அவள் *உடை பொற்சரிகையாயிருக்
கிறது.
சித்திரத்தையலாடை தரித்தவளாய், [28]ராஜாவி 14
னிடத்தில் அழைத்துக்கொண்டுவரப்படுவாள்;
அவள் பின்னாலே செல்லும் அவளுடைய

1 எரே. 9. 24. ரோ. 2. 17
2 74. 1. புல. 3. 31, 32
3 லேவி. 26. 17. உபா. 28. 25, 64
4 உபா. 4. 27
5 உபா. 32. 30 ஏசா. 52. 3, 4
6 உப. 28. 37. எரே. 24. 9
7 8. 2
8 தானி. 9. 13
9 ஏசா. 35. 7
10 யோபு 23. 11, 12
11 யோபு 31. 26. 28
12 ரோ. 8. 36
13 9. வச.
14 யோபு 13. 24
15 உன்ன. 5. 9–16. யோ. 7. 46
16 ஓா. 4. 22
17 ஏசா. 49. 2. எபி. 4. 12. வெளி. 1. 16
18 வெளி. 6. 2
19 38. 2
20 93. 2. எபி. 1. 8, 9
21 1 இரா. 1.39, 40. ஏசா. 61.1, 3. கொலோ. 1. 18, 19
22 உன்ன. 1. 3: 3. 6
23 1 இரா. 2.19. உன்ன. 6. 8
24 ஆதி. 2. 14. உபா. 33. 9. மத். 10. 37
25 உன்ன. 4. 9. ஐ. ஏசா. 54. 5
26 95. 6
27 ஏசா. 23. 18: 60. 3. அப். 21. 3–6
* உடுப்பு. ஏசா. 61. 10. வெளி. 19. 7, 8
28 உன்ன. 1. 4

தோழிகளாகிய கன்னிகைகள் உம்மிடத்தில்
கூட்டிக்கொண்டு வரப்படுவார்கள்.
15 அவர்கள் மகிழ்ச்சியோடும் [1]களிப்போடும்
வந்து, ராஜ அரமனைக்குள் பிரவேசிப்பார்கள்.
16 உமது பிதாக்களுக்குப் பதிலாக உமது குமா
ரர் இருப்பார்கள்; [2]அவர்களைப் பூமியெங்கும்
பிரபுக்களாக வைப்பீர்.
17 உமது நாமத்தை எல்லாத் தலைமுறைகளி
லும் [3]பிரஸ்தாபப்படுத்துவேன்; இதினிமித்
தம் ஜனங்கள் உம்மை என்றென்றைக்கு
முள்ள சதாகாலங்களிலும் துதிப்பார்கள்.

**46** (அலாமோத்தில் வாசிக்கக் கோராகின் புத்திரரி
லுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட பாட்டு.)

தேவன் நமக்கு அடைக்கலமும் பெலனும்,
[4]ஆபத்துக்காலத்தில் அனுகூலமான துணையு
மானவர்.
2 ஆகையால் பூமி நிலைமாறினாலும், மலைகள்
நடுச்சமுத்திரத்தில் சாய்ந்துபோனாலும்,
3 அதின் ஜலங்கள் கொந்தளித்துப் பொங்கி,
[5]அதின் பெருக்கினால் பர்வதங்கள் அதிர்ந்தா
லும், நாம் பயப்படோம்.
4 ஒரு நதியுண்டு, [6]அதின் நீர்க்கால்கள் தேவ
னுடைய நகரத்தையும், உன்னதமானவர்
வாசம்பண்ணும் பரிசுத்த ஸ்தலத்தையும் சந்
தோஷிப்பிக்கும்.
5 தேவன் அதின் நடுவில் இருக்கிறார், [7]அது
அசையாது; அதிகாலையிலே தேவன் அதற்குச்
சகாயம்பண்ணுவார்.
6 ஜாதிகள் கொந்தளித்தது, ராஜ்யங்கள் தத்
தளித்தது; [8]அவர் தமது சத்தத்தை முழங்கப்
பண்ணினார், பூமி உருகிப்போயிற்று.
7 சேனைகளின் கர்த்தர் நம்மோடிருக்கிறார்;
[9]யாக்கோபின்தேவன் நமக்கு உயர்ந்த அடைக்
கலமானவர்.
8 பூமியிலே பாழ்க்கடிப்புகளை நடப்பிக்கிற
கர்த்தருடைய செய்கைகளை வந்து பாருங்கள்.
9 அவர் பூமியின் கடைமுனைமட்டும் யுத்தங்
களை ஓயப்பண்ணுகிறார்; வில்லை ஒடித்து,
ஈட்டியை முறிக்கிறார்; [10]இரதங்களை நெருப்
பினால் சுட்டெரிக்கிறார்.
10 நீங்கள் அமர்ந்திருந்து, நானே தேவ
னென்று அறிந்துகொள்ளுங்கள்; [11]ஜாதிகளுக்
குள்ளே உயர்ந்திருப்பேன், பூமியிலே உயர்ந்
திருப்பேன்.
11 சேனைகளின் கர்த்தர் நம்மோடிருக்கிறார்,
யாக்கோபின் தேவன் நமக்கு உயர்ந்த அடைக்
கலமானவர்.

**47** (கோராகின் புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்பு
விக்கப்பட்ட சங்கீதம்.)

சகல ஜனங்களே, கைகொட்டி, [12]தேவ
னுக்கு முன்பாகக் கெம்பீரசத்தமாய் ஆர்ப்பரி
யுங்கள்.
2 உன்னதமானவராகிய கர்த்தர் பயங்கரமா
னவரும், [13]பூமியின்மீதெங்கும் மகத்துமான
ராஜாவுமாயிருக்கிறார்.
3 ஜனங்களை நமக்கு வசப்படுத்தி, ஜாதிகளை
நம்முடைய பாதங்களுக்குக் கீழ்ப்படுத்துவார்.
தமக்குப் பிரியமான யாக்கோபின் சிறப் 4
பான தேசத்தை [14]நமக்குச் சுதந்தரமாகத் தெ
ரிந்தளிப்பார்.
தேவன் ஆர்ப்பரிப்போடும், கர்த்தர் எக் 5
காள சத்தத்தோடும் [15]உயர எழுந்தருளி
னார்.
தேவனைப் போற்றிப் பாடுங்கள், பாடுங் 6
கள்; நம்முடைய ராஜாவைப் போற்றிப் பாடுங்
கள், பாடுங்கள்.
தேவன் பூமியனைத்திற்கும் ராஜா; [16]கருத்து 7
டனே அவரைப் போற்றிப் பாடுங்கள்.
தேவன் ஜாதிகள்மேல் அரசாளுகிறார்; 8
தேவன் தமது பரிசுத்த சிங்காசனத்தின்மேல்
வீற்றிருக்கிறார்.
ஜனங்களின் பிரபுக்கள் ஆபிரகாமின் தேவ 9
னுடைய ஜனங்களாகச் சேர்க்கப்படுகிறார்கள்;
[17]பூமியின் கேடகங்கள் தேவனுடையவைகள்;
அவர் மகா உன்னதமானவர்.

(கோராகின் புத்திரருக்கு ஒப்புவிக்கப்பட்ட
சங்கீதப்பாட்டு.) **48**

கர்த்தர் பெரியவர், அவர் நமது தேவனு
டைய நகரத்திலும், [18]தமது பரிசுத்த பர்வதத்
திலும் மிகவும் துதிக்கப்படத்தக்கவர்.
வடதிசையிலுள்ள சீயோன் பர்வதம் வடிப் 2
பமான ஸ்தானமும் சர்வபூமியின் மகிழ்ச்சியு
மாயிருக்கிறது, [19]அதுவே மகாராஜாவின்
நகரம்.
அதின் அரமனைகளில் தேவன் உயர்ந்த 3
அடைக்கலமாக அறியப்பட்டிருக்கிறார்.
இதோ, ராஜாக்கள் கூடிக்கொண்டு, [20]ஏக 4
மாய்க் கடந்துவந்தார்கள்.
அவர்கள் அதைக்கண்டபோது பிரமித்துக் 5
கலங்கி விரைந்தோடினார்கள்.
அங்கே நடுக்கங்கொண்டு, [21]பிரசவ வேத 6
னைப்படுகிற ஸ்திரீயைப்போல வேதனைப்பட்
டார்கள்.
கீழ்காற்றினால் தர்ஷீசின் கப்பல்களை [22]நீர் 7
உடைக்கிறீர்.
நாம் கேள்விப்பட்டபடியே நமது தேவ 8
னுடைய நகரமாகிய சேனைகளுடைய கர்த்த
ரின் நகரத்திலே கண்டோம்; [23]தேவன் அதை
என்றென்றைக்கும் ஸ்திரப்படுத்துவார்.
தேவனே, உமது ஆலயத்தின் நடுவிலே, 9
உமது கிருபையைச் சிந்தித்துக்கொண்டிருக்
கிறோம்.
தேவனே, உமது நாமம் விளங்குகிறது 10
போல [24]உமது புகழ்ச்சியும் பூமியின் கடை
யாந்தரங்கள் பரியந்தமும்விளங்குகிறது; உமது
வலதுகரம் நீதியால் நிறைந்திருக்கிறது.
உம்முடைய நியாயத்தீர்ப்புகளினிமித்தம் 11
சீயோன் பர்வதம் மகிழ்வதாக, யூதாவின் குமா
ரத்திகள் களிகூருவார்களாக.
சீயோனைச் சுற்றி உலாவி, அதின் கொத் 12
தளங்களை எண்ணுங்கள்.
பின்வரும் சந்ததிக்கு நீங்கள் விவரிப்பதற் 13
காக, அதின் அலங்கத்தைக் கவனித்து, அதின்
அரமனைகளை உற்றுப்பாருங்கள்.

[1] ஏசா. 35. 10. யூதா. 24. வெளி. 19. 7
[2] 1 பே. 2. 9. வெளி. 1. 6: 5. 10: 20. 6
[3] மல். 1. 11
[4] உபா. 4. 7
[5] எரே. 5. 22. மத். 7. 25
[6] ஏசா. 8. 7: 60. 14. எசே. 47. 1-12. வெளி. 21. 2, 3: 22 1, 2
[7] உபா. 23. 4. ஏசா. 12. 6
[8] 2. 1-4
[9] எண். 14. 9
[10] எசே. 39. 9. 10
[11] ஏசா. 2. 11, 17
[12] ஏசா. 55. 12
[13] உபா. 7. 21: மல். 1. 14
[14] 1 பே. 1. 4
[15] 68. 18, 33. அப். 1. 5, 11
[16] சகரி. 14. 9. 1 கொ. 14. 15, 16
[17] நீதி. 30. 5
[18] 65. 1. ஏசா 2. 2, 3 சகரி. 8. 3
[19] 50. 2. புல. 2 15. ஏசா. 14 13. மத். 5. 35
[20] 2 சாமு. 10 6-19
[21] யாத். 15. 14 16
[22] எசே. 27. 25, 26
[23] ஏசா. 2. 2
[24] யோசு. 7. 9. மல். 1. 11, 14

14 இந்த தேவன் என்றென்றைக்குமுள்ள
சதாகாலங்களிலும் நம்முடைய தேவன்;
*மரணபரியந்தம் நம்மை நடத்துவார்.

49 (கோராகின் புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

ஜனங்களே, நீங்கள் எல்லாரும் இதைக்
கேளுங்கள்.
2 பூமியின் குடிகளே, [1]சிறியோரும் பெரி
யோரும் ஐசுவரியவான்களும் எளியவர்களு
மாகிய நீங்கள் எல்லாரும் ஏகமாய்ச் செவி
கொடுங்கள்.
3 என் வாய் ஞானத்தைப் பேசும்; என் இரு
தயம் உணர்வைத் தியானிக்கும்.
4 என் செவியை உவமைமொழிக்குச்
சாய்த்து, [2]என் மறைபொருளைச் சுரமண்ட
லத்தின்மேல் வெளிப்படுத்துவேன்.
5 என்னைத் தொடருகிறவர்களுடைய அக்
கிரமம் என்னைச் சூழ்ந்துகொள்ளுந் தீங்கு
நாட்களில், [3]நான் பயப்பட வேண்டிய
தென்ன?
6 தங்கள் செல்வத்தை நம்பி தங்கள் திர
ளான ஐசுவரியத்தினால் பெருமைபாராட்டு
கிற,
7 ஒருவனாவது, தன் சகோதரன் அழிவைக்
காணாமல் [4]இனி என்றைக்கும் உயிரோடிருக்
கும்படி,
8 எவ்விதத்தினாலாவது அவனை மீட்டுக்கொள்
ளவும், [5]அவனிமித்தம் மீட்கும்பொருளை
தேவனுக்குக் கொடுக்கவுங்கூடாதே.
9 அவர்கள் ஆத்துமமீட்பு மிகவும் அருமையா
யிருக்கிறது; அது ஒருபோதும் முடியாது.
10 ஞானிகளும் மரித்து, அஞ்ஞானிகளும்
நிர்மூடரும் ஏகமாய் அழிந்து, [6]தங்கள் ஆஸ்
தியை மற்றவர்களுக்கு வைத்துப்போகிற
தைக் காண்கிறான்.
11 தங்கள் வீடுகள் நித்தியகாலமாகவும், தங்கள்
வாசஸ்தலங்கள் தலைமுறை தலைமுறையாக
வும் இருக்குமென்பது அவர்கள் உள்ளத்தின்
அபிப்பிராயம்; [7]அவர்கள் தங்கள் நாமங்களைத்
தங்கள் நிலங்களுக்குத் தரிக்கிறார்கள்.
12 ஆகிலும் கனம்பொருந்தியவனு யிருக்கிற
மனுஷன் நிலைத்திருக்கிறதில்லை; [8]அழிந்து
போகும் மிருகங்களுக்கு ஒப்பாயிருக்கிறான்.
13 இதுதான் அவர்கள் வழி, இததான் அவர்
கள் பைத்தியம்; ஆகிலும் அவர்கள் சந்ததி
யார் அவர்கள் சொல்லை மெச்சிக்கொள்ளுகி
றார்கள்.
14 ஆட்டு மந்தையைப்போல பாதாளத்திலே
கிடத்தப்படுகிறார்கள்; மரணம் அவர்களை
†மேய்ந்துபோடும்; [9]செம்மையானவர்கள் அதி
காலையில் அவர்களை ஆண்டுகொள்வார்கள்;
அவர்கள் தங்கள் வாசஸ்தலத்தில் நிலைத்திருக்
கக்கூடாதபடி அவர்களுடைய ரூபத்தைப்
பாதாளம் அழிக்கும்.
15 ஆனாலும் தேவன் என் ஆத்துமாவை பாதா
ளத்தின் வல்லமைக்குத் தப்புவித்து மீட்பார்,
அவர் என்னை ஏற்றுக்கொள்வார்.

* என்றைக்கும். 73. 24. ஏசா. 58. 11
1 62. 9
2 78. 2. மத். 13. 35
3 ஓசி. 7. 2. ரோ. 8. 33, 34
4 அப். 13. 33-37
5 யோபு 36. 18. மத். 16. 26. 1 பே. 1. 18, 19
6 பிர. 2. 16-21
7 2 சாமு. 18. 18
8 39. 5
† பட்சிக்கும்.
9 தானி. 7. 22. வெளி. 2. 26, 27
10 லூ. 12. 20
11 ஆதி. 15. 15
12 பிர. 3. 18, 19
13 ஏசா. 9. 6
‡ பூமியின்குடிகளை.
14 68. 24
15 வெளி. 22. 20
16 தானி. 7. 10
17 ஏசா. 1. 2
18 மத். 24. 31 எபி. 12. 24
19 வெளி. 20. 12
20 மீகா. 6. 1-8
21 ஏசா. 1. 11
22 அப். 17. 25. எபி. 10. 4, 6
23 1 கொ. 10. 26, 28

ஒருவன் ஐசுவரியவானாகி, அவன் வீட் 16
டின் மகிமை பெருகும்போது, நீ பயப்
படாதே.
அவன் மரிக்கும்போது ஒன்றும் கொண்டு 17
போவதில்லை; [10]அவன் மகிமை அவனைப்
பின்பற்றிச் செல்வதுமில்லை.
அவன் உயிரோடிருக்கையில் தன் ஆத்து 18
மாவை வாழ்த்தினாலும், நீ உனக்கு நன்மையை
நாடினாய் என்று மனுஷர் அவனைப் புகழ்ந்தா
லும்,
அவன் என்றென்றைக்கும் வெளிச்சத் 19
தைக் காணாத [11]தன் பிதாக்களின் சந்ததியைச்
சேருவான்.
கனம்பொருந்தினவனாயிருந்தும் அறிவில் 20
லாத மனுஷன் [12]அழிந்துபோகும் மிருகங்க
ளுக்கு ஒப்பாயிருக்கிறான்.

(ஆசாபின் சங்கீதம்.) 50

வல்லமையுள்ள [13]தேவனாகிய கர்த்தர் வச
னித்து, சூரியன் உதிக்குந் திசைதொடங்கி
அது அஸ்தமிக்குந் திசைவரைக்குமுள்ள
‡பூமியைக் கூப்பிடுகிறார்.
பூரண வடிவுள்ள சீயோனிலிருந்து [14]தே 2
வன் பிரகாசிக்கிறார்.
நம்முடைய தேவன் வருவார் [15]மவுனமா 3
யிரார்; அவருக்கு முன் அக்கினி பட்சிக்கும்;
[16]அவரைச் சுற்றிலும் மகாபுசல் கொந்தளிப்பா
யிருக்கும்.
அவர் தம்முடைய ஜனத்தை நியாயந்தீர்க்க 4
உயர இருக்கும் வானங்களையும் பூமியையும்
[17]கூப்பிடுவார்.
பலியினாலே என்னோடே உடன்படிக்கை 5
பண்ணின என்னுடைய பரிசுத்தவான்களை
[18]என்னிடத்தில் கூட்டுங்கள் என்பார்.
வானங்கள் அவருடைய நீதியை அறிவிக் 6
கும்; [19]தேவனே நியாயாதிபதி.
என் ஜனமே, [20]கேள், நான் பேசுவேன்; 7
இஸ்ரவேலே, உனக்கு விரோதமாய்ச் சாட்சி
யிடுவேன்; நானே தேவன், உன் தேவனா
யிருக்கிறேன்.
உன் பலிகளினிமித்தம் உன்னைக் கடிந்து 8
கொள்ளேன்; [21]உன் தகனபலிகள் எப்போ
தும் எனக்கு முன்பாக இருக்கிறது.
உன் வீட்டிலிருந்து காளைகளையும், [22]உன் 9
தொழுவங்களிலிருந்து ஆட்டுக்கடாக்களையும்
நான் வாங்கிக்கொள்வதில்லை.
சகல காட்டுஜீவன்களும், பர்வதங்களில் 10
ஆயிரமாயிரமாய்த் திரிகிற மிருகங்களும் என்
னுடையவைகள்.
மலைகளிலுள்ள பறவைகளையெல்லாம் அறி 11
வேன்; வெளியில் நடமாடுகிறவைகளெல்லாம்
என்னுடையவைகள்.
நான் பசியாயிருந்தால் உனக்குச் சொல் 12
லேன்; [23]பூமியும் அதின் நிறைவும் என்னு
டையவைகளே.
நான் எருதுகளின் மாம்சம் புசித்து, ஆட் 13
டுக்கடாக்களின் ரத்தம் குடிப்பேனோ?

14 நீ தேவனுக்கு ஸ்தோத்திரபலியிட்டு, [1]உன்
னதமானவருக்கு உன் பொருத்தனைகளைச்
செலுத்தி;
15 ஆபத்துக்காலத்தில் என்னை நோக்கிக் கூப்
பிடு; [2]நான் உன்னை விடுவிப்பேன், நீ என்னை
மகிமைப்படுத்துவாய்.
16 தேவன் துன்மார்க்கனை நோக்கி: [3]நீ
என் பிரமாணங்களை எடுத்துரைக்கவும், என்
உடன்படிக்கையை உன் வாயினால் சொல்ல
வும், உனக்கு என்ன நியாயமுண்டு.
17 சிட்சையை நீ பகைத்து, [4]என் வார்த்தை
களை உனக்குப் பின்னாக எறிந்து போடுகிறாய்.
18 நீ திருடனைக் காணும்போது அவனோடு
ஒருமித்துப் போகிறாய்; [5]விபசாரரோடும்
உனக்குப் பங்குண்டு.
19 உன் வாயைப் பொல்லாப்புக்குத் திறக்கி
றாய், உன் நாவு சற்பனையைப் பிணைக்கிறது.
20 நீ உட்கார்ந்து உன் சகோதரனுக்கு விரோ
தமாய்ப் பேசி, உன் தாயின்மகனுக்கு அவ
தூறு உண்டாக்குகிறாய்.
21 இவைகளை நீ செய்யும்போது நான் [6]மவுன
மாயிருந்தேன்; உன்னைப்போல நானும் இருப்
பேன் என்று நினைவுகொண்டாய்; ஆனாலும்
நான்உன்னைக் கடிந்துகொண்டு, அவைகளை
உன் கண்களுக்கு முன்பாக ஒவ்வொன்றாக
நிறுத்துவேன்.
22 தேவனை [7]மறக்கிறவர்களே, இதைச் சிந்
தித்துக்கொள்ளுங்கள்; இல்லாவிட்டால் நான்
உங்களைப் பீறிப்போடுவேன், ஒருவரும் உங்
களை விடுவிப்பதில்லை.
23 ஸ்தோத்திரபலியிடுகிறவன் [8]என்னை மகி
மைப்படுத்துகிறான்; [9]தன் வழியைச் செவ்
வைப்படுத்துகிறவனுக்கு தேவனுடைய ரட்
சிப்பை வெளிப்படுத்துவேன் என்று சொல்
லுகிறார்.

**51** (பத்சேபாளிடத்தில் தாவீது பாவத்திற்குட்பட்ட பின்பு நாத்தான் தீர்க்கதரிசி அவனிடத்தில் வந்து, அவன் பாவத்தை உணர்த்தினபோது பாடி, ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

தேவனே, உமது கிருபையின்படி எனக்கு
இரங்கும், [10]உமது மிகுந்த இறக்கங்களின்படி
என் மீறுதல்கள் நீங்க என்னை சுத்திகரியும்.
2 என் அக்கிரமம் நீங்க என்னை முற்றிலும்
கழுவி, [11]என் பாவமற என்னைச் சுத்திகரியும்.
3 என் மீறுதல்களை நான் அறிந்திருக்கிறேன்;
[12]என் பாவம் எப்பொழுதும் எனக்கு முன்
பாக நிற்கிறது.
4 தேவரீர் ஒருவருக்கே விரோதமாக நான்
பாவஞ்செய்து, உமது கண்களுக்கு முன்
பாகப் பொல்லாங்கானதை நடப்பித்தேன்;
நீர் பேசும்போது உம்முடைய நீதி விளங்க
வும், நீர் நியாயந்தீர்க்கும்போது உம்முடைய
பரிசுத்தம் விளங்கவும் இதை அறிக்கையிடு
கிறேன்.
5 இதோ, நான் துர்க்குணத்தில் உருவா
னேன்; [14]என் தாய் என்னைப் பாவத்தில் கர்ப்
பந்தரித்தாள்.
இதோ, உள்ளத்தில் உண்மையிருக்க விரும் 6
புகிறீர்; [15]அந்தக்கரணத்தில் ஞானத்தை எனக்
குத் தெரியப்படுத்துவீர்.
நீர் என்னை ஈசோப்பினால் சுத்திகரியும், 7
அப்பொழுது நான் சுத்தமாவேன்; [16]என்
னைக் கழுவியருளும், அப்பொழுது நான்
உறைந்த மழையிலும் வெண்மையாவேன்.
நான் சந்தோஷமும் மகிழ்ச்சியும் கேட் 8
கும்படி செய்யும், [17]அப்பொழுது நீர் நொ
றுக்கின எலும்புகள் களிகூரும்.
என் பாவங்களைப் பாராதபடிக்கு நீர் [18]உமது 9
முகத்தை மறைத்து, என் அக்கிரமங்களை
யெல்லாம் நீக்கியருளும்.
தேவனே, சுத்த இருதயத்தை என்னிலே 10
சிருஷ்டியும், [19]நிலைவரமான ஆவியை என்
உள்ளத்திலே புதுப்பியும்.
உமது சமுகத்தை விட்டு என்னைத் தள் 11
ளாமலும், [20]உமது பரிசுத்த ஆவியை என்
னிடத்திலிருந்து எடுத்துக் கொள்ளாமலும்
இரும்.
உமது ரட்சணியத்தின் சந்தோஷத்தைத் 12
திரும்பவும் எனக்குத்தந்து, [21]உற்சாகமான
ஆவி என்னைத் தாங்கும்படி செய்யும்.
அப்பொழுது பாதகருக்கு உமது வழிகளை 13
[22]உபதேசிப்பேன்; பாவிகள் உம்மிடத்தில்
மனந்திரும்புவார்கள்.
தேவனே, என்னை ரட்சிக்குந் தேவனே, 14
இரத்தப்பழிகளுக்கு என்னை நீங்கலாக்கி
விடும்; [23]அப்பொழுது என் நாவு உம்முடைய
நீதியைக் கெம்பீரமாய்ப்பாடும்.
ஆண்டவரே, என் உதடுகளைத் திறந்தரு 15
ளும்; அப்பொழுது என் வாய் உம்முடைய
புகழை அறிவிக்கும்.
பலியை நீர் விரும்புகிறதில்லை, [24]விரும்பி 16
னால் செலுத்துவேன்; தகனபலியும் உமக்
குப் பிரியமானதல்ல.
தேவனுக்கேற்கும் பலிகள் நொறுங்குண்ட 17
ஆவிதான்; [25]தேவனே, நொறுங்குண்டதும்
நருங்குண்டதுமான இருதயத்தை நீர் புறக்க
ணியீர்.
சீயோனுக்கு உமது பிரியத்தின்படி நன் 18
மைசெய்யும்; எருசலேமின் மதில்களைக் கட்டு
வீராக.
அப்பொழுது தகனபலியும் சர்வாங்க 19
தகனபலியுமாகிய நீதியின் பலிகளில் பிரியப்
படுவீர்; [26]அப்பொழுது உமது பீடத்தின்மேல்
காளைகளைப் பலியிடுவார்கள்.

(தாவீது அபிமெலேக்கின் வீட்டுக்கு வந்தானென்று ஏதோமியனாகிய தோவேக்குவந்து சவுலுக்கு அறிவித்த பின்பு தாவீதினால் பாடப்பட்டு ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட மஸ்கீல் என்னும் சங்கீதம்.) **52**

பலவானே, பொல்லாப்பில் என் பெருமை
பாராட்டுகிறாய்? [27]தேவனுடைய கிருபை எந்
நாளுமுள்ளது.
நீ கேடுகளைச் செய்ய எத்தனம்பண்ணு 2
கிறாய், கபடுசெய்யும் உன் நாவு தீட்டப்
பட்ட சவரகன் கத்தியைப்போல் இருக்கிறது.

1 பிர. 5. 4, 5. ஓசி. 14: 2. எபி. 13. 15
2 107. 6. ஓ. சகரி. 13. 9
3 எசா. 1. 11-15. யோ. 4. 24. ரோ. 2. 21, 22
4 நீதி 5. 12, 13
5 ரோ. 1. 32. 1 தீமோ 5. 22
6 பிர. 8. 11, 12. ரோ. 2. 4. 2 பே. 3 9
7 9. 17. எசா. 51. 13
8 ரோ. 12. 1. 1 பே. 2. 9
9 அப். 10. 2-4. கலா. 6. 16. பிலி 1. 27
10 எசா. 43. 25: 44. 22. அப். 3. 19. 20
11 எபி. 9. 14 1 யோ. 1. 7, 9. வெளி. 1. 5
12 நீதி. 28. 13. எசா. 59. 12
13 2 சாமு. 12. 13. லூ. 15. 21. ரோ. 3. 4
14 யோபு 14. 4. யோ. 3. 6. ரோ. 5. 12. எபே. 2. 3
15 யோபு 38. 36
16 லேவி. 14. 4-9. எண். 19. 18. எசா. 1. 18. எபி. 9. 19
17 மத். 5. 4
18 எரே. 16. 17
19 எசே 36. 25-27. யோ. 3. 3. அப். 15. 9. எபே. 2. 10
20 ஆதி. 4. 14. லூ. 11. 13 ரோ. 8. 9
21 ரோ. 8. 15. 2 கொ. 3. 17. கலா. 4. 6, 7
22 சகரி. 3. 1-8. யாக். 5. 19, 20
23 2 சாமு. 11 17: 12. 9
24 ஓசி. 6: 6. மீகா. 6. 7, 8. எபி. 10. 4-10
25 எசா. 57 15: 66. 2
26 4. 5. மல் 3. 3. ரோ. 12. 1
27 136. 1, 2

3 நன்மையைப்பார்க்கிலும் தீமையையும்,
[1]யதார்த்தம் பேசுகிறதைப் பார்க்கிலும் பொய்
யையும் விரும்புகிறாய்.
4 கபடமுள்ள நாவே, சங்கரிக்கும் சகல
வார்த்தைகளையும் நீ விரும்புகிறாய்.
5 தேவன் உன்னை என்றென்றைக்கும் இரா
தபடி அழித்துப்போடுவார்; [2]அவர் உன்னைப்
பிடித்து, உன் வாசஸ்தலத்திலிருந்து பிடுங்கி,
நீ ஜீவனுள்ளோர் தேசத்தில் இராதபடிக்கு
உன்னை நிர்மூலமாக்குவார்.
6 நீதிமான்கள் அதைக் கண்டு பயந்து, அவ
னைப்பார்த்து நகைத்து:
7 இதோ, தேவனைத் தன் பெலனாக எண்
ணாமல், தன் செல்வப் பெருக்கத்தை [3]நம்பி,
தன் தீவினையில் பலத்துக்கொண்ட மனுஷன்
இவன்தான் என்பார்கள்.
8 நானோ தேவனுடைய ஆலயத்தில் பச்சை
யான ஒலிவமரத்தைப் போலிருக்கிறேன்,
[4]தேவனுடைய கிருபையை என்றென்றைக்
கும் நம்பியிருக்கிறேன்.
9 நீரே இதைச் செய்தீர் என்று உம்மை என்
றென்றைக்கும் துதித்து, *உமது நாமத்திற்
குக் காத்திருப்பேன்; [5]உம்முடைய பரிசுத்த
வான்களுக்கு முன்பாக அது நலமாயிருக்
கிறது.

**53** (மகலாத் என்னும் வாத்தியத்தில் வாசிக்கப்படும்படி தாவீதினால் பாடப்பட்டு ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப் பட்ட மஸ்கீல் என்னும் சங்கீதம்.)

தேவன் இல்லை என்று மதிகேடன் தன்
இருதயத்தில் சொல்லிக்கொள்ளுகிறான்.
[6]அவர்கள் தங்களைக்கெடுத்து, அருவருப்பான
அக்கிரமங்களைச் செய்துவருகிறார்கள்; [7]நன்
மைசெய்கிறவன் ஒருவனும் இல்லை.
2 தேவனைத் தேடுகிற உணர்வுள்ளவன் உண்
டோ என்று பார்க்க, [8]தேவன் பரலோகத்தி
லிருந்து மனுபுத்திரரைக் கண்ணோக்கினார்.
3 அவர்கள் எல்லாரும் வழிவிலகி, ஏகமாய்க்
கெட்டுப் போனார்கள்; நன்மை செய்கிறவன்
இல்லை, ஒருவனாகிலும் இல்லை.
4 அக்கிரமக்காரருக்கு [9]அறிவு இல்லையா?
அப்பத்தைப் பட்சிக்கிறதுபோல் என் ஜனத்
தைப் பட்சிக்கிறார்களே; அவர்கள் தேவனைத்
தொழுதுகொள்ளுகிறதில்லை.
5 உனக்கு விரோதமாய்ப் பாளயமிறங்கின
வனுடைய எலும்புகளை தேவன் சிதறப்பண்
ணினபடியால், [10]பயமில்லாத இடத்தில் மிக
வும் பயந்தார்கள்; தேவன் அவர்களை வெறுத்த
படியினால் நீ அவர்களை வெட்கப்படுத்தினாய்.
6 சீயோனிலிருந்து இஸ்ரவேலுக்கு ரட்சிப்பு
வருவதாக; [11]தேவன் தம்முடைய ஜனத்தின்
சிறையிருப்பைத் திருப்பும்போது, யாக்கோ
புக்குக் களிப்பும் இஸ்ரவேலுக்கு மகிழ்ச்சி
யும் உண்டாகும்.

**54** (தாவீது தங்களிடத்தில் ஒளித்துக்கொண்டிருக்கிறான் என்று சீப்பூரார் வந்து சவுலுக்குச் சொன்னபோது, நெகிநோத்தில் வாசிக்கத் தாவீது பாடி ராகத்தலைவனுக்கு ஒப்பிவித்த மஸ்கீல் என்னும் சங்கீதம்.)

தேவனே, உமது நாமத்தினிமித்தம் என்
னை ரட்சித்து, உமது வல்லமையினால் எனக்கு
நியாயஞ்செய்யும்.
தேவனே, என் விண்ணப்பத்தைக் கேட்டு, 2
என் வாயின் வார்த்தைகளுக்குச் செவி
கொடும்.
அந்நியர் எனக்கு விரோதமாய் எழும்புகி 3
றார்கள்; கொடியர் என் பிராணனை வாங்கத்
தேடுகிறார்கள்; [12]தேவனைத் தங்களுக்கு முன்
பாக நிறுத்தி நோக்கார்கள்.
இதோ, தேவன் எனக்குச் சகாயர்; [13]ஆண் 4
டவர் என் ஆத்துமாவை ஆதரிக்கிறவர்களோ
டே இருக்கிறார்.
அவர் என் சத்துருக்களுக்குத் தீமைக்குத் 5
தீமையைச் சரிக்கட்டுவார்; உமது சத்தியத்தி
னிமித்தம் அவர்களை நிர்மூலமாக்கும்.
உற்சாகத்துடன் நான் உமக்குப் பலியிடு 6
வேன்; கர்த்தாவே, உமது நாமத்தைத் துதிப்
பேன், அது நலமானது.
அவர் எல்லா நெருக்கத்தையும் நீக்கி, 7
என்னை விடுவித்தார்; [14]என் கண் என் சத்
துருக்களில் நீதி சரிக்கட்டுதலைக் கண்டது.

(நிகநோத்தில் வாசிக்கத் தாவீது பாடி ராகத்தலைவனுக்கு ஒப்புவித்த மஸ்கீல் என்னும் சங்கீதம்.) **55**

தேவனே, என் ஜெபத்தைக் கேட்டரு
ளும்; என் விண்ணப்பத்திற்கு மறைந்திராதே
யும்.
எனக்குச் செவிகொடுத்து, உத்தரவு அரு 2
ளிச்செய்யும்; சத்துருவினுடைய கூக்குரலி
னிமித்தமும், துன்மார்க்கர் செய்யும் இடுக்கத்
தினிமித்தமும் என் தியானத்தில் [15]முறை
யிடுகிறேன்.
அவர்கள் என்மேல் பழிசாட்டி, [16]குரோ 3
தங்கொண்டு, என்னைப் பகைக்கிறார்கள்.
என் இருதயம் எனக்குள் வியாகுலப் 4
படுகிறது; [17]மரணத்திகில் என்மேல் விழுந்தது.
பயமும் நடுக்கமும் என்னைப் பிடித்தது; 5
அருக்களிப்பு என்னை மூடிற்று.
அப்பொழுது நான்: ஆ, எனக்குப் புறா 6
வைப்போல் சிறகுகள் இருந்தால், நான்
பறந்துபோய் இளைப்பாறுவேன்.
நான் தூரத்தில் அலைந்து திரிந்து வனாந்த 7
ரத்தில் தங்கியிருப்பேன்.
பெருங்காற்றுக்கும் புசலுக்கும் தப்பத் தீவி 8
ரித்துக்கொள்ளுவேன் என்றேன்.
ஆண்டவரே, அவர்களை அழித்து, அவர் 9
கள் பாஷையைப் பிரிந்துபோகப்பண்ணும்;
[18]கொடுமையையும் சண்டையையும் நகரத்தி
லே கண்டேன்;
அவைகள் இரவும் பகலும் அதின் மதில் 10
கள்மேல் சுற்றித்திரிகிறது; அக்கிரமமும் வா
தையும் அதின் நடுவில் இருக்கிறது;
கேடுபாடுகள் அதின் நடுவில் இருக்கிறது; 11
கொடுமையும் கபடமும் அதின் வீதியை விட்டு
விலகிப்போகிறதில்லை.
என்னை நிந்தித்தவன் சத்துரு அல்ல, அப் 12
படியிருந்தால் சகிப்பேன்; [19]எனக்கு விரோத

1 எரே. 9. 4, 5
2 நீதி. 19. 5, 9
3 1 தீமோ. 6. 17
4 எரே. 11. 16. ஓசி. 14. 6
* உமது நாமத்தை நம்பியிருப்பேன். புல. 3. 25, 26
5 54. 6: 73. 28
6 10. 4: 14. 1. மு. எபே. 5. 12
7 ரோ. 3. 10-12
8 11. 4
9 எரே. 4. 22
10 நீதி. 28. 1 லூ. 26. 17, 36
11 14. 7: 126. 1-3
12 36. 1
13 118. 7
14 1 சாமு. 26. 14
15 ஏசா 38. 14
16 2 சாமு. 16. 7, 8
17 116. 3
18 எரே. 6, 7
19 41. 9: 42. 4. 2 சாமு. 15. 12. எரே. 9. 4

மாய்ப் பெருமைபாராட்டினவன் என் பகை
ஞன் அல்ல, அப்படியிருந்தால் அவனுக்கு
மறைந்திப்பேன்.
13 எனக்குச் சமமான மனுஷனும், என் வழி
காட்டியும், என் தோழனுமாகிய நீயே
அவன்.
14 நாம் ஒருமித்து இன்பமான ஆலோசனை
பண்ணி, கூட்டத்தோடே தேவாலயத்துக்
குப்போனோம்.
15 மரணம் அவர்களைத் தொடர்ந்து பிடிப்ப
தாக; [1]அவர்கள் உயிரோடே பாதாளத்தில்
இறங்குவார்களாக; அவர்கள் வாசஸ்தலங்களி
லும் அவர்கள் உள்ளத்திலும் பொல்லாங்கு
இருக்கிறது.
16 நானோ தேவனை நோக்கிக் கூப்பிடுவேன்;
கர்த்தர் என்னை ரட்சிப்பார்.
17 அந்திசந்தி மத்தியான வேளைகளிலும்
[2]நான் தியானம்பண்ணி முறையிடுவேன்;
அவர் என் சத்தத்தைக் கேட்பார்.
18 திரளான கூட்டமாய்க் கூடி என்னோடு
எதிர்த்தார்கள்; [3]அவரோ எனக்கு நேரிட்ட
போரை நீக்கி, என் ஆத்துமாவைச் சமாதா
னத்துடன் மீட்டுவிட்டார்.
19 ஆதிமுதலாய் வீற்றிருக்கிற தேவன் கேட்டு,
அவர்களுக்குப் பதிலளிப்பார், அவர்களுக்கு
மாறுதல்கள் நேரிடாததினால், [4]அவர்கள்
தேவனுக்குப் பயப்படாமற்போகிறார்கள்.
20 அவன் தன்னோடே சமாதானமாயிருந்தவர்
களுக்கு விரோதமாய்த் தன் கையை நீட்டி,
தன் உடன்படிக்கையை மீறி நடந்தான்.
21 அவன் வாயின் சொற்கள் வெண்ணெயைப்
போல மெதுவானவைகள், அவன் இருதய
மோ யுத்தம்; [5]அவன்வார்த்தைகள் எண்ணெயி
லும் மிருதுவானவைகள், ஆனாலும் அவை
கள் உருவின பட்டயங்கள்.
22 கர்த்தர்மேல் உன் பாரத்தை வைத்துவிடு,
[6]அவர் உன்னை ஆதரிப்பார்; [7]நீதிமானை ஒரு
போதும் தள்ளாடவொட்டார்.
23 தேவனே, நீர் அவர்களை அழிவின் குழி
யில் இறங்கப்பண்ணுவீர்; இரத்தப்பிரியரும்
சூதுள்ள மனுஷரும் தங்கள் ஆயுளின் நாட்க
ளில் பாதி வரையிலாகிலும் பிழைத்திருக்க
மாட்டார்கள்; [8]நானோ உம்மை நம்பியிருக்கி
றேன்.

56 (பெலிஸ்தர் தாவீதைக் காத்தூரில் பிடித்தபோது யோ
னத் ஏலம் ரிக்கோசீம் என்னும் வாத்தியத்தில் வாசிக்
கும்படி தாவீது பாடி ராகத்தலைவனுக்கு ஒப்புவித்த
மிக்தாம் என்னும் சங்கீதம்.)

தேவனே எனக்கு இரங்கும்; மனுஷன்
என்னை, [9]விழுங்கப் பார்க்கிறான்; நாள்தோறும்
போர்செய்து, என்னை ஒடுக்குகிறான்.
2 என் சத்துருக்கள் நாள்தோறும் என்னை
விழுங்கப்பார்க்கிறார்கள்; உன்னதமானவரே;
எனக்கு விரோதமாய் அகங்கரித்துப் போர்
செய்கிறவர்கள் அநேகர்.
3 நான் பயப்படுகிற நாளில் [10]உம்மை நம்பு
வேன்.
தேவனை முன்னிட்டு அவருடைய வார்த் 4
தையைப் புகழுவேன்; தேவனை நம்பியிருக்
கிறேன்; நான் பயப்படேன்; [11]மாம்சமானவன்
எனக்கு என்னசெய்வான்?
நித்தமும் என் வார்த்தைகளைப் புரட்டுகிறார் 5
கள்; [12]எனக்குத் தீங்குசெய்வதே அவர்கள்
முழு எண்ணமாயிருக்கிறது.
அவர்கள் ஏகமாய்க் கூடி, பதிவிருக்கிறார் 6
கள்; என் பிராணனை வாங்க விரும்பி, [13]என்
காலடிகளைத் தொடர்ந்துவருகிறார்கள்.
அவர்கள் தங்கள் அக்கிரமத்தினால் தப்புவார் 7
களோ? [14]தேவனே, கோபங்கொண்டு ஜனங்
களைக் கீழே தள்ளும்.
என் அலைச்சல்களை தேவரீர் எண்ணியிருக் 8
கிறீர்; என் கண்ணீரை உம்முடைய துருத்தி
யில் வையும் அவைகள் உம்முடைய *கணக்
கில் அல்லவோ இருக்கிறது?
நான் உம்மை நோக்கிக் கூப்பிடும் நாளில் 9
என் சத்துருக்கள் பின்னிட்டுத் திரும்புவார்
கள்; [15]தேவன் என் பட்சத்தில் இருக்கிறார்
என்பதை அறிவேன்.
தேவனை முன்னிட்டு அவருடைய வார்த் 10
தையைப் புகழுவேன்; கர்த்தரை முன்னிட்டு
அவருடைய வார்த்தையைப் புகழுவேன்.
தேவனை நம்பியிருக்கிறேன், நான் பயப் 11
படேன்; மனுஷன் எனக்கு என்ன செய்
வான்?
தேவனே, [16]நான் உமக்குப் பண்ணின 12
பொருத்தனைகள் என்மேல் இருக்கிறது; உமக்
கு ஸ்தோத்திரங்களைச் செலுத்துவேன்.
நான் தேவனுக்கு முன்பாக [17]ஜீவனுள் 13
ளோருடைய வெளிச்சத்திலே நடக்கும்படி,
நீர் என் ஆத்துமாவை மரணத்துக்கும் என்
கால்களை இடறலுக்கும் தப்புவியாதிருப்பீ
ரோ?

(தாவீது சவுலுககுத் தப்பியோடி கெபியில் ஒதுங்குகை 57
யில் தனக்கு நஷ்டம் நேரிடாதபடி அல்தஷ்கேத் என்
னும் வாத்தியத்தில் வாசிக்கத் தாவீது பாடி ராகத்
தலைவனுக்கு ஒப்புவித்த மிக்தாம் என்னும் சங்கீதம்.)

எனக்கு இரங்கும், தேவனே, எனக்கு
இரங்கும்; உம்மை என் ஆத்துமா அண்டிக்
கொள்ளுகிறது; [18]விக்கினங்கள் கடந்துபோகு
மட்டும் உமது செட்டைகளின் நிழலிலே வந்
து அடைவேன்.
எனக்காக யாவையும் செய்து முடிக்கப் 2
போகிற [19]தேவனாகிய உன்னதமான தேவனை
நோக்கிக் கூப்பிடுவேன்.
என்னை விழுங்கப் பார்க்கிறவன் என்னை 3
நிந்திக்கையில், அவர் பரலோகத்திலிருந்து
ஒத்தாசை அனுப்பி, என்னை ரட்சிப்பார்:
தேவன் தமது கிருபையையும் தமது சத்தியத்
தையும் அனுப்புவார்.
என் ஆத்துமா சிங்கங்களின் நடுவிலிருக் 4
கிறது; தீயை இறைக்கிற மனுபுத்திரருக்குள்
ளே கிடக்கிறேன்; அவர்கள் பற்கள் ஈட்டிக
ளும் அம்புகளும், அவர்கள் நாவு [20]கருக்கான
பட்டயமுமாயிருக்கிறது.

1 எண். 16. 30-33
2 தானி. 6. 10. அப். 3. 1: 10. 3, 9, 30
3 2 சாமு. 32. 7, 8. 1 யோ. 4. 4
4 73. 3. ஓ. பிர. 8. 11
5 நீதி. 5. 3, 4. மத். 26. 49
6 மத். 9.25-34. 1 பே. 5. 7
7 37. 24: 121.3
8 நீதி. 10. 27. பிர. 7. 17
9 ஓசி. 8. 8
10 1 சாமு. 30. 6
11 ஓா. 12:4, 5. ரோ. 8. 31
12 ஓா. 11. 54
13 37. 32
14 பிர. 8. 8
* புஸ்தகத்தில். மல். 3. 16
15 ரோ. 8. 31
16 66. 13, 14. ஆதி. 28. 20-22
17 116. 8, 9
18 63-7. ஏசா. 26. 20
19 138. 8, ஏசா. 26. 22
20 51. 21. 52. 2

5 தேவனே, வானங்களுக்கு மேலாக உயர்ந்
தருளும்; உமது மகிமை பூமியனைத்தின்
மேலும் உயர்ந்திருப்பதாக.
6 என் கால்களுக்குக் கண்ணியை வைத்தி
ருக்கிறார்கள்; [1]என் ஆத்துமா தொய்ந்துபோ
யிற்று; எனக்கு முன்பாகக் குழியை வெட்டி,
அதின் நடுவிலே விழுந்தார்கள்.
7 என் இருதயம் ஆயத்தமாயிருக்கிறது, தேவ
னே, என் இருதயம் ஆயத்தமாயிருக்கிறது;
நான் பாடிக் கீர்த்தனம் பண்ணுவேன்.
8 என் *மகிமையே, விழி; வீணையே, சுரமண்
டலமே, விழியுங்கள்: அதிகாலையில் விழித்
துக்கொள்வேன்.
9 ஆண்டவரே, ஜனங்களுக்குள்ளே உம்
மைத் துதிப்பேன்; ஜாதிகளுக்குள்ளே உம்
மைக் கீர்த்தனம்பண்ணுவேன்.
10 உமது கிருபை வானபரியந்தமும், உமது
சத்தியம் மேகமண்டலங்கள் பரியந்தமுமெட்டு
கிறது.
11 தேவனே வானங்களுக்கு மேலாக உயர்ந்
தருளும்; உமதுமகிமைபூமியனைத்தின் மேலும்
உயர்ந்திருப்பதாக.

58 (தான் கெட்டுப்போகாதபடிக்கு அல்தஷ்கேத் என்னும் வாத்தியத்தில் வாசிக்கத் தாவீது பாடி ராகத்தலைவனுக்கு ஒப்புவித்த மிக்தாம் என்னும் சங்கீதம்.)

மவுனமாயிருக்கிறவர்களே, நீங்கள் மெய்
யாய் நீதியைப் பேசுவீர்களோ? மனுபுத்திர
ரே, நியாயமாய்த் தீர்ப்பு செய்வீர்களோ?
2 மனதார நியாயக்கேடு செய்கிறீர்கள்;
[2]பூமியிலே உங்கள் கைகளின் கொடுமையை
நிறுத்திக் கொடுக்கிறீர்கள்.
3 துன்மார்க்கர் கர்ப்பத்தில் உற்பவித்தது
முதல் பேதலிக்கிறார்கள்; [3]தாயின் வயிற்றி
லிருந்து பிறந்ததுமுதல் பொய்சொல்லி வழி
தப்பிப்போகிறார்கள்.
4 சர்ப்பத்தின் விஷத்திற்கு ஒப்பான [4]விஷம்
அவர்களில் இருக்கிறது.
5 பாம்பாட்டிகள் வினோதமாய் ஊதினாலும்
அவர்கள் ஊதும் சத்தத்திற்குச் செவிகொடாத
படிக்குத் தன் காதை அடைக்கிற செவிட்டு
விரியனைப்போல் இருக்கிறார்கள்.
6 தேவனே, அவர்கள் வாயிலுள்ள பற்களைத்
தகர்த்துப்போடும்; கர்த்தாவே, பால சிங்
கங்களின் கடைவாய்ப்பற்களை நொறுக்கிப்
போடும்.
7 கடந்தோடுகிற தண்ணீரைப்போல் அவர்
கள் கழிந்துபோகட்டும்; [5]அவன் தன் அம்பு
களைத் தொடுக்கும்போது அவைகள் சின்ன
பின்னமாய்ப் போகக்கடவது.
8 கரைந்துபோகிற நத்தையைப்போல் ஒழிந்
துபோவார்களாக; [6]ஸ்திரீயின் முதிராப் பிண்
டத்தைப்போல் சூரியனைக் காணாதிருப்பார்க
ளாக.
9 முள்நெருப்பினால் உங்கள் பானைகளில்
சூடேறுமுன்னே பச்சையானதையும் எரிந்து
போனதையும் அவர் [7]சுழல்காற்றினால் அடித்
துக்கொண்டுபோவார்.

1 மீகா. 72
* ஆத்துமா அல்லது நாவு. 108. 1-5
2 21. 11. ஏசா. 10. 1
3 ஏசா. 48. 8
4 ரோ. 3. 13
5 112. 10
6 யோபு 3. 16 பிர. 6. 2
7 நீதி. 10. 25
8 வெளி. 11. 17, 18
9 ஏசா. 3.10, 11
10 18. 48
11 1 சாமு. 24. 11, 17
12 நீதி. 12. 18. ஏசா. 29. 13
13 1 சாமு. 19. 16
14 21. 3: 54. 7
15 ஆதி. 4. 12, 15
16 நீதி. 12. 18

பழிவாங்குதலை [8]நீதிமான் காணும்போது 10
மகிழுவான்; அவன் தன் பாதங்களைத் துன்
மார்க்கனுடைய ரத்தத்திலே கழுவுவான்.
அப்பொழுது, மெய்யாய் நீதிமானுக்குப் 11
பலன் உண்டென்றும், [9]மெய்யாய்ப் பூமி
யிலே நியாயஞ்செய்கிற தேவன் உண்டென்
றும் மனுஷன் சொல்லுவான்.

(சவுல் தாவீதைக் கொல்லுதற்காக ஏவலாட்களை அனுப் 59
பினபோது அல்தஷ்கேத் என்னும் வாத்தியத்தில்
வாசிக்க அவன் பாடி ராகத்தலைவனுக்கு ஒப்புவித்த
மிக்தாம் என்னும் சங்கீதம்.)

என் தேவனே, என் சத்துருக்களுக்கு என்
னைத் தப்புவியும்; [10]என்மேல் எழும்புகிறவர்
களுக்கு என்னை விலக்கி உயர்ந்த அடைக்
கலத்திலே வையும்.
அக்கிரமக்காரருக்கு என்னைத் தப்புவித்து, 2
இரத்தப்பிரியரான மனுஷருக்கு என்னை
விலக்கி ரட்சியும்.
இதோ, என் பிராணனுக்குப் பதிவிருக்கி 3
றார்கள்; கர்த்தாவே, [11]என்னிடத்தில் மீறுத
லும் பாவமும் இல்லாதிருந்தும், பலவான்கள்
எனக்கு விரோதமாய்க் கூட்டங்கூடுகிறார்கள்.
என்னிடத்தில் அக்கிரமம் இல்லாதிருந்தும், 4
ஓடித்திரிந்து யுத்தத்துக்கு ஆயத்தமாகிறார்கள்;
எனக்குத் துணைசெய்ய விழித்து என்னை
நோக்கிப் பாரும்.
சேனைகளின் தேவனாகிய கர்த்தாவே, இஸ் 5
ரவேலின் தேவனே, நீர் சகல ஜாதிகளையும்
விசாரிக்க விழித்தெழும்பும்; வஞ்சகமாய்த்
துரோகஞ்செய்கிற ஒருவருக்கும் தயை செய்
யாதேயும்.
அவர்கள் சாயங்காலத்தில் திரும்பிவந்து, 6
நாய்களைப்போல ஊளையிட்டு, ஊரைச்சுற்றித்
திரிகிறார்கள்.
இதோ, தங்கள் வார்த்தைகளைக் கக்குகிறார் 7
கள்; [12]அவர்கள் உதடுகளில் பட்டயங்கள்
இருக்கிறது, கேட்கிறவன் யார் என்கிறார்கள்.
ஆனாலும் கர்த்தாவே, நீர் அவர்களைப் 8
பார்த்து நகைப்பீர்; [13]புறஜாதிகள் யாவரையும்
இகழுவீர்.
அவன் வல்லமையை நான் கண்டு, உமக் 9
குக் காத்திருப்பேன்; தேவனே எனக்கு உயர்ந்த
அடைக்கலம்.
என் தேவன் தம்முடைய கிருபையினால் 10
என்னைச் சந்திப்பார்; [14]தேவன் என் சத்து
ருக்களுக்கு வரும் நீதி சரிக்கட்டுதலை நான்
காணும்படி செய்வார்.
அவர்களைக் கொன்றுபோடாதேயும், [15]என் 11
ஜனங்கள் மறந்து போவார்களே; எங்கள்
கேடகமாகிய ஆண்டவரே, உமது வல்லமையி
னால் அவர்களைச் சிதறடித்து, அவர்களைத்
தாழ்த்திப்போடும்.
அவர்கள் உதடுகளின் பேச்சு அவர்கள் 12
வாயின் பாவமாயிருக்கிறது; [16]அவர்கள் இட்ட
சாபமும் சொல்லிய பொய்யும் ஆகிய இவைக
ளினிமித்தம் தங்கள் பெருமையில் அகப்படு
வார்களாக.

13 தேவன் பூமியின் எல்லைவரைக்கும் யாக்
கோபிலே அரசாளுகிறவர் என்று அவர்கள்
அறியும்பொருட்டு, அவர்களை உம்முடைய உக்
கிரத்திலே நிர்மூலமாக்கும்; இனி இராதப
டிக்கு அவர்களை நிர்மூலமாக்கும்.
14 அவர்கள் சாயங்காலத்தில் திரும்பிவந்து,
நாய்களைப்போல ஊளையிட்டு, ஊரைச்சுற்றித்
திரிகிறார்கள்.
15 அவர்கள் உணவுக்காக அலைந்து திரிந்து
திருப்தியடையாமல், முறுமுறுத்துக்கொண்
டிருப்பார்கள்.
16 நானோ உம்முடைய வல்லமையைப் பாடி,
காலையிலே உம்முடைய கிருபையை மகிழ்ச்சி
யோடு புகழுவேன்; எனக்கு நெருக்கமுண்
டான நாளிலே நீர் எனக்கு தஞ்சமும் உயர்ந்த
அடைக்கலமுமானீர்.
17 என் பெலனே, உம்மைக் கீர்த்தனம் பண்
ணுவேன்; [1]தேவன் எனக்கு உயர்ந்த அடைக்
கலமும், கிருபையுள்ள என் தேவனுமாயிருக்
கிறார்.

60 (தாவீது மெசொபொத்தாமியா தேசத்துச் சீரியரோ
டும், சோபாதேசத்துச் சீரியரோடும் யுத்தம்பண்ணின
போது, யோவாப் திரும்பி உப்புப்பள்ளத்தாக்கிலே
ஏதோமியரில் பன்னீராயிரம்பேரை வெட்டினபோது, அ
வன் சாட்சியை விளக்குவிக்கும் ஆறுநரம்புக் கின்னரத்
திலே போதிப்பதற்காகப் பாடினதும் ராகத்தலைவனுக்கு
ஒப்புவித்ததுமான மிக்தாம் என்னும் சங்கீதம்.)

தேவனே, நீர் எங்களைக் கைவிட்டீர், [2]எங்
களைச் சிதறடித்தீர், எங்கள்மேல் கோபமாயி
ருந்தீர்; மறுபடியும் எங்களிடமாய்த் [3]திரும்பிய
ருளும்.
2 பூமியை அதிரப்பண்ணி, அதை வெடிப்
பாக்கினீர்; [4]அதின் வெடிப்புகளைப் பொருந்
தப்பண்ணும்; அது அசைகின்றது.
3 உம்முடைய ஜனங்களுக்குக் கடினமான
காரியத்தைக் காண்பித்தீர்; [5]தத்தளிப்பின் மது
பானத்தை எங்களுக்குக் குடிக்கக் கொடுத்தீர்.
4 சத்தியத்தினிமித்தம் ஏற்றும்படியாக, [6]உ
மக்குப் பயந்து நடக்கிறவர்களுக்கு ஒரு கொடி
யைக் கொடுத்தீர்.
5 உமது பிரியர் விடுவிக்கப்படும்படி, [7]உமது
வலதுகரத்தினால் ரட்சித்து, எனக்குச் செவி
கொடுத்தருளும்.
6 தேவன் தமது பரிசுத்தத்தைக்கொண்டு
விளம்பினார், ஆகையால் களிகூருவேன்; சீகே
மைப் பங்கிட்டு, சுக்கோத்தின் பள்ளத்தாக்கை
அளந்துகொள்ளுவேன்.
7 கீலேயாத் என்னுடையது, மனாசேயும்
என்னுடையது, எப்பிராயீம் என் தலையின்
பெலன், [8]யூதா என் *நியாயப்பிரமாணிகன்.
8 மோவாப் என் பாதபாத்திரம், ஏதோமின்
மேல் என் பாதரட்சையை எறிந்துபோடு
வேன்; பெலிஸ்தியாவே, [9]என்னிமித்தம்
ஆர்ப்பரித்துக்கொள்.
9 அரணான பட்டணத்திற்குள் [10]என்னை
நடத்திக்கொண்டு போகிறவர் யார்? ஏதோம்
மட்டும் எனக்கு வழிகாட்டுகிறவர் யார்?
10 எங்கள் சேனைகளோடே [11]புறப்படாமலி
ருந்த தேவரீர் அல்லவோ? எங்களைத் தள்ளி
விட்டிருந்த தேவரீர் அல்லவோ?
இக்கட்டில்எங்களுக்கு உதவிசெய்யும்; மனு 11
ஷனுடைய உதவி விருதா.
தேவனாலே பராக்கிரமம் செய்வோம்; அவ 12
ரே எங்கள் சத்துருக்களை [12]மிதித்துப் போடு
வார்.

(நெகிலோத் என்னும் வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலை 61
வனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

தேவனே, என் கூப்பிடுதலைக் கேட்டு,
என் விண்ணப்பத்தைக் கவனியும்.
என் இருதயம் தொய்யும்போது [13]பூமியின் 2
கடையாந்தரத்திலிருந்து உம்மை நோக்கிக் கூப்
பிடுவேன்; எனக்கு எட்டாத உயரமான கன்
மலையில் என்னைக் கொண்டுபோய்விடும்.
நீர் எனக்கு அடைக்கலமும், [14]சத்துருவுக்கு 3
எதிரே பெலத்த துருகமுமாயிருந்தீர்.
நான் உம்முடைய கூடாரத்தில் சதாகால 4
மும் தங்குவேன்; உமது செட்டைகளின்
மறைவிலே வந்து அடைவேன்.
தேவனே, நீர் என் பொருத்தனைகளைக் 5
கேட்டீர்; உமது நாமத்திற்குப் பயப்படுகிற
வர்களின் சுதந்தரத்தை எனக்குத் தந்தீர்.
ராஜாவின் நாட்களோடே நாட்களைக் கூட் 6
டுவீர்; [15]அவர் வருஷங்கள் தலைமுறை தலை
முறையாக இருக்கும்.
அவர் தேவனுக்கு முன்பாக என்றென் 7
றைக்கும் நிலைத்திருப்பார்; [16]தயையும் உண்
மையும் அவரைக் காக்கக் கட்டளையிடும்.
இப்படியே தினமும் என் பொருத்தனை 8
களை நான் செலுத்தும்படியாக, உமது நாமத்
தை என்றைக்கும் கீர்த்தனம்பண்ணுவேன்.

(எதுதூன் என்னும் ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட 62
தாவீதின் சங்கீதம்.)

தேவனையே நோக்கி என் ஆத்துமா அமர்ந்
திருக்கிறது; அவரால் என் ரட்சிப்பு வரும்.
அவரே என் கன்மலையும், என் ரட்சிப்பும், 2
என் உயர்ந்த அடைக்கலமுமானவர்; [17]நான்
அதிகமாய் அசைக்கப்படுவதில்லை.
நீங்கள் எதுவரைக்கும் ஒரு மனுஷனுக்குத் 3
தீங்குசெய்ய நினைப்பீர்கள், நீங்கள் அனைவரும்
சங்கரிக்கப்படுவீர்கள், [18]சாய்ந்த மதிலுக்கும்
இடிந்த சுவருக்கும் ஒப்பாவீர்கள்.
அவனுடைய மேன்மையிலிருந்து அவ 4
னைத் தள்ளும்படிக்கே அவர்கள் ஆலோசனை
பண்ணி, அபத்தம்பேச விரும்புகிறார்கள்; தங்
கள் வாயினால் ஆசீர்வதித்து, தங்கள் உள்ளத்
தில் சபிக்கிறார்கள்.
என் ஆத்துமாவே, தேவனையே நோக்கி 5
அமர்ந்திரு; நான் நம்புகிறது அவராலே வரும்.
அவரே என் கன்மலையும், என் ரட்சிப்பும், 6
என் உயர்ந்த அடைக்கலமுமானவர்; நான்
அசைக்கப்படுவதில்லை.
என் ரட்சிப்பும், என் மகிமையும் தேவனி 7
டத்தில் இருக்கிறது; [19]பெலனான என் கன்
மலையும் என் அடைக்கலமும் தேவனுக்குள்
இருக்கிறது.

[1] 18. 1
[2] 44. 9
[3] புல. 3. 31, 32. சகரி. 10. 6
[4] 2 நாளா. 7. 14. எரே. 30. 17
[5] ஏசா. 51. 17, 22
[6] 20. 5. உன்ன. 2. 4
[7] 108. 6. மு
[8] ஆதி. 49. 10
* செங்கோல்.
[9] 2 சாமு. 8. 1, 2, 14
[10] 2 சாமு. 11. 1
[11] யோசு. 7. 12
[12] ஏசா. 63. 3
[13] ஏசா. 54. 11
[14] நீதி. 18. 10
[15] 21. 4
[16] 43. 3. நீதி. 20. 28
[17] 37. 24. மீகா. 7. 8
[18] ஏசா. 30. 13
[19] எரே. 3. 23

8 ஜனங்களே, எக்காலத்திலும் அவரை நம்
புங்கள்; [1]அவர் சமுகத்தில் உங்கள் இருதயத்
தை *ஊற்றிவிடுங்கள்; தேவன் நமக்கு அடைக்
கலமாயிருக்கிறார்.
9 கீழ்மக்கள் மாயையும், மேன்மக்கள் பொய்யு
மாமே; [2]தராசிலே வைக்கப்பட்டால் அவர்க
ளெல்லாரும் மாயையிலும் லேசானவர்கள்.
10 கொடுமையை நம்பாதிருங்கள்; கொள்ளையி
னால் பெருமை பாராட்டாதிருங்கள்; [3]ஐசுவரி
யம் விருத்தியானால் இருதயத்தை அதின்மேல்
வைக்காதேயுங்கள்.
11 தேவன் ஒருதரம் விளம்பினார், இரண்டு
தரம் கேட்டிருக்கிறேன்; [4]வல்லமை தேவனு
டையது என்பதே.
12 கிருபையும் உம்முடையது, [5]ஆண்டவரே!
தேவரீர் அவனவன் செய்கைக்குத் தக்கதாகப்
பலனளிக்கிறீர்.

**63** (தாவீது யூதாவின் வனாந்தரத்திலிருக்கையில்
பாடின சங்கீதம்.)

தேவனே, நீர் என்னுடைய தேவன்;
†அதிகாலமே உம்மைத் தேடுகிறேன்; வறண்
டதும் விடாய்த்ததும் தண்ணீரற்றதுமான
நிலத்திலே என் ஆத்துமா உம்மேல் தாகமா
யிருக்கிறது, என் மாம்சமானது உம்மை வாஞ்
சிக்கிறது.
2 இப்படியே பரிசுத்த ஸ்தலத்தில் உம்மைப்
பார்க்க ஆசையாயிருந்து, [6]உமது வல்லமை
யையும் உமது மகிமையையும் கண்டேன்.
3 ஜீவனைப்பார்க்கிலும் [7]உமது கிருபை நல்
லது; என் உதடுகள் உம்மைத் துதிக்கும்.
4 என் ஜீவனுள்ளமட்டும் நான் உம்மைத்
துதித்து, உமது நாமத்தைச் சொல்லிக் கையெ
டுப்பேன்.
5 நிணத்தையும் கொழுப்பையும் உண்டது
போல என் [8]ஆத்துமா திருப்தியாகும்; என்
வாய் ஆனந்தக் களிப்புள்ள உதடுகளால் உம்
மைப் போற்றும்.
6 என் படுக்கையின்மேல் நான் உம்மை
நினைக்கும்போது, [9]இராச்சாமங்களில் உம்
மைத் தியானிக்கிறேன்.
7 நீர் எனக்குத் துணையாயிருந்ததினால், உமது
செட்டைகளின் நிழலிலே களிகூருகிறேன்.
8 என் ஆத்துமா உம்மைத் தொடர்ந்து பற்றிக்
கொண்டிருக்கிறது; [10]உமது வலதுகரம் என்
னைத் தாங்குகிறது.
9 என்பிராணனை அழிக்கத்தேடுகிறவர்களோ,
பூமியின் தாழ்விடங்களில் இறங்குவார்கள்.
10 அவர்கள் பட்டயத்தால் விழுவார்கள்; நரிக
ளுக்கு இரையாவார்கள்.
11 ராஜாவோ தேவனில் களிகூருவார்; அவர்
பேரில் சத்தியம் பண்ணுகிறவர்கள் யாவரும்
மேன்மை பாராட்டுவார்கள்; [11]பொய் பேசுகிற
வர்களின் வாய் அடைக்கப்படும்.

**64** (இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

தேவனே, என் விண்ணப்பத்தில் என் சத்
தத்தைக் கேட்டருளும்; சத்துருவால் வரும்

1 1 சாமு. 1. 15
* உருகப் பண்ணுங்கள்.
2 ஏசா. 40. 15, 17
3 யோ. 12. 15, 21. 1 தீமோ. 6. 17
4 வெளி. 19. 1
5 2 கொ. 5. 10. வெளி. 22. 12
† ஊக்கமாய். 42. 1. சீதி. 8. 17. உன்ன. 3. 1–3. யோ. 7. 37
6 27. 4
7 30. 5. 1 யோ. 3. 2
8 உன்ன. 1. 4
9 உன்ன. 5. 2
10 18. 35
11 ஏசா. 65. 16
12 ஆதி. 49. 6
13 எரே. 9. 3
14 நீதி. 1. 11–13. ஏசா. 29. 15
15 நீதி. 12. 13
16 எரே. 50. 28
17 62. 1
‡ மனுஷர்.
18 ஏசா. 66. 23
19 1 யோ. 1. 7, 9
20 63. 5
§ அகண்ட கடலிலும்.
21 45. 4

பயத்தை நீக்கி, என் பிராணனைக் காத்தரு
ளும்.
துன்மார்க்கர் செய்யும் இரகசிய ஆலோ 2
சனைக்கும், [12]அக்கிரமக்காரருடைய கலகத்
துக்கும் என்னை விலக்கி மறைத்தருளும்.
அவர்கள் தங்கள் நாவைப் பட்டயத்தைப் 3
போல் [13]கூர்மையாக்கி,
மறைவுகளில் உத்தமன்மேல் எய்யும்பொ 4
ருட்டுக் கசப்பான வார்த்தைகளாகிய தங்கள்
அம்புகளை நாணேற்றுகிறார்கள்; சற்றும் பய
மின்றிச் சடுதியில் அவன்மேல் எய்கிறார்கள்.
அவர்கள் பொல்லாத காரியத்தில் தங்களை 5
உறுதிப்படுத்திக்கொண்டு, [14]மறைவான கண்
ணிகளை வைக்க ஆலோசனை பண்ணி, அவை
களைக் காண்பவன் யார் என்கிறார்கள்.
அவர்கள் நியாயக்கேடுகளை ஆய்ந்து தேடி, 6
தந்திரமான யோசனை நிறைவேறும்படி பிரயத்
தனம் பண்ணுகிறார்கள்; அவர்களில் ஒவ்வொ
ருவனுடைய உட்கருத்தும் இருதயமும் ஆழ
மாயிருக்கிறது.
ஆனாலும் தேவன் அவர்கள்மேல் அம்பு 7
களை எய்வார், சடிதியாய் அவர்கள் காயப்படு
வார்கள்.
அவர்கள் தள்ளப்பட்டு, கீழேவிழும்படி 8
அவர்கள் நாவுகளே அவர்களைக் கெடுக்கும்;
[15]அவர்களைக்காண்கிற யாவரும் ஓடிப்போவார்
கள்.
எல்லா மனுஷரும் பயந்து, தேவனுடைய 9
செயலை அறிவித்து, [16]அவர் கிரியையை
உணர்ந்துகொள்வார்கள்.
நீதிமான் கர்த்தருக்குள் மகிழ்ந்து, அவரை 10
நம்புவான்; செம்மையான இருதயமுள்ளவர்
கள் யாவரும் மேன்மை பாராட்டுவார்கள்.

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் **65**
சங்கீதமாகிய பாட்டு.)

தேவனே, சீயோனில் உமக்காகத் துதி
யானது அமைந்து காத்திருக்கிறது; [17]பொருத்
தனை உமக்குச் செலுத்தப்படும்.
ஜெபத்தைக் கேட்கிறவரே, ‡மாம்சமான 2
[18]யாவரும் உம்மிடத்தில் வருவார்கள்.
அக்கிரம விஷயங்கள் என்மேல் மிஞ்சி 3
வல்லமைகொண்டது; [19]தேவரீரோ எங்கள்
மீறுதல்களை நிவிர்த்தியாக்குகிறீர்.
உம்முடைய பிராகாரங்களில் வாசமாயிருக் 4
கும்படி நீர் தெரிந்துகொண்டு சேர்த்துக்கொள்
ளுகிறவன் பாக்கியவான்; [20]உம்முடைய பரி
சுத்த ஆலயமாகிய உமது வீட்டின் நன்மையால்
திருப்தியாவோம்.
பூமியின் கடையாந்தரங்களிலும் §தூர 5
மான சமுத்திரங்களிலுமுள்ளவர்கள் எல்லா
ரும் நம்பும் நம்பிக்கையாயிருக்கிற எங்கள்
ரட்சிப்பின் தேவனே, [21]நீர் பயங்கரமான
காரியங்களைச் செய்கிறதினால் எங்களுக்கு நீதி
யுள்ள உத்தரவு அருளுகிறீர்.
வல்லமையை இடைகட்டிக்கொண்டு, உம் 6
முடைய பலத்தினால் பர்வதங்களை உறுதிப்ப
டுத்தி,

7 சமுத்திரங்களின் மும்முரத்தையும் [1]அவை
களுடைய அலைகளையும் இரைச்சலையும், ஜனங்
களின் அமளியையும் அமர்த்துகிறீர்.
8 கடையாந்தர இடங்களில் குடியிருக்கிறவர்
களும் உம்முடைய அடையாளங்களினிமித்
தம் பயப்படுகிறார்கள்; காலையையும் மாலையை
யும் களிகூரப்பண்ணுகிறீர்.
9 தேவரீர் பூமியை விசாரித்து அதற்கு நீர்ப்
பாய்ச்சுகிறீர்; தண்ணீர் நிறைந்த தேவநதியி
னால் அதை மிகவும் செழிப்பாக்குகிறீர்; இப்
படி நீர் அதைத் திருத்தி, அவர்களுக்குத் தானி
யத்தை விளைவிக்கிறீர்.
10 அதின் வரப்புகள் தணியத்தக்கதாய் அதின்
படைச்சால்களுக்குத் தண்ணீர் இறைத்து;
அதை மழைகளால் கரையப்பண்ணி, அதின்
பயிரை ஆசீர்வதிக்கிறீர்.
11 வருஷத்தை உம்முடைய நன்மையால் முடி
சூட்டுகிறீர்; உமது பாதைகள் நெய்யாய்ப்
பொழிகிறது.
12 வனாந்தர தாபரங்களிலும் பொழிகிறது;
மேடுகள் சுற்றிலும் பூரிப்பாயிருக்கிறது.
13 மேய்ச்சலுள்ள வெளிகளில் ஆடுகள் நிறைந்
திருக்கிறது; பள்ளத்தாக்குகள் தானியத்தால்
மூடியிருக்கிறது; [2]அவைகள் கெம்பீரித்துப்
பாடுகிறது.

## 66

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
சங்கீதமாகிய பாட்டு.)

பூமியின் குடிகளே, நீங்கள் எல்லாரும்
தேவனுக்கு முன்பாகக் கெம்பீரமாய்ப் பாடுங்
கள்.
2 அவர் நாமத்தின் மகத்துவத்தைக் கீர்த்தனம்
பண்ணி, அவருடைய துதியின் மகிமையைக்
கொண்டாடுங்கள்.
3 தேவனை நோக்கி: உமது கிரியைகளில்
எவ்வளவு பயங்கரமாயிருக்கிறீர்; உமது மகத்
துவமான வல்லமையினிமித்தம் உம்முடைய
சத்துருக்கள் உமக்கு இச்சகம்பேசி அடங்கு
வார்கள்.
4 பூமியின் மீதெங்கும் உம்மைப் பணிந்து
கொண்டு உம்மைத் துதித்துப் பாடுவார்கள்;
அவர்கள் உம்முடைய நாமத்தைத் துதித்துப்
பாடுவார்கள் என்று சொல்லுங்கள்.
5 தேவனுடைய செய்கைகளை வந்து பாருங்
கள்; அவர் மனுபுத்திரரிடத்தில் நடப்பிக்குங்
கிரியையில் பயங்கரமானவர்.
6 கடலை உலர்ந்த தரையாக மாற்றினார்; [3]ஆற்
றைக் கால் நடையாய்க் கடந்தார்கள்; அங்கே
அவரில் களிகூர்ந்தோம்.
7 அவர் தம்முடைய வல்லமையினால் என்
றென்றைக்கும் அரசாளுகிறார்; அவருடைய
கண்கள் ஜாதிகள்மேல் நோக்கமாயிருக்கிறது;
துரோகிகள் தங்களை உயர்த்தாதிருப்பார்களாக.
8 ஜனங்களே, நம்முடைய தேவனை ஸ்தோத்
திரித்து, அவரைத் துதிக்குஞ் சத்தத்தைக் கேட்
கப்பண்ணுங்கள்.
9 அவர் நம்முடைய கால்களைத் தள்ளாட
வொட்டாமல், நம்முடைய ஆத்துமாவை உயி
ரோடே வைக்கிறார்.
தேவனே, எங்களைச் சோதித்தீர்; [4]வெள் 10
ளியைப் புடமிடுகிறதுபோல எங்களைப் புட
மிட்டீர்.
எங்களை வலையில் அகப்படுத்தி, [5]எங்கள் 11
இடுப்புகளின்மேல் வருத்தமான பாரத்தை
ஏற்றினீர்.
மனுஷரை எங்கள் தலையின்மேல் ஏறிப் 12
போகப்பண்ணினீர்; தீயையும் தண்ணீரையும்
கடந்துவந்தோம்; செழிப்பான இடத்தில் எங்
களைக் கொண்டுவந்து விட்டீர்.
சர்வாங்க தகனபலிகளோடே [6]உமது ஆல 13
யத்திற்குள் பிரவேசிப்பேன்;
என் இக்கட்டில் நான் என் உதடுகளைத் 14
திறந்து, என் வாயினால் சொல்லிய என் பொ
ருத்தனைகளை [7]உமக்குச் செலுத்துவேன்.
ஆட்டுக்கடாக்களின் நிணப் புகையுடனே 15
கொழுமையானவைகளை உமக்குத் தகனபலி
யாக இடுவேன்; காளைகளையும் செம்மறியாட்
டுக்கடாக்களையும் உமக்குப் பலியிடுவேன்.
தேவனுக்குப் பயந்தவர்களே, நீங்கள் எல் 16
லாரும் வந்து கேளுங்கள்; [8]அவர் என் ஆத்து
மாவுக்குச் செய்ததைச் சொல்லுவேன்.
அவரை நோக்கி என் வாயினால் கூப்பிட் 17
டேன், என் நாவினால் அவர் புகழப்பட்டார்.
என் இருதயத்தில் அக்கிரம சிந்தைகொண் 18
டிருந்தேனானால்; [9]ஆண்டவர் எனக்குச் செ
விகொடார்.
மெய்யாய் தேவன் எனக்குச் செவிகொடுத் 19
தார், [10]என் ஜெபத்தின் சத்தத்தைக் கேட்டார்.
என் ஜெபத்தைத் தள்ளாமலும், தமது கிரு 20
பையை என்னைவிட்டு விலக்காமலும் இருந்த
தேவனுக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக.

## 67

(நெகிநோத் என்னும் வாத்தியத்தில் வாசிக்க
ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட சங்கீதப்பாட்டு.)

தேவனே, பூமியில் உம்முடைய வழியும்,
[11]எல்லா ஜாதிகளுக்குள்ளும் உம்முடைய ரட்
சணியமும் விளங்கும்படியாய்,
தேவரீர் எங்களுக்கு இரங்கி, எங்களை ஆசீர் 2
வதித்து, [12]உம்முடைய முகத்தை எங்கள்மேல்
பிரகாசிக்கப்பண்ணும்.
தேவனே, ஜனங்கள் உம்மைத் துதிப்பார்க 3
ளாக: [13]சகல ஜனங்களும் உம்மைத் துதிப்பார்
களாக.
தேவரீர் ஜனங்களை நிதானமாய் நியாயந் 4
தீர்த்து, [14]பூமியிலுள்ள ஜாதிகளை நடத்துவீர்;
ஆதலால் ஜாதிகள் சந்தோஷித்து, கெம்பீரத்
தோடே மகிழக்கடவர்கள்.
தேவனே, ஜனங்கள் உம்மைத் துதிப்பார் 5
களாக; சகல ஜனங்களும் உம்மைத் துதிப்பார்
களாக.
பூமி தன் பலனைத் தரும், [15]தேவனாகிய 6
எங்கள் தேவனே எங்களை ஆசீர்வதிப்பார்.
தேவன் எங்களை ஆசீர்வதிப்பார்; [16]பூமியின் 7
எல்லைகளெல்லாம் அவருக்குப் பயந்திருக்கும்.

[1] மத். 8. 26
[2] ஏசா. 55. 12
[3] யாத். 14. 12. யோசு. 3. 14, 16
[4] ஏசா. 48. 10. சகரி. 13. 9. 1 பே. 1. 6, 7
[5] ஓசி. 7. 12
[6] 100. 4
[7] பிர. 5. 4
[8] 34. 2–11. மாற். 5. 19
[9] நீதி. 28. 9. யோ. 9. 31. யாக். 4. 3
[10] 116. 1, 2
[11] மத். 28. 19. லூ. 2. 30, 31. அப். 18. 25. தீத். 2. 11
[12] எண். 6. 25
[13] 66. 4
[14] 96. 10, 13
[15] லேவி. 26. 4. எசே. 34. 27. ஓசி. 2. 21, 22
[16] 22. 27. சகரி. 9. 10. மல். 1. 11

**68** (இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் பாட்டாகிய சங்கீதம்.)

தேவன் எழுந்தருளுவார், [1]அவருடைய
சத்துருக்கள் சிதறுண்டு, அவரைப் பகைக்
கிறவர்கள் அவருக்கு முன்பாக ஓடிப்போ
வார்கள்.
2 புகை பறக்கடிக்கப்படுவதுபோல அவர்க
ளைப் பறக்கடிப்பீர்; [2]மெழுகு அக்கினிக்கு
முன் உருகுவதுபோல துன்மார்க்கர் தேவ
னுக்குமுன் அழிவார்கள்.
3 நீதிமான்களோ தேவனுக்கு முன்பாக
மகிழ்ந்து களிகூர்ந்து, [3]ஆனந்த சந்தோஷ
மடைவார்கள்.
4 தேவனைப் பாடி, அவருடைய நாமத்தைக்
கீர்த்தனம்பண்ணுங்கள்; வனாந்தரங்களில் ஏறி
வருகிறவருக்கு வழியை ஆயத்தப்படுத்துங்
கள்; அவருடைய நாமம் *யேகோவா, அவ
ருக்கு முன்பாகக் களிகூருங்கள்.
5 தம்முடைய பரிசுத்த வாசஸ்தலத்திலிருக்
கிற தேவன், திக்கற்ற பிள்ளைகளுக்குத் தகப்
பனும், [4]விதவைகளுக்கு நியாயம் விசாரிக்
கிறவருமாயிருக்கிறார்.
6 தேவன் தனிமையானவர்களுக்கு வீடுவா
சல் ஏற்படுத்தி, [5]கட்டுண்டவர்களை விடுதலை
யாக்குகிறார்; துரோகிகளோ வறண்ட பூமி
யில் தங்குவார்கள்.
7 தேவனே, நீர் உம்முடைய ஜனங்களுக்கு
முன்னே சென்று, [6]அவாந்தர வெளியிலே
நடந்துவருகையில்,
8 பூமி அதிர்ந்தது; [7]தேவனாகிய உமக்கு
முன்பாக வானமும் பொழிந்தது; இஸ்ரவே
லின் தேவனாயிருக்கிற தேவனுக்கு முன்
பாகவே இந்தச்சீனாய் மலையும் [8]அசைந்தது.
9 தேவனே, சம்பூரண மழையைப் பெய்
யப்பண்ணினீர்; [9]இளைத்துப்போன உமது
சுதந்தரத்தைத் திடப்படுத்தினீர்.
10 உம்முடைய மந்தை அதிலே தங்கியிருந்
தது; [10]தேவனே, உம்முடைய தயையினாலே
ஏழைகளைப் பராமரிக்கிறீர்.
11 ஆண்டவர் வசனம் தந்தார்; அதைப் பிர
சித்தப்படுத்துகிறவர்களின் கூட்டம் மிகுதி.
12 சேனைகளின் ராஜாக்கள் தத்தளித்து ஓடி
னார்கள்; [11]வீட்டிலிருந்த ஸ்திரீயானவள்
கொள்ளைப் பொருளைப் பங்கிட்டாள்.
13 நீங்கள் அடுப்பினடியில் கிடந்தவர்களாயி
ருந்தாலும், [12]வெள்ளியால் அலங்கரிக்கப்
பட்ட புறாச்சிறகுகள் போலவும், பசும்பொன்
நிறமாகிய அதின் இறகுகளின் சாயலாகவும்
இருப்பீர்கள்.
14 சர்வவல்லவர் அதில் ராஜாக்களைச் சிதற
டித்தபோது, [13]அது சல்மோன் மலையின்
உறைந்த மழைபோல் வெண்மையாயிற்று.
15 தேவபர்வதம் பாசான் பர்வதம்போலிருக்
கிறது; பாசான் பர்வதம் உயர்ந்த சிகரங்க
ளுள்ளது.
16 உயர்ந்த சிகரமுள்ள பர்வதங்களே, ஏன்
துள்ளுகிறீர்கள்; [14]இந்தப் பர்வதத்தில் வாசமா
யிருக்க தேவன் விரும்பினார்; ஆம், கர்த்தர்
இதிலே என்றென்றைக்கும் வாசமாயிருப்
பார்.
தேவனுடைய இரதங்கள் பதினாயிரங்க 17
ளும் ஆயிரமாயிரங்களுமாயிருக்கிறது; [15]ஆண்
டவர் பரிசுத்த ஸ்தலமான சீனாயிலிருந்தவண்
ணமாய் அவைகளுக்குள் இருக்கிறார்.
தேவரீர் உன்னதத்திற்கு ஏறி, [16]சிறைப் 18
பட்டவர்களைச் சிறையாக்கிக்கொண்டு போ
னீர்; தேவனாகிய கர்த்தர் மனுஷருக்குள்
வாசம்பண்ணும்பொருட்டு [17]துரோகிகளாகிய
மனுஷர்களுக்காகவும் வரங்களைப் பெற்றுக்
கொண்டீர்.
எந்நாளும் ஆண்டவருக்கு ஸ்தோத்திர 19
முண்டாவதாக; நம்மேல் பாரஞ்சுமத்தினாலும்
நம்மை ரட்சிக்கிற தேவன் அவரே.
நம்முடைய தேவன் ரட்சிப்பை அருளும் 20
தேவனாயிருக்கிறார்; [18]ஆண்டவராகிய கர்த்த
ரால் மரணத்திற்கு நீங்கும் வழிகளுண்டு.
மெய்யாகவே தேவன் தம்முடைய சத்து 21
ருக்களின் சிரசையும், [19]தன் அக்கிரமங்க
ளில் துணிந்து நடக்கிறவனுடைய மயிருள்ள
உச்சந் தலையையும் உடைப்பார்.
உன் கால்கள் சத்துருக்களின் இரத்தத்தில் 22
பதியும்படியாகவும், [20]உன் நாய்களின் நாவு
அதை நக்கும்படியாகவும்,
என்னுடைய ஜனத்தைப் பாசானிலிருந்து 23
திரும்ப அழைத்துவருவேன்; [21]அதைச் சமுத்
திர ஆழங்களிலிருந்தும் திரும்ப அழைத்து
வருவேன் என்று ஆண்டவர் சொன்னார்.
தேவனே, உம்முடைய நடைகளைக் கண் 24
டார்கள்; என் தேவனும் என் ராஜாவும் பரி
சுத்த ஸ்தலத்திலே நடந்துவருகிற நடைக
ளையே கண்டார்கள்.
முன்னாகப் பாடுகிறவர்களும், [22]பின்னாக 25
வீணைகளை வாசிக்கிறவர்களும், சுற்றிலும் தம்
புரு வாசிக்கிற கன்னிகைகளும் நடந்தார்
கள்.
இஸ்ரவேலின் ஊற்றிலிருந்து [23]தோன் 26
றினவர்களே, சபைகளின் நடுவே ஆண்டவ
ராகிய தேவனை ஸ்தோத்திரியுங்கள்.
அங்கே அவர்களை ஆளுகிற சின்ன பென் 27
யமீனும், [24]யூதாவின் பிரபுக்களும், அவர்கள்
கூட்டமும், செபுலோனின் பிரபுக்களும், நப்
தலியின்பிரபுக்களும் உண்டு.
உன் தேவன் உனக்குப் பலத்தைக் கட்ட 28
ளையிட்டார்; [25]தேவனே, நீர் எங்கள் நிமித்தம்
உண்டுபண்ணினதைத் திடப்படுத்தும்.
எருசலேமிலுள்ள உம்முடைய ஆலயத்தி 29
னிமித்தம், [26]ராஜாக்கள் உமக்குக் காணிக்கை
களைக் கொண்டுவருவார்கள்.
நாணலிலுள்ள மிருககூட்டத்தையும், 30
†ஜனங்களாகிய கன்றுகளோடுகூட ரிஷபகூட்
டத்தையும் அதட்டும்; ஒவ்வொருவனும் வெள்
ளிப்பணங்களைக் கொண்டுவந்து பணிந்து
கொள்ளுவான்; யுத்தங்களில் பிரியப்படுகிற
ஜனங்களைச் சிதறடிப்பார்.

1 எண். 10. 35. ஏசா. 33. 3
2 ஓசி. 13. 3. மீகா. 1. 4
3 1 தெச. 5 16
* ஆதி. 2. 4. யாத். 6. 3. காண்க
4 எரே. 49. 11
5 107. 10
6 யாத். 13. 21
7 ஆப. 3. 13
8 யாத். 19. 16
9 உபா. 11. 11-14
10 1 சாமு. 2. 8. மத். 11. 5
11 எண். 31. 8, 9, 54. யோசு. 10. 16
12 81. 6
13 யோசு. 12. 1
14 1 இரா. 9. 3
15 உபா. 33. 2
16 அப். 1. 2, 9: 2. 4, 33. எபே. 4. 8
17 1 கொ. 6. 9-11. 1 தீமோ. 1. 13, 15
18 உபா. 32. 39. வெளி. 1. 18
19 ஆப. 3. 13
20 ஏசா. 63. 1-6
21 யாத். 14. 22. எண். 21. 33
22 1 நாளா. 13. 8. வெளி. 15. 2, 3
23 உபா. 33. 28. ஏசா. 48. 1
24 1 சாமு. 9. 21. 10. 20-24
25 ஏசா. 40. 31
26 ஏசா. 60. 16, 17
† கோமான்கள், புங்கவர்.

31 பிறபுக்கள் எகிப்திலிருந்து வருவார்கள்;
[1]எத்தியோப்பியா தேவனை நோக்கி கையெடுக்கத் தீவிரிக்கும்.
32 பூமியின் ராஜ்யங்களே, தேவனைப் பாடி,
ஆண்டவரைக் கீர்த்தனம்பண்ணுங்கள்.
33 ஆதிமுதலாயிருக்கிற வானாதி வானங்களின்
மேல் எழுந்தருளியிருக்கிறவரைப் பாடுங்கள்;
இதோ, தமது சத்தத்தைப் பலத்த சத்தமாய்
முழங்கப்பண்ணுகிறார்.
34 தேவனுடைய வல்லமையைப் பிரசித்தப்
படுத்துங்கள்; அவருடைய மகிமை இஸ்ர
வேலின்மேலும், அவருடைய வல்லமை மேக
மண்டலங்களிலும் உள்ளது.
35 தேவனே, உமது பரிசுத்த ஸ்தலங்களி
லிருந்து பயங்கரமாய் விளங்குகிறீர்; [2]இஸ்ர
வேலின் தேவன் தம்முடைய ஜனங்களுக்
குப் பெலனையும் சத்துவத்தையும் அருளுகிற
வர்; தேவனுக்கு ஸ்தோத்திரமுண்டாவதாக.

69 (சோஷனீம் வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

தேவனே, என்னை ரட்சியும்; [3]வெள்ளங்
கள் என் ஆத்துமாமட்டும் பெருகிவருகிறது.
2 ஆழமான உளையில் அமிழ்ந்திருக்கிறேன்,
நிற்க நிலையில்லை, [4]நிலையாத ஜலத்தில் ஆழ்ந்
திருக்கிறேன்; வெள்ளங்கள் என்மேல் புரண்டு
போகிறது.
3 நான் கூப்பிடுகிறதினால் இளைத்தேன்; என்
தொண்டை வறண்டுபோயிற்று; [5]என் தேவ
னுக்கு நான் காத்திருக்கையால், என் கண்கள்
பூத்துப்போயிற்று.
4 நிமித்தமில்லாமல் என்னைப் பகைக்கிறவர்
கள் [6]என் தலைமயிரிலும் அதிகமாயிருக்கிறார்
கள்; வீணாக எனக்குச் சத்துருக்களாகி என்
னைச் சங்கரிக்கவேண்டுமென்றிருக்கிறவர்கள்
பலத்திருக்கிறார்கள்; நான் எடுத்துக்கொள்ளா
ததை நான் கொடுக்கவேண்டியதாயிற்று.
5 தேவனே, நீர் என் புத்தியீனத்தை அறிந்
திருக்கிறீர்; என் குற்றங்கள் உமக்கு மறைந்
திருக்கவில்லை.
6 சேனைகளின் கர்த்தராகிய ஆண்டவரே,
உமக்காகக் காத்திருக்கிறவர்கள் என்னிமித்தம்
வெட்கப்பட்டுப் போகாதிருப்பார்களாக; இஸ்
ரவேலின் தேவனே, உம்மைத் தேடுகிறவர்கள்
என்னிமித்தம் நாணமடையாதிருப்பார்க
ளாக.
7 உமதுநிமித்தம் நிந்தையைச் சகித்தேன்;
இலச்சை என் முகத்தை மூடிற்று.
8 என் சகோதரருக்கு வேற்று மனுஷனும்,
[7]என் தாயின் பிள்ளைகளுக்கு அந்நியனுமா
னேன்.
9 உம்முடைய வீட்டைக்குறித்து உண்டான
பக்திவைராக்கியம் என்னைப் பட்சித்தது;
[8]உம்மை நிந்திக்கிறவர்களுடைய நிந்தனைகள்
என்மேல் விழுந்தது.
10 என் ஆத்துமா வாடும்படி உபவாசித்து
அழுதேன்; [9]அதுவும் எனக்கு நிந்தையாய்
முடிந்தது.
இரட்டை என் உடுப்பாக்கினேன்; [10]அப் 11
பொழுதும் அவர்களுக்குப் பழமொழியா
னேன்.
வாசலில் உட்கார்ந்திருக்கிறவர்கள் எனக்கு 12
விரோதமாய்ப் பேசுகிறார்கள்; மதுபானம்
பண்ணுகிறவர்களின் பாடலானேன்.
ஆனாலும் கர்த்தாவே, [11]அநுக்கிரககாலத் 13
திலே உம்மை நோக்கி விண்ணப்பஞ்செய்கி
றேன்; தேவனே, உமது மிகுந்த கிருபையி
னாலும் உமது ரட்சிப்பின் சத்தியத்தினாலும்
எனக்குச் செவிகொடுத்தருளும்.
நான் அமிழ்ந்திப்போகாதபடிக்குச் சேற்றி 14
னின்று என்னைத் தூக்கிவிடும்; என்னைப்
பகைக்கிறவர்களினின்றும் நிலையாத ஜலத்தி
னின்றும் நான் நீங்கும்படி செய்யும்.
ஜலப்பிரவாகங்கள் என்மேல் புரளாமலும், 15
[12]ஆழம் என்னை விழுங்காமலும், பாதாளம்
என்மேல் தன் வாயை [13]அடைத்துக்கொள்
ளாமலும் இருப்பதாக.
கர்த்தாவே, என் விண்ணப்பத்தைக் கேட் 16
டருளும், உம்முடைய தயை நலமாயிருக்கி
றது; [14]உமது உருக்கமான இரக்கங்களின்
படி என்னைக் கடாட்சித்தருளும்.
உமது முகத்தை உமது அடியேனுக்கு 17
மறையாதேயும்; நான் வியாகுலப்படுகிறேன்,
எனக்குத் தீவிரமாய்ச் செவிகொடுத்தருளும்.
நீர் என் ஆத்துமாவினிடத்தில் வந்து அதை 18
விடுதலைபண்ணும்; என் சத்துருக்களினிமித்
தம் என்னை மீட்டுவிடும்.
தேவரீர் என் நிந்தையையும் என் வெட் 19
கத்தையும் என் [15]அவமானத்தையும் அறிந்
திருக்கிறீர்; என் சத்துருக்கள் எல்லாரும்
உமக்கு முன்பாக இருக்கிறார்கள்.
நிந்தை என் இருதயத்தைப் பிளந்தது; 20
நான் மிகவும் வேதனைப்படுகிறேன்; எனக்காக
பரிதபிக்கிறவனுண்டோ என்று காத்திருந்
தேன், ஒருவனும் இல்லை; [16]தேற்றுகிறவர்க
ளுக்குக் காத்திருந்தேன், ஒருவனையும் கா
ணேன்.
என் ஆகாரத்தில் கசப்புக் கலந்து கொடுத் 21
தார்கள், [17]என் தாகத்துக்குக் காடியைக் குடிக்
கக் கொடுத்தார்கள்.
அவர்களுடைய பந்தி அவர்களுக்குக் கண் 22
ணியும், [18]அவர்களுடைய செல்வம் அவர்க
ளுக்கு வலையுமாயிருக்கக்கடவது.
அவர்களுடைய கண்கள் காணாதபடி [19]அந் 23
தகாரப்படக்கடவது; அவர்கள் இடுப்புகளை
எப்போதும் தள்ளாடப்பண்ணும்.
உம்முடைய உக்கிரத்தை அவர்கள்மேல் 24
ஊற்றும்; [20]உம்முடைய கோபாக்கினி அவர்
களைத் தொடர்ந்து பிடிப்பதாக.
அவர்கள் வாசஸ்தலம் பாழாகக்கடவது; 25
[21]அவர்களுடைய கூடாரங்களில் குடியில்
லாமற்போவதாக.
தேவரீர் அடித்தவனை அவர்கள் துன்பப் 26
படுத்தி, [22]நீர் காயப்படுத்தினவர்களை நோகப்
பேசுகிறார்களே.

[1] ஏசா. 19. 18–25. செப். 3. 10. அப். 8. 27
[2] யாத். 15. 11. ஏசா. 45. 24
[3] யோவே. 2. 5
[4] 40. 2
[5] ஏசா. 38. 14
[6] யோ. 15. 25
[7] யோ. 1. 11: 7. 5
[8] யோ. 2. 17. ரோ. 15. 3
[9] 35. 12. ஓ. ஆ. 7. 33
[10] 1 இரா. 9. 7
[11] 32. 6. ஏசா. 49. 8: 55. 6. 2 கொ. 6. 2
[12] ஏசா. 43. 1, 2
[13] 16. 10. அப். 2. 24. ஓ.
[14] 86. 16 மீகா. 7. 19
[15] 22. 6, 7. ஏசா. 53. 3. எபி. 12. 2
[16] ஏசா. 63. 5 மாற். 14. 50
[17] மத். 27. 34, 48. யோ. 19. 29, 30
[18] ரோ. 11. 8–10
[19] 2 கொ. 3. 14
[20] 1 தெச. 2. 15, 16
[21] மத். 23. 38. அப். 1. 20
[22] ஏசா. 53. 5. சக. 1. 15

27 அக்கிரமத்தின்மேல் அக்கிரமத்தை அவர்
கள்மேல் சுமத்தும், ¹அவர்கள் உமது நீதிக்கு
வந்தெட்டாதிருப்பார்களாக.
28 ஜீவபுஸ்தகத்திலிருந்து அவர்கள் பேர் கிறுக்
கப்பட்டுபோவதாக; ²நீதிமான்கள் பேரோ
டே அவர்கள் பேர் எழுதப்படாதிருப்பதாக.
29 நானோ சிறுமையும் துயரமுமுள்ளவன்;
தேவனே, உம்முடைய ரட்சிப்பு எனக்கு
உயர்ந்த அடைக்கலமாவதாக.
30 தேவனுடைய நாமத்தைப் பாட்டினால்
துதித்து, அவரை ஸ்தோத்திரத்தினால் மகி
மைப்படுத்துவேன்.
31 கொம்பும் விரிகுளம்புமுள்ள காளையெரு
தைப்பார்க்கிலும், ³இதுவே கர்த்தருக்குப் பிரி
யமாயிருக்கும்.
32 சாந்தகுணமுள்ளவர்கள் இதைக் கண்டு
சந்தோஷப்படுவார்கள்; தேவனைத் தேடுகிற
வர்களே உங்கள் இருதயம் வாழும்.
33 கர்த்தர் எளியவர்களின் விண்ணப்பத்தைக்
கேட்கிறார். ⁴கட்டுண்ட தம்முடையவர்களை
அவர் புறக்கணியார்.
34 வானமும் பூமியும் சமுத்திரங்களும் அவை
களில் சஞ்சரிக்கிற யாவும் அவரைத் துதிக்
கக்கடவது.
35 தேவன் சீயோனை ரட்சித்து, யூதாவின்
பட்டணங்களைக் கட்டுவார்; ⁵அப்பொழுது
அங்கே குடியிருந்து அதைச் சுதந்தரித்துக்
கொள்ளுவார்கள்.
36 அவருடைய ஊழியக்காரரின் சந்ததியார்
அதைச் சுதந்தரித்துக் கொள்வார்கள்; ⁶அவ
ருடைய நாமத்தை நேசிக்கிறவர்கள் அதில்
வாசமாயிருப்பார்கள்.

70 (நினைப்பூட்டுதலாகப் பாடி ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட தாவீதின் சங்கீதம்.)

தேவனே, என்னை விடுவியும், ⁷கர்த்
தாவே, எனக்குச் சகாயஞ்செய்யத் தீவிரியும்.
2 என் பிராணனை வாங்கத் தேடுகிறவர்கள்
வெட்கி நாணுவார்களாக; எனக்குத் தீங்கு
வரும்படி விரும்புகிறவர்கள் பின்னிட்டுத்
திரும்பி இலச்சையடைவார்களாக.
3 ஆ ஆ, ஆ ஆ, என்பவர்கள் தாங்கள் அடையும்
வெட்கத்தினால் பின்னிட்டுப்போவார்களாக.
4 உம்மைத் தேடுகிற யாவரும் உம்மில்
மகிழ்ந்து சந்தோஷப்படுவார்களாக; ⁸உமது
ரட்சிப்பில் பிரியப்படுகிறவர்கள் தேவனுக்கு
மகிமையுண்டாவதாக என்று எப்பொழுதும்
சொல்வார்களாக.
5 நானோ சிறுமையும் எளிமையுமானவன்;
⁹தேவனே, என்னிடத்தில் தீவிரமாய் வாரும்:
நீரே என் துணையும் என்னை விடுவிக்கிறவரு
மானவர், கர்த்தாவே, தாமதியாதேயும்.

71 கர்த்தாவே, உம்மை நம்பியிருக்கிறேன்;
¹⁰நான் ஒருபோதும் வெட்கம் அடையாதபடி
செய்யும்.
2 உமது நீதியினிமித்தம் என்னை விடுவித்து,
என்னைக் காத்தருளும்; உமது செவியை
எனக்குச் சாய்த்து, என்னை ரட்சியும்.

¹ ரோ. 1. 28
² லூ. 10. 20. வெளி. 13. 8
³ 50. 13, 14, 23
⁴ எபே. 3. 1
⁵ எசே. 36. 35, 36
⁶ யோ. 14. 23. வெளி. 21. 27
⁷ 40. 13–17
⁸ புல. 3. 25. ஏசா. 61. 10
⁹ 102. 28
¹⁰ 31. 1–3
¹¹ நீதி. 18. 10
¹² எரே. 17. 7, 17
¹³ 22. 9, 10. ஏசா. 46. 3, 4
¹⁴ ஏசா. 8. 18. சகரி. 3. 8. 1 கொ. 4. 9
¹⁵ 2 சாமு. 17. 1. மத். 27. 1
¹⁶ 139. 17, 18
¹⁷ ஏசா. 45. 24, 25. பிலி. 3. 9
¹⁸ ஏசா. 46. 4
¹⁹ ஏசா. 55. 9

நான் எப்பொழுதும் வந்தடையத்தக்க கன் 3
மலையாயிரும்; ¹¹என்னை ரட்சிப்பதற்குக் கட்
டளையிட்டீரே; நீரே என் கன்மலையும் என்
கோட்டையுமாய் இருக்கிறீர்.
என்தேவனே, துன்மார்க்கனுடைய கைக் 4
கும், நியாயக்கேடும் கொடுமையுமுள்ளவனு
டைய கைக்கும் என்னைத் தப்புவியும்.
கர்த்தராகிய ஆண்டவரே, நீரே என் 5
நோக்கமும், ¹²என் சிறுவயதுதொடங்கி என்
நம்பிக்கையுமாயிருக்கிறீர்.
நான் கர்ப்பத்தில் உற்பவித்ததுமுதல் உம் 6
மால் ஆதரிக்கப்பட்டேன்; ¹³என் தாயின்
வயிற்றிலிருந்து என்னை எடுத்தவர் நீரே; உம்
மையே நான் எப்பொழுதும் துதிப்பேன்.
அநேகருக்கு நான் ஒரு ¹⁴புதுமைபோலா 7
னேன்; நீரோ எனக்குப் பலத்த அடைக்கல
மாயிருக்கிறீர்.
என் வாய் உமது துதியினாலும், நாள்தோ 8
றும் உமது மகத்துவத்தினாலும் நிறைந்திருப்
பதாக.
முதிர்ந்த வயதில் என்னைத் தள்ளிவிடாம 9
லும், என் பெலன் ஒடுங்கும்போது என்னைக்
கைவிடாமலும் இரும்.
என் சத்துருக்கள் எனக்கு விரோதமாய்ப் 10
பேசி, என் ஆத்துமாவுக்குக் காத்திருக்கிறவர்
கள் ஏகமாய் ¹⁵ஆலோசனை பண்ணி:
தேவன் அவனைக் கைவிட்டார், அவனைத் 11
தொடர்ந்து பிடியுங்கள்; அவனை விடுவிப்
பார் இல்லை என்கிறார்கள்.
தேவனே, எனக்குத் தூரமாயிராதேயும்; 12
என் தேவனே, எனக்குச் சகாயம்பண்ணத்
தீவிரியும்.
என் ஆத்துமாவை விரோதிக்கிறவர்கள் 13
வெட்கி அழியவும், எனக்குப் பொல்லாப்புத்
தேடுகிறவர்கள் நிந்தையாலும் இலச்சையா
லும் மூடப்படவுங்கடவர்கள்.
நானோ எப்பொழுதும் நம்பிக்கைகொண் 14
டிருந்து, மேன்மேலும் உம்மைத் துதிப்பேன்.
என் வாய் நாள்தோறும் உமது நீதியையும் 15
உமது ரட்சிப்பையும் சொல்லும்; ¹⁶அவைக
ளின் தொகையை நான் அறியேன்.
கர்த்தராகிய ஆண்டவருடைய வல்லமை 16
யை முன்னிட்டு நடப்பேன்; உம்முடைய
நீதியைப்பற்றியே ¹⁷மேன்மை பாராட்டு
வேன்.
தேவனே, என் சிறுவயதுமுதல் எனக்குப் 17
போதித்துவந்தீர்; இதுவரைக்கும் உம்முடைய
அதிசயங்களை அறிவித்து வந்தேன்.
இப்பொழுதும் தேவனே, இந்தச் சந்த 18
திக்கு உமது வல்லமையையும், வரப்போகிற
யாவருக்கும் உமது பராக்கிரமத்தையும் நான்
அறிவிக்குமளவும், ¹⁸முதிர்வயதும் நரைமயிரு
முள்ளவனாகும்வரைக்கும் என்னைக் கை
விடீராக.
தேவனே, உம்முடைய நீதி உன்னதமா 19
னது, ¹⁹பெரிதானவைகளை நீர் செய்தீர்; தே
வனே, உமக்கு நிகரானவர் யார்?

20 அநேக இக்கட்டுகளையும் ஆபத்துகளையும்
காணும்படி செய்த என்னை நீர் திரும்பவும்
உயிர்ப்பித்து, [1]திரும்பவும் என்னைப் பூமி
யின் பாதாளங்களிலிருந்து ஏறப்பண்ணுவீர்.
21 என் மேன்மையைப் பெருகப்பண்ணி,
என்னை மறுபடியும் தேற்றுவீர்.
22 என் தேவனே, நான் வீணையைக்கொண்டு
உம்மையும் உம்முடைய சத்தியத்தையும் துதிப்
பேன்; இஸ்ரவேலின் பரிசுத்தரே, சுரமண்ட
லத்தைக்கொண்டு உம்மைப் பாடுவேன்.
23 நான் பாடும்போது என் உதடுகளும், நீர்
மீட்டுக்கொண்ட என் ஆத்துமாவும் [2]கெம்
பீரித்து மகிழும்.
24 எனக்குப் பொல்லாப்பைத் தேடுகிறவர்கள்
வெட்கி இலச்சையடைந்தபடியால், நாள்
தோறும் என் நாவு உமது நீதியைக் கொண்
டாடும்.

## 72

(சாலொமோனைப்பற்றிய சங்கீதம்.)

தேவனே, ராஜாவுக்கு உம்முடைய நியா
யத்தீர்ப்புகளையும், [3]ராஜாவின் குமாரனுக்கு
உம்முடைய நீதியையும் கொடுத்தருளும்.
2 அவர் உம்முடைய ஜனங்களை நீதியோடும்,
[4]உம்முடைய ஏழைகளை நியாயத்தோடும் விசா
ரிப்பார்.
3 பர்வதங்கள் ஜனத்திற்குச் சமாதானத்தைத்
தரும், [5]மேடுகள் நீதியின் விளைவோடிருக்கும்.
4 ஜனத்தில் சிறுமைப்படுகிறவர்களை அவர்
நியாயம் விசாரித்து, ஏழையின் பிள்ளைகளை
ரட்சித்து, [6]இடுக்கண் செய்கிறவனை நொ
றுக்குவார்.
5 சூரியனும் சந்திரனுமுள்ளமட்டும், அவர்
கள் உமக்குத் தலைமுறை தலைமுறையாகப்
பயந்திருப்பார்கள்.
6 புல்லறுப்புண்ட வெளியின்மேல் பெய்யும்
மழையைப்போலவும், [7]பூமியை நனைக்கும்
தூறலைப்போலவும் இறங்குவார்.
7 அவருடைய நாட்களில் நீதிமான் செழிப்
பான்; சந்திரனுள்ளவரைக்கும் மிகுந்த சமா
தானம் இருக்கும்.
8 ஒரு சமுத்திரந்தொடங்கி மறு சமுத்திரம்
வரைக்கும், [8]நதிதொடங்கிப் பூமியின் எல்லை
கள்வரைக்கும் அவர் அரசாளுவார்.
9 வனாந்தரத்தார் அவருக்கு முன்பாகக்
குனிந்து வணங்குவார்கள்; [9]அவருடைய சத்
துருக்கள் மண்ணை நக்குவார்கள்.
10 தர்ஷீசின் ராஜாக்களும் [10]தீவுகளின் ராஜாக்
களும் காணிக்கைகளைக் கொண்டுவருவார்கள்;
ஷேபாவிலும் சேபாவிலுமுள்ள ராஜாக்கள்
வெகுமானங்களைக் கொண்டுவருவார்கள்.
11 சகல ராஜாக்களும் அவரைப் பணிந்து
கொள்வார்கள்; சகல [11]ஜாதிகளும் அவரைச்
சேவிப்பார்கள்.
12 கூப்பிடுகிற எளியவனையும், [12]உதவியற்ற
சிறுமையானவனையும் அவர் விடுவிப்பார்.
13 பலவீனனுக்கும் எளியவனுக்கும் அவர்
இரங்கி, எளியவர்களின் ஆத்துமாக்களை ரட்
சிப்பார்.

[1] ஓசி. 6. 1, 2
[2] 103. 4
[3] 1 இரா. 1. 36, 37
[4] ஏசா. 11. 2–4. 32. 1
[5] 85. 10, 11. ஏசா. 32. 17
[6] ஏசா. 11. 4: 51. 12, 13. வெளி. 12. 10
[7] 2 சாமு. 23. 4. ஓசி. 6. 3
[8] 1 இரா. 4. 20–24. சகரி. 9. 10
[9] ஏசா. 49. 23. மீகா. 7. 17
[10] 2 நாளா. 9. 21. மத். 2. 11
[11] ஏசா. 49. 7, 23
[12] ஏசா. 41. 17. எபி. 7. 25
[13] வெளி. 1. 18
[14] யூதா. 25
[15] ஓசி. 14. 5–7
[16] ஆதி. 12. 3. எரே. 4. 2
[17] யாத். 15. 11.
[18] எண். 14. 21. ஆப. 2. 14. வெளி. 5. 13
[19] 37. 1
[20] யோபு 21. 9
[21] 109. 18
[22] யோபு 15 27
[23] யூதா. 16
[24] வெளி. 13. 6

அவர்கள் ஆத்துமாக்களை வஞ்சகத்திற்கும் 14
கொடுமைக்கும் தப்புவிப்பார்; அவர்களுடைய
இரத்தம் அவருடைய பார்வைக்கு அருமை
யாயிருக்கும்.
அவர் பிழைத்திருப்பார், [13]ஷேபாவின் 15
பொன் அவருக்குக் கொடுக்கப்படும்; அவர்
நிமித்தம் இடைவிடாமல் ஜெபம் பண்ணப்
படும், [14]எந்நாளும் ஸ்தோத்திரிக்கப்படுவார்.
பூமியிலே மலைகளின் உச்சிகளில் ஒரு 16
பிடிதானியம் விதைக்கப்பட்டிருக்கும்; அதின்
விளைவு லீபனோனைப்போல அசையும்; [15]பூமி
யின் புல்லைப்போல நகரத்தார் செழித்தோங்
குவார்கள்.
அவருடைய நாமம் என்றென்றைக்கும் 17
இருக்கும்; சூரியனுள்ளமட்டும் அவருடைய
நாமம் சந்தான பரம்பரையாய் நிலைக்கும்;
[16]மனுஷர் அவருக்குள் ஆசீர்வதிக்கப்படுவார்
கள், எல்லா ஜாதிகளும் அவரைப் பாக்கிய
முடையவர் என்று வாழ்த்துவார்கள்.
இஸ்ரவேலின் தேவனாயிருக்கிற கர்த்தரா 18
கிய தேவனுக்கு ஸ்தோத்திர முண்டாவதாக;
[17]அவரே அதிசயங்களைச் செய்கிறவர்.
அவருடைய மகிமைபொருந்திய நாமத் 19
துக்கு என்றென்றைக்கும் ஸ்தோத்திரமுண்
டாவதாக; [18]பூமிமுழுவதும் அவருடைய மகி
மையால் நிறைந்திருப்பதாக. ஆமென்,
ஆமென்.
ஈசாயின் புத்திரனாகிய தாவீதின் விண் 20
ணப்பங்கள் முடிந்தது.

## 73

(ஆசாபின் சங்கீதம்.)

சுத்த இருதயமுள்ளவர்களாகிய இஸ்ரவே
லருக்கு தேவன் நல்லவராகவே இருக்கிறார்.
ஆனாலும் என் கால்கள் தள்ளாடுதலுக்கும், 2
என் அடிகள் சறுக்குதலுக்கும் சற்றே தப்
பிற்று.
துன்மார்க்கரின் வாழ்வை நான் காண்கை 3
யில், [19]வீம்புக்காரராகிய அவர்கள்மேல் பொ
றாமை கொண்டேன்.
மரணபரியந்தம் அவர்களுக்கு இடுக்கண் 4
களில்லை; அவர்களுடைய பெலன் உறுதி
யாயிருக்கிறது.
நரர்படும் வருத்தத்தில் அகப்படார்கள்; 5
[20]மனுஷர் அடையும் உபாதியை அடையார்
கள்.
ஆகையால் பெருமை சரப்பணியைப் 6
போல் அவர்களைச் சுற்றிக்கொள்ளும், [21]கொ
டுமை ஆடையைப்போல் அவர்களை மூடிக்
கொள்ளும்.
அவர்கள் கண்கள் கொழுப்பினால் எடுப் 7
பாய்ப் பார்க்கிறது; [22]அவர்கள் இருதயம்
விரும்புவதிலும் அதிகமாய் நடந்தேறுகிறது.
அவர்கள் சீர்கெட்டுப்போய், அகந்தையாய்க் 8
கொடுமைபேசுகிறார்கள்; [23]இறுமாப்பாய்ப்பே
சுகிறார்கள்.
தங்கள் வாய் வானமட்டும் எட்டப் பேசு 9
கிறார்கள்; [24]அவர்கள் நாவு பூமியெங்கும் உலா
வுகிறது.

10 ஆகையால் அவருடைய ஜனங்கள் இந்த
வழியாகவே திரும்புகிறார்கள்; தண்ணீர்கள்
அவர்களுக்குப் பரிபூரணமாய்ச் சுரந்துவரும்.
11 தேவனுக்கு அது எப்படித் தெரியும்? [1]உன்
னதமானவருக்கு அதைப்பற்றி அறிவு உண்
டோ? என்று சொல்லுகிறார்கள்.
12 இதோ, இவர்கள் துன்மார்க்கர்; இவர்கள்
என்றும் சுகஜீவிகளாயிருந்து, ஆஸ்தியைப்
பெருகப்பண்ணுகிறார்கள்.
13 நான் விருதாவாகவே என் இருதயத்தைச்
சுத்தம்பண்ணி, [2]குற்றமில்லாமையிலே என்
கைகளைக் கழுவினேன்.
14 நாள்தோறும் நான் வாதிக்கப்பட்டும், காலை
தோறும் தண்டிக்கப்பட்டும் இருக்கிறேன்.
15 இவ்விதமாய்ப் பேசுவேன் என்று நான்
சொன்னேனானால், இதோ, உம்முடைய
பிள்ளைகளின் சந்ததிக்குத் துரோகியாவேன்.
16 இதை அறியும்படிக்கு யோசித்துப்பார்த்
தேன்; நான் தேவனுடைய பரிசுத்த ஸ்தலத்
துக்குள் பிரவேசித்து,
17 அவர்கள் முடிவைக் கவனித்து உணருமள
வும், [3]அது என் பார்வைக்கு விசனமாயிருந்
தது.
18 நிச்சயமாகவே நீர் அவர்களைச் சறுக்கலான
இடங்களில் நிறுத்தி, பாழான இடங்களில்
விழப்பண்ணுகிறீர்.
19 அவர்கள் ஒரு நிமிஷத்தில் எவ்வளவு
பாழாய்ப்போகிறார்கள்! பயங்கரங்களால்
அழிந்து நிர்மூலமாகிறார்கள்.
20 நித்திரை தெளிந்தவுடனே சொப்பனம்
ஒழிவதுபோல், [4]ஆண்டவரே, நீர் விழிக்கும்
போது, அவர்கள் வேஷத்தை இகழுவீர்.
21 இப்படியாக என் மனம் கசந்தது, என்
உள்ளிந்திரியங்களிலே குத்துண்டேன்.
22 நான் காரியம் அறியாத மூடனானேன்;
[5]உமக்கு முன்பாக மிருகம்போலிருந்தேன்.
23 ஆனாலும் நான் எப்பொழுதும் உம்மோடி
ருக்கிறேன்; என் வலது கையைப் பிடித்துத்
தாங்குகிறீர்.
24 உம்முடைய ஆலோசனையின்படி நீர் என்
னை நடத்தி, [6]முடிவிலே என்னை மகிமையில்
ஏற்றுக்கொள்வீர்.
25 பரலோகத்தில் உம்மையல்லாமல் எனக்கு
யார் உண்டு? பூலோகத்தில் உம்மைத் தவிர
எனக்கு வேறே விருப்பமில்லை.
26 என் மாம்சமும் என் இருதயமும் மாண்டு
போகிறது; [7]தேவன் என்றென்றைக்கும் என்
இருதயத்தின் கன்மலையும் என் பங்குமாயிருக்
கிறார்.
27 இதோ, உம்மைவிட்டுத் தூரமாய்ப் போகி
றவர்கள் நாசமடைவார்கள்; உம்மைவிட்டுச்
சோரம்போகிற அனைவரையும் சங்கரிப்பீர்.
28 எனக்கோ, [8]தேவனை அண்டிக்கொண்டி
ருப்பதே நலம்; நான் உமது கிரியைகளை
யெல்லாம் சொல்லிவரும்படி கர்த்தராகிய
ஆண்டவர்மேல் என் நம்பிக்கையை வைத்தி
ருக்கிறேன்.

(மஸ்கீல் என்னும் ஆசாபின் போதக சங்கீதம்.) 74
தேவனே, நீர் எங்களை என்றென்றைக்
கும் ஏன் தள்ளிவிடுகிறீர்? [9]உமது மேய்ச்ச
லின் ஆடுகள்மேல் உமது கோபம் ஏன் புகை
கிறது?
நீர் பூர்வகாலத்தில் சம்பாதித்த உமது சபை 2
யையும், [10]நீர் மீட்டுக்கொண்ட உமது சுதந்தர
மான கோத்திரத்தையும், நீர் வாசமாயிருந்த
சீயோன் பர்வதத்தையும் நினைத்தருளும்.
நெடுங்காலமாகப் பாழாய்க் கிடக்கிற ஸ்த 3
லங்களில் உம்முடைய பாதங்களை எழுந்தரு
ளப்பண்ணும்; பரிசுத்த ஸ்தலத்திலே சத்துரு
அனைத்தையும் கெடுத்துப்போட்டான்.
உம்முடைய சத்துருக்கள் உம்முடைய 4
*ஆலயங்களுக்குள்ளே கெர்ச்சித்து, தங்கள்
கொடிகளை [11]அடையாளங்களாக நாட்டுகிறார்
கள்.
கோடரிகளை ஓங்கிச் சோலையிலே மரங் 5
களைவெட்டுகிறவன் பேர் பெற்றவனானான்.
இப்பொழுதோ அவர்கள் அதின் சித்திர 6
வேலைகள் முழுவதையும் வாச்சிகளாலும் சம்
மட்டிகளாலும் [12]தகர்த்துப்போடுகிறார்கள்.
உமது பரிசுத்த ஸ்தலத்தை அக்கினிக்கு 7
இரையாக்கி, உமது †நாமத்தின் வாசஸ்தலத்
தைத் தரைமட்டும் இடித்து, [13]அசுத்தப் படுத்
தினார்கள்.
அவர்களை ஏகமாய் நிர்த்தூளியாக்குவோம் 8
என்று தங்கள் இருதயத்தில் சொல்லி, தேசத்
திலுள்ள ஆலயங்களையெல்லாம் சுட்டெரித்
துப்போட்டார்கள்.
எங்களுக்கு இருந்த அடையாளங்களைக் 9
காணோம்; தீர்க்கதரிசியும் இல்லை; [14]இது எது
வரைக்கும் என்று அறிகிறவனும் எங்களிடத்
தில் இல்லை.
தேவனே, எதுவரைக்கும் சத்துரு நிந்திப் 10
பான்? பகைவன் உமது நாமத்தை எப்பொழு
தும் தூஷிப்பானோ?
உமது வலதுகரத்தை ஏன் முடக்கிக்கொள் 11
ளுகிறீர்; அதை உமது மடியிலிருந்து எடுத்து
ஓங்கி நிர்மூலமாக்கும்.
பூமியின் நடுவில் ரட்சிப்புகளைச் செய்து 12
வருகிற தேவன் பூர்வகாலமுதல் என்னுடைய
[15]ராஜா.
தேவரீர் உமது வல்லமையினால் சமுத்திரத் 13
தை இரண்டாகப் பிளந்து, [16]ஜலத்திலுள்ள
வலுசர்ப்பங்களின் தலைகளை உடைத்தீர்.
தேவரீர் முதலைகளின் தலைகளை நருக்கிப் 14
போட்டு, [17]அதை வனாந்தரத்து ஜனங்களுக்கு
உணவாகக்கொடுத்தீர்.
ஊற்றையும் ஆற்றையும் பிளந்துவிட்டீர்; 15
[18]மகா நதிகளையும் வற்றிப்போகப்பண்ணினீர்.
பகலும் உம்முடையது, இரவும் உம்முடை 16
யது; [19]தேவரீர் ஒளியையும் சூரியனையும்
படைத்தீர்.
பூமியின் எல்லைகளையெல்லாம் திட்டம்பண் 17
ணினீர்; [20]கோடைகாலத்தையும் மாரிகாலத்
தையும் உண்டாக்கினீர்.

[1] யோபு 22. 13
[2] 26. 7. யோபு 9. 27-31
[3] 37. 38
[4] யோபு 20. 8. எசா. 29. 7, 8
[5] நீதி. 30. 2
[6] 48. 15. எசா. 58. 8
[7] யோபு 19.25-27. புல. 3. 24
[8] 1 கொ. 6. 17. எபி. 10. 22
[9] எரே. 31. 37
[10] யாத். 15. 16
* சபைகளுக்குள்ளே. புல. 2. 7
[11] தானி. 6. 27
[12] 1 இரா. 6.18 ம
† நாமம் விளங்கிய உபா. 12. 5
[13] 2 இரா. 25. 9
[14] 1 சாமு. 3. 1. ஆமோ. 8. 11
[15] 44. 4
[16] யாத். 14. 21. எசா. 51. 9. 10. எசே. 29. 3
[17] எண். 14. 9
[18] யாத். 17. 5, 6. யோசு. 3. 13. ம
[19] ஆதி. 1. 14. ம
[20] அப். 17. 26

18 கர்த்தாவே, சத்துரு உம்மை நிந்தித்ததை
யும், [1]மதியீன ஜனங்கள் உமது நாமத்தைத்
தூஷித்ததையும் நினைத்துக்கொள்ளும்.
19 உமது காட்டுப்புறாவின் ஆத்துமாவைத்
[2]துஷ்டருடைய கூட்டத்திற்கு ஒப்புக்கொ
டாதேயும்; உமது ஏழைகளின் கூட்டத்தை
என்றைக்கும் மறவாதேயும்.
20 உம்முடைய உடன்படிக்கையை [3]நினைத்
தருளும்; பூமியின் இருளான இடங்கள் கொடு
மையுள்ள குடியிருப்புகளால் நிறைந்திருக்கி
றதே.
21 துன்பப்பட்டவன் வெட்கத்தோடே திரும்ப
விடாதிரும்; சிறுமையும் எளிமையுமானவன்
உமது நாமத்தைத் துதிக்கும்படி செய்யும்.
22 தேவனே, எழுந்தருளும், உமக்காக நீரே
வழக்காடும்; மதியீனனாலே நாடோறும் உமக்
கு வரும் நிந்தையை நினைத்துக்கொள்ளும்.
23 உம்முடைய சத்துருக்களின் ஆரவாரத்தை
மறவாதேயும்; உமக்கு விரோதமாய் எழும்பு
கிறவர்களின் அமளி எப்பொழுதும் அதிகரிக்
கிறது.

## 75

(அல்தஷ்கேத் என்னும் வாத்தியத்தில் வாசிக்கும்படி ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதமாகிய பாட்டு.)

உம்மைத் துதிக்கிறோம், தேவனே, உம்
மைத் துதிக்கிறோம்; உமது நாமம் *சமீபமா
யிருக்கிறதென்று உமது அதிசயமான கிரியை
கள் அறிவிக்கிறது.
2 நியமிக்கப்பட்ட காலத்திலே, [4]யதார்த்த
மாய் நியாயந்தீர்ப்பேன்.
3 பூமியானது அதின் எல்லாக் குடிகளோடும்
கரைந்துபோகிறது; அதின் தூண்களை நான்
நிலை நிறுத்துகிறேன்.
4 வீம்புக்காரரை நோக்கி, வீம்பு பேசாதேயுங்
கள் என்றும்; துன்மார்க்கரை நோக்கி, [5]கொம்
பை உயர்த்தாதிருங்கள் என்றும் சொன்
னேன்.
5 உங்கள் கொம்பை உயரமாய் உயர்த்தா
திருங்கள்; இறுமாப்புள்ள கழுத்துடையவர்க
ளாய்ப் பேசாதிருங்கள்.
6 கிழக்கிலும் மேற்கிலும் வனாந்தரதிசையிலு
மிருந்து ஜெயம் வராது.
7 தேவனே நியாயாதிபதி; [6]ஒருவனை தாழ்த்
தி, ஒருவனை உயர்த்துகிறார்.
8 கலங்கிப் பொங்குகிற மதுபானத்தினால்
நிறைந்த பாத்திரம் கர்த்தருடைய கையிலிருக்
கிறது; [7]அதிலிருந்து வார்க்கிறார்; பூமியிலுள்ள
துன்மார்க்கர் யாவரும் அதின் வண்டல்களை
உறிஞ்சிக் குடிப்பார்கள்.
9 நானோ என்றென்றைக்கும் இதை அறி
வித்து, யாக்கோபின் தேவனைக் கீர்த்தனம்
பண்ணுவேன்.
10 துன்மார்க்கருடைய [8]கொம்புகளையெல்லாம்
வெட்டிப்போடுவேன்; நீதிமானுடைய கொம்
புகளோ உயர்த்தப்படும்.

## 76

(நெகிநோத்தென்னும் வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதமாகிய பாட்டு.)

யூதாவில் தேவன் அறியப்பட்டவர்; [9]இஸ்ர
வேலில் அவருடைய நாமம் பெரியது.
சாலேமில் [10]அவருடைய கூடாரமும், சீயோ 2
னில் அவருடைய வாசஸ்தலமும் இருக்கிறது.
அங்கேயிருந்து வில்லின் அம்புகளையும், 3
[11]கேடகத்தையும், பட்டயத்தையும், யுத்தத்
தையும் முறித்தார்.
மகத்துவமுள்ளவரே, கொள்ளையுள்ள [12]பர் 4
வதங்களைப்பார்க்கிலும் நீர் பிரகாசமுள்ளவர்.
தைரிய நெஞ்சுள்ளவர்கள் கொள்ளையிடப் 5
பட்டு, நித்திரையடைந்து அசந்தார்கள்; [13]வல்
லமையுள்ள எல்லா மனுஷருடைய கைகளும்
அவர்களுக்கு உதவாமற்போயிற்று.
யாக்கோபின் தேவனே, உம்முடைய கண் 6
டிதத்தினால் இரதங்களும் குதிரைகளும்
[14]உறங்கி விழுந்தது.
நீர், நீரே, †பயங்கரமானவர்; உமது கோ 7
பம் மூளும்போது உமக்கு முன்பாக நிற்பவன்
யார்?
நியாயம் விசாரிக்கவும் பூமியில் சிறுமைப் 8
பட்டவர்கள் யாவரையும் ரட்சிக்கவும்,
தேவரீர் எழுந்தருளினபோது, வானத்திலி 9
ருந்து நியாயத்தீர்ப்புக் கேட்கப்பண்ணினீர்;
[15]பூமி பயந்து அமர்ந்தது.
மனுஷனுடைய கோபம் உமது மகிமையை 10
விளங்கப்பண்ணும்; மிஞ்சுங்கோபத்தை நீர்
அடக்குவீர்.
பொருத்தனைப்பண்ணி [16]அதைஉங்கள் தே 11
வனாகிய கர்த்தருக்கு நிறைவேற்றுங்கள்; [17]அ
வரைச் சூழ்ந்திருக்கிற அனைவரும் பயங்கரமா
னவருக்குக் காணிக்கைகளைக் கொண்டுவரக்
கடவர்கள்.
பிரபுக்களின் ஆவியை அடக்குவார்; [18]பூமி 12
யின் ராஜாக்களுக்கு அவர் பயங்கரமானவர்.

## 77

(எதுதூன் என்னும் ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

நான் தேவனை நோக்கி என் சத்தத்தை
உயர்த்திக் கெஞ்சினேன், என் சத்தத்தை தேவ
னிடத்தில் உயர்த்தினேன், [19]அவர் எனக்குச்
செவிகொடுத்தார்.
என் ஆபத்துநாளில் ஆண்டவரைத் தேடி 2
னேன்; இரவிலும் என் கைதளராமல் விரிக்
கப்பட்டிருந்தது; [20]என் ஆத்துமா ஆறுதலடை
யாமற்போயிற்று.
நான் தேவனை நினைத்தபோது அலறி 3
னேன்; [21]நான் தியானிக்கும்போது என் ஆவி
தொய்ந்துபோயிற்று.
நான் தூங்காதபடி என் கண்ணிமைகளைப் 4
பிடித்திருக்கிறீர்; நான் பேசமாட்டாதபடி சஞ்
சலப்படுகிறேன்.
பூர்வநாட்களையும், [22]ஆதிகாலத்து வருஷங் 5
களையும் சிந்திக்கிறேன்.
இராக்காலத்தில் என் சங்கீதத்தை நான் 6
நினைத்து, [23]என் இருதயத்தோடே சம்பாஷித்
துக்கொள்ளுகிறேன்; என் ஆவி ஆராய்ச்சி
செய்தது.

[1] 94. 7, 8. வெளி. 16. 19
[2] 68. 13. உன்ன. 2. 14
[3] ஆதி. 17. 7, 8. லேவி. 26. 45. எரே. 33. 20, 21. எபி. 8. 10
* பிரஸ்தாபமாய்.
[4] 2 சாமு. 23. 3, 4
[5] சகரி. 1. 21
[6] 1 சாமு. 2. 7, 8. தானி. 2. 21
[7] வெளி. 14. 9, 10
[8] 101. 8
[9] 48. 1. மு. உபா. 4. 7, 8
[10] 132. 13
[11] ஏசா. 37. 35, 36
[12] எசே. 38. 12, 13
[13] எசா. 46. 12. எரே. 51. 39
[14] சகரி. 12. 4
† பயப்படத்தக்கவர் எரே. 10. 7. நாகூ. 1. 6
[15] யாத். 19. 10. மு
[16] யாத். 9. 16. தானி. 3. 19, 28
[17] பிர. 5. 4–6
[18] 2. 5, 10
[19] 3. 4
[20] ஏசா. 26. 9, 16
[21] 143. 4, 5. புல. 3. 17. மு
[22] உபா. 32. 7. ஏசா. 63. 11
[23] 42. 8, புல. 3. 40

7 ஆண்டவர் நித்தியகாலமாய்த் தள்ளிவிடுவா
ரோ? [1]இனி ஒருபோதும் தயைசெய்யாதிருப்
பாரோ?
8 அவருடைய கிருபைமுற்றிலும் அற்றுப்
போயிற்றோ? [2]வாக்குத்தத்தமானது தலைமு
றை தலைமுறைக்கும் ஒழிந்துபோயிற்றோ?
9 தேவன் இரக்கஞ்செய்ய மறந்தாரோ?
[3]கோபத்தினாலே தமது உருக்கமான இரக்கங்
களை அடைத்துக்கொண்டாரோ? என்றேன்.
10 அப்பொழுது நான்: [4]இது என் பலவீனம்;
ஆனாலும் உன்னதமானவருடைய வலதுகரத்
தினுள்ள வருஷங்களை நினைவுகூருவேன்.
11 கர்த்தருடைய செயல்களை நினைவுகூரு
வேன்; [5]உம்முடைய பூர்வகாலத்து அதிசயங்
களையே நினைவுகூருவேன்;
12 உம்முடைய கிரியைகளையெல்லாம் தியா
னித்து, உம்முடைய செயல்களை யோசிப்
பேன் என்றேன்.
13 தேவனே, உமது வழி பரிசுத்தஸ்தலத்தி
லுள்ளது, [6]நம்முடைய தேவனைப்போலப்
பெரிய தேவன் யார்?
14 அதிசயங்களைச் செய்கிற தேவன் நீரே;
ஜனங்களுக்குள்ளே உம்முடைய வல்லமை
யை விளங்கப்பண்ணினீர்.
15 யாக்கோபு யோசேப்பு என்பவர்களின் புத்
திரராகிய உம்முடைய ஜனங்களை, [7]உமது
புயத்தினாலே மீட்டுக்கொண்டீர்.
16 ஜலங்கள் உம்மைக் கண்டது, [8]தேவனே,
ஜலங்கள் உம்மைக் கண்டு தத்தளித்தது; ஆழங்
களும் கலங்கினது.
17 மேகங்கள் ஜலங்களைப்பொழிந்தது; ஆகாய
மண்டலங்கள் முழக்கமிட்டது; உம்முடைய
அம்புகளும் தெறிப்புண்டு பறந்தது.
18 உம்முடைய குமுறலின் சத்தம் சுழல்காற்
றில் முழங்கினது; [9]மின்னல்கள் பூச்சக்கரத்
தைப் பிரகாசிப்பித்தது; பூமிகுலுங்கி அதிர்ந்
தது.
19 உமது வழி கடலிலும், உமது பாதைகள்
திரண்ட தண்ணீர்களிலும் இருந்தது; உமது
காலடிகள் தெரியப்படாமற்போயிற்று.
20 மோசே ஆரோன்என்பவர்களின் கையால்,
[10]உமது ஜனங்களை ஒரு ஆட்டுமந்தையைப்
போல வழி நடத்தினீர்.

**78** (ஆசாப் எழுதின மஸ்கீல் என்னும் போதக
சங்கீதம்.)

என் ஜனங்களே, என் உபதேசத்தைக்
கேளுங்கள்; [11]என் வாயின் வசனங்களுக்கு
உங்கள் செவிகளைச் சாயுங்கள்.
2 என் வாயை உவமைகளால் திறப்பேன்;
[12]பூர்வகாலத்து மறைபொருள்களை வெளிப்
படுத்துவேன்.
3 அவைகளை நாங்கள் கேள்விப்பட்டு அறிந்
தோம்; எங்கள் பிதாக்கள் அவைகளை எங்களுக்
குத் தெரிவித்தார்கள்.
4 பின்வரும் சந்ததியான பிள்ளைகளுக்கு நாங்
கள் அவைகளை மறைக்காமல், [13]கர்த்தரின்
துதிகளையும் அவருடைய பலத்தையும், அவர்
செய்த அவருடைய அதிசயங்களையும் விவ
ரிப்போம்.
அவர் யாக்கோபிலே சாட்சியை ஏற்படுத்தி, 5
இஸ்ரவேலிலே வேதத்தை ஸ்தாபித்து,
[14]அவைகளைத் தங்கள் பிள்ளைகளுக்கு அறி
விக்கும்படி நம்முடைய பிதாக்களுக்குக் கட்
டளையிட்டார்.
இனிப் பிறக்கும் பிள்ளைகளாகிய பின் சந் 6
ததியார் அதை அறிந்துகொண்டு, [15]அவர்கள்
எழும்பித் தங்கள் பிள்ளைகளுக்கு அவைகளைச்
சொல்லும்படிக்கும்;
தேவன்மேல் அவர்கள் தங்கள் நம்பிக் 7
கையைவைத்து, தேவனுடைய செயல்களை
மறவாமல், அவர் கற்பனைகளைக் கைக்கொள்
ளும்படிக்கும்;
இருதயத்தைச் செவ்வைப்படுத்தாமலும், 8
தேவனை உறுதியாய்ப் பற்றிக்கொள்ளாமலும்
இருந்த முரட்டாட்டமும் கலகமுமுள்ள [16]சந்
ததியாகிய தங்கள் பிதாக்களுக்கு அவர்கள் ஒப்
பாகாதபடிக்கும், இவைகளைக் கட்டளையிட்
டார்.
ஆயுதமணிந்த வில்வீரரான எப்பிராயீம் புத் 9
திரர் யுத்தநாளிலே [17]முதுகு காட்டினார்கள்.
அவர்கள் தேவனுடைய உடன்படிக்கை 10
யைக் கைக்கொள்ளாமலும், [18]அவருடைய கட்
டளைகளின்படி நடக்கச் சம்மதியாமலும்,
அவருடைய செயல்களையும், [19]அவர் தங்க 11
ளுக்குக் காண்பித்த அதியங்களையும் மறந்
தார்கள்.
அவர்களுடைய பிதாக்களுக்கு முன்பாக 12
[20]எகிப்துதேசத்துச் சோவான் வெளி
யிலே, அவர் அதிசயமானவைகளைச் செய்
தார்.
கடலைப் பிளந்து, [21]அவர்களைக் கடக்கப் 13
பண்ணி, ஜலத்தைக் குவியலாக நிற்கும்படி
செய்தார்.
பகலிலே மேகத்தினாலும், [22]இராமுழுதும் 14
அக்கினி வெளிச்சத்தினாலும் அவர்களை வழி
நடத்தினார்.
வனாந்தரத்திலே கன்மலைகளைப் பிளந்து, 15
[23]மகா ஆழங்களிலிருந்து தண்ணீரை அவர்க
ளுக்குக் குடிக்கக் கொடுத்தார்.
கன்மலையிலிருந்து நீரோட்டங்களைப் புறப் 16
படப்பண்ணி, [24]தண்ணீரை நதிபோல ஓடி
வரும்படி செய்தார்.
என்றாலும், அவர்கள் பின்னும் அவருக்கு 17
விரோதமாய்ப் பாவஞ்செய்து, [25]வறண்ட வெ
ளியிலே உன்னதமானவருக்குக் கோபமூட்
டினார்கள்.
தங்கள் இச்சைக்கேற்ற போஜனத்தைக் 18
கேட்டு, [26]தங்கள் இருதயத்தில் தேவனைப்
பரீட்சைபார்த்தார்கள்.
அவர்கள் தேவனுக்கு விரோதமாய்ப் பேசி: 19
[27]தேவன் வனாந்தரத்திலே போஜனபந்தியை
ஆயத்தப்படுத்தக்கூடுமோ?

1 74. 1
2 ரோ. 9. 6
3 ஏசா. 49. 15
4 31. 22
5 143. 5
6 68. 24. யாத். 15. 11. மு
7 யாத். 6. 6. உபா. 9. 29
8 ஆப. 3. 8. மு
9 2 சாமு. 22. 14
10 ஏசா. 63. 11
11 ஏசா. 57. 4
12 மத். 13. 13, 35
13 யாத். 13. 8, 14
14 உபா. 6. 7: 11. 19
15 102. 18
16 எசே. 2. 3-8
17 உபா. 1. 41-44
18 2 இரா. 17. 15
19 106. 13
20 யாத். 7, 12. அதி. ஏசா. 19. 11, 13
21 யாத். 14. 21: 15. 8
22 யாத். 13. 21.
23 யாத். 17. 6. எண். 20. 11. 1 கொ. 10. 3, 4
24 105. 41
25 உபா. 9. 22. எபி. 3. 16–19
26 யாத். 16. 2. மு
27 எண். 11. 4

20 இதோ அவர் கன்மலையை அடித்ததினால்
தண்ணீர் புறப்பட்டு, நதிகளாய்ப் புரண்டோடி வந்
தது; அவர் அப்பத்தையும் கொடுக்கக்கூடுமோ?
தம்முடைய ஜனத்திற்கு மாம்சத்தையும் ஆயத்
தப்படுத்துவாரோ? என்றார்கள்.
21 ஆகையால் கர்த்தர் அதைக் கேட்டுக் [1]கோ
பங்கொண்டார்; அவர்கள் தேவனை விசுவாசி
யாமலும், [2]அவருடைய ரட்சிப்பை நம்பாம
லும் போனதினால்,
22 யாக்கோபுக்கு விரோதமாய் அக்கினி பற்
றியெரிந்தது; இஸ்ரவேலுக்கு விரோதமாய்க்
கோபம் மூண்டது.
23 அவர் உயரத்திலுள்ள மேகங்களுக்குக் கட்
டளையிட்டு, வானத்தின் கதவுகளைத் திறந்து,
24 மன்னாவை அவர்களுக்கு ஆகாரமாக வரு
ஷிக்கப்பண்ணி, [3]வானத்தின் தானியத்தை
அவர்களுக்குக் கொடுத்தார்.
25 தூதர்களின் அப்பத்தை மனுஷன் சாப்
பிட்டான்; அவர்களுக்கு ஆகாரத்தைப் பூர
ணமாய் அனுப்பினார்.
26 ஆகாசத்திலே கீழ்காற்றை வரப்பண்ணி,
தம்முடைய வல்லமையினால் தென்றலையும்
வீசச்செய்து,
27 மாம்சத்தைத் தூளத்தனையாயும், [4]சிற
குள்ள பறவைகளைக் கடற்கரை மணலத்தனை
யாயும் வருஷிக்கப்பண்ணி,
28 அவைகளை அவர்கள் பாளயத்தின் நடுவி
லும், அவர்கள் கூடாரங்களைச்சுற்றிலும் இறங்
கப் பண்ணினார்.
29 அவர்கள் புசித்துத் திருப்தி யடைந்தார்கள்.
[5]அவர்கள் இச்சித்ததை அவர்களுக்குக் கொ
டுத்தார்.
30 அவர்கள் தங்கள் இச்சையை வெறுக்க
வில்லை; அவர்களுடைய போஜனம் அவர்கள்
வாயில் இருக்கும்போதே,
31 தேவ கோபம் அவர்கள்மேல் எழும்பி,
அவர்களில் கொழுத்தவர்களைச் சங்கரித்து,
இஸ்ரவேலில் விசேஷித்தவர்களை மடியப்
பண்ணிற்று.
32 இவையெல்லாம் நடந்தும், அவர் செய்த
அதிசயங்களை அவர்கள் நம்பாமல், பின்னும்
பாவஞ்செய்தார்கள்.
33 ஆதலால் அவர்கள் நாட்களை விருதாவிலும்,
[6]அவர்கள் வருஷங்களைப் பயங்கரத்திலும் கழி
யப்பண்ணினார்.
34 அவர்களை அவர் கொல்லும்போது, [7]அவ
ரைக்குறித்து விசாரித்து, அவர்கள் திரும்பி
வந்து தேவனை அதிகாலமே தேடி;
35 தேவன் தங்கள் கன்மலையென்றும், [8]உன்
னதமான தேவன் தங்கள் மீட்பர் என்றும்,
நினைவு கூர்ந்தார்கள்.
36 ஆனாலும் அவர்கள் தங்கள் வாயினால் அவ
ருக்கு [9]இச்சகம்பேசி, தங்கள் நாவினால் அவ
ரிடத்தில் பொய்சொன்னார்கள்.
37 அவர்கள் இருதயம் அவரிடத்தில் நிலை
வரப்படவில்லை; அவருடைய உடன்படிக்கை
யில் அவர்கள் உண்மையாயிருக்கவில்லை.

[1] எண். 11. 1. ழ
[2] எபி 3. 13
[3] யாத். 16. 4, 14. யோ. 6. 31. 1 கொ. 10. 3
[4] எண். 11. 18. ழ
[5] 106. 15
[6] எண். 14. 16, 17. அதி.
[7] எசா. 26. 16. ஓசி. 5. 15
[8] உபா. 32. 4, 15
[9] உபா. 5. 28, 29
[10] எண். 14. 18, 20. எசா. 48.9
[11] 103. 14. யாக். 4. 14
[12] 95. 8, 10. எபி. 3. 16, 17
[13] எண். 14. 22. உபா. 6. 16
[14] யாத். 7. 20
[15] யாத். 8. 6,24
[16] யாத். 10. 13
[17] யாத். 9. 23–25
[18] யாத். 12. 29
[19] யாத். 14, 15. அதி.

அவரோ அவர்களை அழிக்காமல், [10]இரக்க 38
முள்ளவராய் அவர்கள் அக்கிரமத்தை மன்
னித்தார்; அவர் தமது உக்கிரம் முழுவதையும்
எழுப்பாமல், அநேகந்தரம் தமது கோபத்தை
விலக்கிவிட்டார்.
அவர்கள் மாம்சமென்றும், [11]திரும்பிவரா 39
மல் அகலுகிற காற்றென்றும் நினைவுகூர்ந்தார்.
எத்தனைதரமோ வனாந்தரத்திலே அவருக் 40
குக் கோபம் மூட்டி, [12]அவாந்தர வெளியிலே
அவரை விசனப்படுத்தினார்கள்.
அவர்கள் திரும்பி தேவனைப் பரீட்சை 41
பார்த்து, [13]இஸ்ரவேலின் பரிசுத்தரை மட்டுப்
படுத்தினார்கள்.
அவருடைய கரத்தையும், அவர் தங்களைச் 42
சத்துருவுக்கு விலக்கி மீட்ட நாளையும் நினை
யாமற்போனார்கள்.
அவர் எகிப்திலே தம்முடைய அடையா 43
ளங்களையும், சோவான் வெளியிலே தம்மு
டைய அற்புதங்களையும் செய்தார்.
அவர்களுடைய நதிகளை இரத்தமாகமாற்றி, 44
[14]அவர்களுடைய ஆறுகளிலுள்ள ஜலத்தைக்
குடிக்கக்கூடாதபடி செய்தார்.
அவர்களை அழிக்கும்படி வண்டு ஜாதிகளை 45
யும், [15]அவர்களைக் கெடுக்கும்படி தவளைகளை
யும் அவர்களுக்குள்ளே அனுப்பினார்.
அவர்களுடைய விளைச்சலைப் புழுக்களுக் 46
கும், [16]அவர்களுடைய பிரயாசத்தின் பலனை
வெட்டுக்கிளிகளுக்கும் கொடுத்தார்.
கல்மழையினால் அவர்களுடைய திராட்சச் 47
செடிகளையும், [17]ஆலாங்கட்டியினால் அவர்க
ளுடைய அத்திமரங்களையும் அழித்து,
அவர்களுடைய மிருகஜீவன்களைக் கல் 48
மழைக்கும், அவர்களுடைய ஆடுமாடுகளை
இடிகளுக்கும் ஒப்புக்கொடுத்தார்.
தமது உக்கிரமான கோபத்தையும், மூர்க் 49
கத்தையும், சினத்தையும், உபத்திரவத்தை
யும், தீங்குசெய்யும் தூதர்களையும் அவர்களுக்
குள்ளே அனுப்பினார்.
அவர் தம்முடைய கோபத்துக்கு வழிதி 50
றந்து, அவர்கள் ஆத்துமாவை மரணத்துக்கு
விலக்கிக் காவாமல், அவர்கள் ஜீவனைக்
கொள்ளைநோய்க்கு ஒப்புக்கொடுத்தார்.
எகிப்திலே தலைச்சன்கள் அனைத்தையும், 51
[18]காமின் கூடாரங்களிலே அவர்களுடைய
பெலனில் முதற்பலனான யாவரையும்
அழித்து;
தம்முடைய ஜனங்களை ஆடுகளைப்போல் 52
புறப்படப்பண்ணி, அவர்களை வனாந்தரத்திலே
மந்தையைப்போல் கூட்டிக்கொண்டுபோய்;
அவர்கள் பயப்படாதபடிக்கு அவர்களைப் 53
பத்திரமாய் வழிநடத்தினார்; [19]அவர்கள் சத்து
ருக்களைக் கடல் மூடிப்போட்டது.
அவர்களைத் தமது பரிசுத்த ஸ்தலத்தின் 54
எல்லைவரைக்கும், தமது வலதுகரம் சம்பா
தித்த இந்தப் பர்வதமட்டுக்கும் அழைத்துக்
கொண்டுவந்து,

55 அவர்கள் முகத்திற்கு முன்பாக ஜாதிகளைத்
துரத்திவிட்டு, தேசத்தை நூல்போட்டுப் பங்
கிட்டு, [1]அவர்களுடைய கூடாரங்களில் இஸ்ர
வேலின் கோத்திரங்களைக் குடியேற்றினார்.
56 ஆனாலும் அவர்கள் உன்னதமான தேவ
னைப் பரீட்சை பார்த்து, அவருக்குக் கோபம்
மூட்டி, அவருடைய சாட்சிகளைக் கைக்
57 கொள்ளாமற்போய், தங்கள் பிதாக்களைப்
போல வழிவிலகி, துரோகம்பண்ணி, மோ
சம்போக்கும் வில்லைப்போல் துவண்டு,
58 தங்கள் மேடைகளினால் அவருக்குக் கோ
பம்மூட்டி, [2]தங்கள் விக்கிரகங்களினால் எரிச்
சல் உண்டாக்கினார்கள்.
59 தேவன் அதைக் கேட்டு உக்கிரமாகி, இஸ்
ரவேலை மிகவும் வெறுத்து,
60 தாம் மனுஷருக்குள்ளே போட்ட கூடார
மாகிய சீலோவிலுள்ள வாசஸ்தலத்தை [3]விட்டு
விலகி,
61 தமது பலத்தைச் சிறையிருப்புக்கும், தமது
மகிமையைச் சத்துருவின் கைக்கும் ஒப்புக்
கொடுத்து,
62 தமது ஜனத்தைப் பட்டயத்துக்கு இரை
யாக்கி, [4]தமது சுதந்தரத்தின்மேல் கோபங்
கொண்டார்.
63 அவர்கள் வாலிபரை அக்கினி பட்சித்தது,
[5]அவர்கள் கன்னியாஸ்திரீகள் வாழ்க்கைப்
படாதிருந்தார்கள்.
64 அவர்களுடைய ஆசாரியர்கள் பட்டயத்
தால் விழுந்தார்கள், [6]அவர்களுடைய விதவை
கள் அழவில்லை.
65 அப்பொழுது ஆண்டவர் நித்திரை தெளிந்
தவனைப்போலவும், [7]திராட்சரசத்தால் கெம்
பீரிக்கிற பராக்கிரமசாலியைப்போலவும்
விழித்து,
66 தம்முடைய சத்துருக்களைப் பின்புறமாக
அடித்து, [8]அவர்களுக்கு நித்திய நிந்தையை
வரப்பண்ணினார்.
67 அவர் யோசேப்பின் கூடாரத்தைப் புறக்
கணித்தார்; எப்பிராயீம் கோத்திரத்தை அவர்
தெரிந்து கொள்ளாமல்,
68 யூதா கோத்திரத்தையும் [9]தமக்குப் பிரிய
மான சீயோன் [10]பர்வதத்தையும் தெரிந்து
கொண்டார்.
69 தம்முடைய பரிசுத்த ஸ்தலத்தை மலை
களைப்போலவும், என்றைக்கும் நிற்கும்படி
தாம் அஸ்திபாரப்படுத்தின பூமியைப்போல
வும் கட்டினார்.
70 தம்முடைய தாசனாகிய தாவீதைத் தெரிந்
துகொண்டு, [11]ஆட்டுத்தொழுவங்களிலிருந்து
அவனை எடுத்தார்.
71 கறவலாடுகளின் பின்னாகத்திரிந்த அவனை,
தம்முடைய ஜனமாகிய யாக்கோபையும் [12]தம்
முடைய சுதந்தரமாகிய இஸ்ரவேலையும்
மேய்ப்பதற்காக, அழைத்துக் கொண்டுவந்தார்.
72 இவன் அவர்களைத் தன் இருதயத்தில் உண்
மையின்படியே மேய்த்து, [13]தன் கைகளின்
திறமையினால் அவர்களை நடத்தினான்.

**79**

(ஆசாபின் சங்கீதம்.)

தேவனே, புறஜாதியார் உமது சுதந்தரத்
தில் வந்து, [14]உமது பரிசுத்த ஆலயத்தைத் தீட்
டுப்படுத்தி, [15]எருசலேமை மண்மேடுகளாக்கி
னார்கள்.
உமது ஊழியக்காரரின் பிரேதங்களை ஆகா 2
யத்துப் பறவைகளுக்கும், உமதுபரிசுத்தவான்
களின் மாம்சத்தைப் பூமியின் மிருகங்களுக்
கும் இரையாகக் கொடுத்தார்கள்.
எருசலேமைச் சுற்றிலும் அவர்களுடைய 3
இரத்தத்தைத் தண்ணீரைப்போலச் சிந்தினார்
கள்; [16]அவர்களை அடக்கம்பண்ணுவாருமில்லை.
எங்கள் அயலாருக்கு நிந்தையும், [17]எங்கள் 4
சுற்றுப்புறத்தாருக்குப் பரியாசமும் சக்கந்தமு
மானோம்.
எதுவரைக்கும் கர்த்தாவே! நீர் என்றைக் 5
கும் கோபமாயிருப்பீரோ? உம்முடைய எரிச்
சல் [18]அக்கினியைப்போல் எரியுமோ?
உம்மை அறியாத ஜாதிகள்மேலும், உமது 6
நாமத்தைத் தொழுதுகொள்ளாத ராஜ்யங்கள்
மேலும், [19]உம்முடைய உக்கிரத்தை ஊற்றி
விடும்.
அவர்கள் யாக்கோபைப் பட்சித்து, அவன் 7
குடியிருப்பைப் பாழாக்கினார்களே.
பூர்வகாலத்து அக்கிரமங்களை [20]எங்களுக்கு 8
விரோதமாக நினையாதேயும், உம்முடைய
இரக்கங்கள் சீக்கிரமாய் எங்களுக்கு நேரிடுவ
தாக; நாங்கள் மிகவும் [21]தாழ்த்தப்பட்டுபோ
னோம்.
எங்களை ரட்சிக்கும் தேவனே, நீர் உமது நா 9
மத்தின் மகிமையினிமித்தம் எங்களுக்கு உதவி
செய்து, உமது நாமத்தினிமித்தம் எங்களை விடு
வித்து, எங்கள் பாவங்களை நிவிர்த்தியாக்கும்.
அவர்களுடைய தேவன் எங்கே என்று புற 10
ஜாதிகள் சொல்வானேன்? உமது ஊழியக்கா
ருடைய சிந்துண்ட இரத்தத்தின் பழிவாங்கு
தல் ஜாதிகளுக்குள்ளே எங்கள் கண்களுக்கு
முன்பாக விளங்கும்படி செய்யும்.
கட்டுண்டவனுடைய பெருமூச்சு உமக்கு 11
முன்பாக வரட்டும்; [22]கொலைக்கு நியமிக்கப்
பட்டவர்களை உமது புயபலத்தினால் உயி
ரோடேகாத்தருளும்.
ஆண்டவரே, எங்கள் அயலார் உம்மை 12
நிந்தித்த நிந்தையை, [23]ஏழத்தனையாக அவர்
கள் மடியிலே திரும்பப்பண்ணும்.
அப்பொழுது, உம்முடைய ஜனங்களும் 13
உம்முடைய மேய்ச்சலின் ஆடுகளுமாகிய நாங்
கள் உம்மை என்றென்றைக்கும் புகழுவோம்;
[24]தலைமுறை தலைமுறையாக உமது துதியைச்
சொல்லிவருவோம்.

**80**

(சாட்சி விளங்கும்படி சோஷானீம் எதேத் என்னும்
வாத்தியத்தில் வாசிக்க ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்
கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

இஸ்ரவேலின் மேய்ப்பரே, யோசேப்பை
ஆட்டுமந்தையைப்போல் நடத்துகிறவரே, செ
விகொடும்; [25]கேருபீன்கள் மத்தியில் வாசம்
பண்ணுகிறவரே, பிரகாசியும்.

1 யோசு. 19. 51
2 நியா. 2. 12, 20
3 யோசு. 1. 5. 1 சாமு. 5. 10, 16
4 1 சாமு. 4. 3-11
5 எரே. 7. 34
6 1 சாமு. 4. 11
7 7. 6
8 1 சாமு. 5. 6-12
9 ஆதி. 49. 10
10 87. 2
11 2 சாமு. 7. 8
12 ஏசா. 40. 11
13 1 இரா. 9. 4
14 புல. 1. 10
15 74. 2-7. 2 இரா. 25. 9, 11. மீகா. 3.12
16 எரே. 16. 4: 34. 20
17 உபா. 28. 37
18 செப். 1. 18
19 எரே. 10. 25. வெளி. 14. 1
20 130. 3. ஏசா. 64. 9
21 உபா. 28, 43
22 102. 19
23 74. 18. ஆதி. 4. 15
24 ஏசா. 43. 21
25 யாத். 25. 20-22. உபா. 33. 2

2 எப்பிராயீம் பென்யமீன் மனாசே என்பவர்
களுக்கு முன்பாக, [1]நீர் உமது வல்லமையை
எழுப்பி, எங்களை ரட்சிக்கவந்தருளும்.
3 தேவனே, எங்களைத் திருப்பிக்கொண்டு
வாரும்; [2]உமது முகத்தைப் பிரகாசிக்கப்பண்
ணும். அப்பொழுது ரட்சிக்கப்படுவோம்.
4 சேனைகளின் தேவனாகிய கர்த்தாவே,
உமது ஜனத்தின் விண்ணப்பத்துக்கு விரோத
மாய் நீர் எதுவரைக்கும் கோபங்கொள்வீர்.
5 கண்ணீராகிய அப்பத்தை அவர்களுக்குப்
போஜனமாகவும், [3]மிகுதியான கண்ணீரையே
அவர்களுக்குப் பானமாகவும் கொடுத்தீர்.
6 எங்கள் அயலாருக்கு எங்களை வழக்காக
வைக்கிறீர்; [4]எங்கள் சத்துருக்கள் எங்களைப்
பரியாசம் பண்ணுகிறார்கள்.
7 சேனைகளின் தேவனே, எங்களைத் திருப்
பிக்கொண்டு வாரும், உமது முகத்தைப் பிர
காசிக்கப்பண்ணும், அப்பொழுது ரட்சிக்கப்
படுவோம்.
8 நீர் எகிப்திலிருந்து ஒரு திராட்சக்கொடி
யைக் கொண்டுவந்து, [5]ஜாதிகளைத் துரத்தி
விட்டு, அதை நாட்டினீர்.
9 அதற்கு இடத்தை ஆயத்தப்படுத்தினீர்;
அது வேரூன்றி தேசமெங்கும் படர்ந்தது.
10 அதின் நிழலால் மலைகளும், அதின் கிளை
களால் திவ்வியமான கேதுருக்களும் மூடப்
பட்டது.
11 அது தன் கொடிகளைச் சமுத்திரமட்டாக
வும், தன் கிளைகளை நதிமட்டாகவும் படர
விட்டது.
12 இப்பொழுதோ வழிநடக்கிற யாவரும்
அதைப் பறிக்கும்படியாக, [6]அதின் அடைப்பு
களை என் தகர்த்துப்போட்டீர்.
13 காட்டுப்பன்றி அதை உழுது போடுகிறது,
வெளியின் மிருகங்கள் அதை மேய்ந்துபோ
டுகிறது.
14 சேனைகளின் தேவனே, திரும்பிவாரும்,
வானத்திலிருந்து கண்ணோக்கிப் பார்த்து,
இந்தத் திராட்சச்செடியை விசாரித்தரு
ளும்;
15 உம்முடைய வலதுகரம் நாட்டின கொடி
யையும், [8]உமக்கு நீர் திடப்படுத்தின கிளை
யையும் கடாட்சித்தருளும்.
16 அது அக்கினியால் சுடப்பட்டும் வெட்
டுண்டும் போயிற்று; [9]உம்முடைய முகத்தின்
பயமுறுத்தலால் அழிந்துபோகிறார்கள்.
17 உமது கரம் உமது வலதுபாரிசத்துப் புரு
ஷன்மீதிலும்; [10]உமக்கு நீர் திடப்படுத்தின
மனுஷகுமாரன்மீதிலும் இருப்பதாக.
18 அப்பொழுது உம்மைவிட்டுப் பின்வாங்க
மாட்டோம்; எங்களை [11]உயிர்ப்பியும், அப்பொ
ழுது உமது நாமத்தைத் தொழுது கொள்ளு
வோம்.
19 சேனைகளின் தேவனாகிய கர்த்தாவே,
எங்களைத் திருப்பிக்கொண்டு வாரும்; உமது
முகத்தைப் பிரகாசிக்கப்பண்ணும், அப்பொ
ழுது ரட்சிக்கப்படுவோம்.

1 எண். 2. 18-24
2 புல. 5. 21. தானி. 9. 17
3 42. 3. ஏசா. 30. 20
4 79. 4
5 ஏசா. 5: 1-7 எரே. 2. 21. எசே. 15. 6
6 நாகூம். 2. 2
7 ஏசா. 63. 15
8 ஏசா. 1. 1. ழ. சகரி. 3. 8
9 76. 7
10 ஏசா. 53. 5
11 எபே. 2. 1, 5
12 லேவி. 23. 24, 26
13 114. 1
14 யாத். 1. 14 ஏசா. 9. 4
15 யாத். 17. 2-7
16 யாத். 20. 3-5
17 யாத். 20. 2. யோ. 15. 7. எபே. 3. 20
18 உபா. 32. 15, 18
19 அப். 7. 42. ரோ. 1. 24, 26
20 உபா. 32. 19. ஏசா. 48. 18
21 உபா. 32. 13, 14

(கித்தீத் என்னும் வாத்தியத்தில் வாசிக்கும்படி 81
ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட ஆசாபின் சங்கீதம்.)

நம்முடைய பெலனாகிய தேவனைக் கெம்
பீரமாய்ப் பாடி, யாக்கோபின் தேவனைக்குறித்
து, ஆர்ப்பரியுங்கள்.
தம்புரு வாசித்து, வீணையையும் இனிய 2
ஓசையான சுரமண்டலத்தையும் எடுத்து, சங்
கீதம் பாடுங்கள்.
மாதப்பிறப்பிலும், நியமித்த காலத்திலும், 3
நம்முடைய பண்டிகை நாட்களிலும், எக்கா
ளம் ஊதுங்கள்.
இது இஸ்ரவேலுக்குப் பிரமாணமும், 4
[12]யாக்கோபின் தேவன் விதித்த நியாயமுமா
யிருக்கிறது.
நாம் அறியாத பாஷையைக் [13]கேட்ட 5
எகிப்துதேசத்தை விட்டுப் புறப்படுகையில்,
இதை யோசேப்பிலே சாட்சியாக ஏற்படுத்
தினார்.
அவன் தோளைச் சுமைக்கு விலக்கினேன்; 6
[14]அவன் கைகள் கூடைக்கு நீங்கலாக்கப்பட்
டது.
நெருக்கத்திலே நீ கூப்பிட்டாய், நான் 7
உன்னைத் தப்புவித்தேன்; இடிமுழக்கம் உண்
டாகும் மறைவிடத்திலிருந்து உனக்கு உத்த
ரவு அருளினேன்; மேரிபாவின் [15]தண்ணீர்
களிடத்தில் உன்னைச் சோதித்து அறிந்
தேன்.
என் ஜனமே கேள், உனக்குச் சாட்சி 8
யிட்டுச் சொல்லுவேன்; இஸ்ரவேலே, நீ
எனக்குச் செவிகொடுத்தால் நலமாயிருக்கும்.
உனக்குள் வேறுதேவன் உண்டாயிருக்க 9
வேண்டாம்; [16]அந்நியதேவனை நீ நமஸ்கரிக்க
வும் வேண்டாம்.
உன்னை எகிப்து தேசத்திலிருந்து புறப் 10
படப் பண்ணின உன் தேவனாகிய கர்த்தர்
நானே; [17]உன் வாயை விரிவாய்த் திற, நான்
அதை நிரப்புவேன்.
என் ஜனமோ என் சத்தத்துக்குச் செவி 11
கொடுக்கவில்லை; [18]இஸ்ரவேல் என்னை
விரும்பவில்லை.
ஆகையால் அவர்களை அவர்கள் இருதயத் 12
தின் கடினத்திற்கு விட்டுவிட்டேன்; [19]தங்கள்
யோசனைகளின்படியே நடந்தார்கள்.
ஆ, என் ஜனம் எனக்குச் செவி கொடுத்து 13
[20]இஸ்ரவேல் என் வழிகளில் நடந்தால் நலமா
யிருக்கும்!
நான் சீக்கிரத்தில் அவர்கள் எதிராளிகளைத் 14
தாழ்த்தி, என் கையை அவர்கள் சத்துருக்க
ளுக்கு விரோதமாகத் திருப்புவேன்.
அப்பொழுது கர்த்தரைப் பகைக்கிறவர் 15
கள் அவருக்கு இச்சகம்பேசி அடங்குவார்
கள்; அவர்களுடைய காலம் என்றென்றைக்
கும் இருக்கும்.
உச்சிதமான கோதுமையினால் அவர்களைப் 16
போஷிப்பார்; [21]கன்மலையின் தேனினால் உன்
னைத் திருப்தியாக்குவேன்.

**82** (ஆசாபின் சங்கீதம்.)

தேவசபையிலே தேவன் எழுந்தருளியிருக்
கிறார்; [1]தேவர்களின் நடுவிலே அவர் நியாயம்
விசாரிக்கிறார்.
2 எதுவரைக்கும் நீங்கள் அநியாயத் தீர்ப்புச்
செய்து, துன்மார்க்கருக்கு முகதாட்சிணியம்
பண்ணுவீர்கள்.
3 ஏழைக்கும் திக்கற்றபிள்ளைக்கும் நியாயஞ்
செய்து, [2]சிறுமைப்பட்டவனுக்கும் திக்கற்ற
வனுக்கும் நீதிசெய்யுங்கள்.
4 பலவீனனையும் எளியவனையும் விடுவித்து,
[3]துன்மார்க்கரின் கைக்கு அவர்களைத் தப்பு
வியுங்கள்.
5 அறியாமலும் உணராமலும் இருக்கிறார்கள்,
அந்தகாரத்திலே நடக்கிறார்கள்; [4]தேசத்தின்
அஸ்திபாரங்களெல்லாம் அசைகிறது.
6 நீங்கள் தேவர்கள் என்றும், [5]நீங்களெல்லா
ரும் உன்னதமானவரின் மக்கள் என்றும் நான்
சொல்லியிருந்தேன்.
7 ஆனாலும் நீங்கள் மனுஷரைப்போலச்
செத்து, லோகப் பிரபுக்களில் ஒருவனைப்
போல விழுந்துபோவீர்கள்.
8 தேவனே, எழுந்தருளும், பூமிக்கு நியாயத்
தீர்ப்புச் செய்யும்; [6]நீரே சகல ஜாதிகளையும்
சுதந்தரமாகக் கொண்டிருப்பவர்.

**83** (ஆசாபின் சங்கீதமாகிய பாட்டு.)

தேவனே, மவுனமாயிராதேயும், பேசாம
லிராதேயும்; தேவனே, சும்மாயிராதேயும்.
2 இதோ, உம்முடைய சத்துருக்கள் கொந்
தளித்து, [7]உம்முடைய பகைஞர் தலையெடுக்
கிறார்கள்.
3 உமது ஜனத்துக்கு விரோதமாக உபாயதந்
திரங்களை யோசித்து, [8]உமது மறைவிலிருக்
கிறவர்களுக்கு விரோதமாக ஆலோசனை பண்
ணுகிறார்கள்.
4 அவர்கள் இனி ஒரு ஜாதியாராயிராமலும்,
இஸ்ரவேலின் பேர் இனி நினைக்கப்படாம
லும் போவதற்காக, [9]அவர்களை அதம் பண்
ணுவோம். வாருங்கள் என்கிறார்கள்.
5 இப்படி, ஏதோமின் கூடாரத்தாரும், இஸ்ர
வேலரும், மோவாபியரும், ஆகாரியரும், கேபா
லரும்,
6 அம்மோனியரும், அமலேக்கியரும், தீரு
வின் குடிகளோடு கூடிய பெலிஸ்தரும்,
7 ஏகமன நிர்ணயமாய் ஆலோசனைசெய்து,
[10]உமக்கு விரோதமாய் ஒப்பந்தம் பண்ணிக்
கொண்டிருக்கிறார்கள்.
8 அசீரியரும் அவர்களோடேகூடக் கலந்து,
லோத்தின் புத்திரருக்குப் புயபலமானார்
கள்.
9 மீதியானியருக்குச் செய்தது போலவும்,
[11]கீசோன் என்னும் ஆற்றண்டை எந்தோரிலே
அழிக்கப்பட்டு,
10 நிலத்துக்கு எருவாய்ப்போன சிசெரா,
யாபீன் என்பவர்களுக்குச் செய்தது போல
வும், அவர்களுக்குச் செய்யும்.

1 2 நாளா. 19. 6, 7. பிர. 5. 8. ஏசா. 3. 14
2 ஏரே. 22. 3.
3 யோபு 29. 12. நீதி. 24. 11
4 75. 3. யோ. 12. 34, 35. 2 தீமோ. 2. 19
5 யாத். 22.9,28 யோ. 10. 34, 35
6 வெளி. 11. 15
7 ஏசா. 37. 29. அப். 4. 25
8 27. 5: 31. 20
9 எஸ்தர் 3. 6,9
10 2. 2
11 எண். 31. 1–12
12 நியா. 7. 25
13 ஏசா. 17. 13, 14. மத். 3. 12
14 யாத். 6. 3. ஏசா. 42. 8
15 27. 4
16 42. 1, 2
17 65. 4: 134. 1
* பாகா. 2 சாமு. 5. 23
18 யோபு 17. 9. நீதி. 4. 18. யோ. 10. 28

அவர்களையும் அவர்கள் அதிபதிகளையும்
[12]ஓரேபுக்கும் சேபுக்கும், அவர்கள் பிர
க்களையெல்லாம் சேபாவுக்கும் சல்முனாவுக்கு
சமமாக்கும்.
தேவனுடைய வாசஸ்தலங்களை எங்களுக்
குச் சுதந்தரமாக நாங்கள் கட்டிக்கொள்வோம்
என்று சொல்லுகிறார்களே.
என் தேவனே, அவர்களைச் சுழல்காற்றின்
புழுதிக்கும், [13]காற்றுமுகத்தில் பறக்கும் துரும்
புக்கும் சமமாக்கும்.
நெருப்பு காட்டைக் கொளுத்துவதுபோல
வும், அக்கினிஜுவாலைகள் மலைகளை எரிப்
பது போலவும்,
நீர் உமது புசலினாலே அவர்களைத் தொ
டர்ந்து, உமது பெருங்காற்றினாலே அவர்களைக்
கலங்கப்பண்ணும்.
கர்த்தாவே, அவர்கள் உமது நாமத்தைத்
தேடும்படிக்கு, அவர்கள் முகங்களை அவமா
னத்தாலே மூடும்.
யேகோவா என்னும் நாமத்தையுடைய
தேவரீர் ஒருவரே [14]பூமியனைத்தின்மேலும்
உன்னதமானவர் என்று மனுஷர் உணரும்
படி,
அவர்கள் என்றைக்கும் வெட்கிக் கலங்கி,
நாணமடைந்து அழிந்துபோவார்களாக.

(கித்தீத் என்னும் வாத்தியத்தில் வாசிக்க கோராகின் 8
புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
சங்கீதம்.)

சேனைகளின் கர்த்தாவே, [15]உமது வாசஸ்
தலங்கள் எவ்வளவு இன்பமானவைகள்!
என் ஆத்துமா கர்த்தருடைய ஆலயப்பிரா
காரங்களின்மேல் வாஞ்சையும் தவனமுமா
யிருக்கிறது; [16]என் இருதயமும் என் மாம்ச
மும் ஜீவனுள்ள தேவனை நோக்கிக் கெம்பீ
சத்தமிடுகிறது.
என் ராஜாவும் என் தேவனுமாகிய சேனை
களின் கர்த்தாவே, உம்முடைய பீடங்களண்
டையில் அடைக்கலான் குருவிக்கு வீடு
தகைவிலான் குருவிக்குத் தன் குஞ்சுகளை
வைக்கும் கூடும் கிடைத்ததே.
உம்முடைய வீட்டில் வாசமாயிருக்கிறவர்
கள் பாக்கியவான்கள்; [17]அவர்கள் எப்பொழு
தும் உம்மைத் துதித்துக்கொண்டிருப்பார்
கள்.
உம்மிலே பெலன்கொள்ளுகிற மனுஷனும்
தங்கள் இருதயங்களில் செவ்வையான வ
ழிகளைக் கொண்டிருக்கிறவர்களும் பாக்
கியவான்கள்.
அழுகையின் *பள்ளத்தாக்கை உருவ
ப் போகையில் அதை நீரூற்றாக்கிக் கொள்ளுகிறா
ர்கள்; மழையும் குளங்களை நிரப்பும்.
அவர்கள் பலத்தின்மேல் பலம் அடை
ந்து, [18]சீயோனிலே தேவசந்நிதியில் வந்து கா
ணப்படுவார்கள்.
சேனைகளின் தேவனாகிய கர்த்தாவே,
என் விண்ணப்பத்தைக் கேளும்; யாக்கோபின்
தேவனே, செவிகொடும்.

எங்கள் கேடகமாகிய தேவனே, [1]கண்
ணோக்கமாயிரும்; நீர் அபிஷேகம் பண்ணி
னவரின் முகத்தைப் பாரும்.
ஆயிரம் நாளைப்பார்க்கிலும் உமது பிராகா
ரங்களில் செல்லும் ஒரே நாள் நல்லது, ஆகா
மியக் கூடாரங்களில் வாசமாயிருப்பதைப்
பார்க்கிலும் என் தேவனுடைய ஆலயத்தின்
வாசற்படியில் காத்திருப்பதையே தெரிந்து
கொள்ளுவேன்.
தேவனாகிய கர்த்தர் [2]சூரியனும் கேடகமு
மானவர்; கர்த்தர் கிருபையையும் மகிமையை
யும் அருளுவார்; [3]உத்தமமாய் நடக்கிறவர்க
ளுக்கு நன்மையை வழங்காதிரார்.
சேனைகளின் கர்த்தாவே, உம்மை நம்பி
யிருக்கிற மனுஷன் பாக்கியவான்.

(கோராகின் புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு
ஒப்புவிக்கப்பட்ட சங்கீதம்.)

கர்த்தாவே, உமது தேசத்தின்மேல் பிரியம்
வைத்து, [4]யாக்கோபின் சிறையிருப்பைத்
திருப்பினீர்.
உமது ஜனத்தின் அக்கிரமத்தைமன்னித்து,
அவர்கள் பாவத்தை யெல்லாம் மூடினீர்.
உமது உக்கிரத்தையெல்லாம் அடக்கிக்
கொண்டு, [6]உமது கோபத்தின் எரிச்சலை
விட்டுத் திரும்பினீர்.
எங்கள் ரட்சிப்பின் தேவனே, நீர் எங்களைத்
திருப்பிக் கொண்டுவாரும், எங்கள்மேலுள்ள
உமது கோபத்தை ஆறப்பண்ணும்.
என்றைக்கும் எங்கள்மேல் கோபமாயிருப்
பீரோ? தலைமுறைதலைமுறையாக உமது கோ
பத்தை நீடித்திருக்கப் பண்ணுவீரோ?
உமது ஜனங்கள் உம்மில் மகிழ்ந்திருக்கும்
படி நீர் எங்களைத் திரும்ப [7]உயிர்ப்பிக்கமாட்
டீரோ?
கர்த்தாவே, உமது கிருபையை எங்களுக்
குக் காண்பித்து, உமது ரட்சிப்பை எங்களுக்கு
அருளிச்செய்யும்.
கர்த்தராகிய தேவன் விளம்புவதைக் கேட்
பேன்; அவர் தம்முடைய ஜனங்களுக்கும் தம்
முடைய பரிசுத்தவான்களுக்கும் சமாதானம்
கூறுவார்; [8]அவர்களோ மதிகேட்டுக்குத் திரும்
பாதிருப்பார்களாக
நம்முடைய தேசத்தில் மகிமை [9]வாசமா
யிருக்கும்படி, அவருடைய ரட்சிப்பு அவருக்
குப் பயந்தவர்களுக்குச் சமீபமாயிருக்கிறது.
கிருபையும் சத்தியமும் ஒன்றையொன்று
சந்திக்கும், [10]நீதியும் சமாதானமும் ஒன்றை
யொன்று முத்தஞ்செய்யும்.
சத்தியம் பூமியிலிருந்து முளைக்கும், [11]நீதி
வானத்திலிருந்து தாழப் பார்க்கும்,
கர்த்தர் நன்மையானதைத் தருவார்; [12]நம்
முடைய தேசமும் தன் பலனைக் கொடுக்
கும்.
நீதி அவருக்கு முன்னாகச் சென்று, [13]அவ
ருடைய அடிச்சுவடுகளின் வழியிலே நம்மை
நடத்தும்.

[1] 89. 20. ஆதி. 15. 1
[2] ஏசா. 60. 19
[3] பிலி. 4. 19
[4] 77. 7
[5] கொலோ. 2. 13
[6] உபா. 13, 18
[7] ஆப. 3. 2
[8] 130. 4. ஆகாய். 2. 7, 9. சகரி. 9. 10. யோ. 5. 14. 2 பே. 2. 20, 21
[9] ஏசா. 46. 13. யோ. 1. 14
[10] ஏசா. 32. 16, 17. ஓ. 2. 14
[11] ஏசா. 45.8
[12] 84. 11. யாக். 1. 17
[13] 89. 14: 119. 35. ஏசா. 58.8
* பரிசுத்தன், அடியேன்.
[14] 4. 3. நீதி. 2. 8. ஏசா. 26. 3
[15] யோவே. 2. 13
[16] யாத். 15. 11. ஏசா. 40. 18, 25
[17] உபா. 3. 24
[18] வெளி. 15. 4
[19] உபா. 32. 39. ஏசா. 37. 16. 1 கொ. 8. 4
[20] 119. 33. யோ. 17. 20, 21. 1 கொ. 6. 17
[21] 103. 11. 1 தெச. 1. 10
[22] 10. 4
[23] நெகே. 9. 17
[24] ஏசா. 45. 24

## 86

(தாவீதின் விண்ணப்பம்.)

கர்த்தாவே, உமது செவியைச் சாய்த்து,
என் விண்ணப்பத்தைக் கேட்டருளும்; நான்
சிறுமையும் எளிமையுமானவன்.
என் ஆத்துமாவைக் காத்தருளும், நான் 2
*பக்தியுள்ளவன்; என் தேவனே, உம்மை
நம்பியிருக்கிற [14]உமது அடியேனை நீர் ரட்
சியும்.
ஆண்டவரே, எனக்கு இரங்கும், நாடோ 3
றும் உம்மை நோக்கிக் கூப்பிடுகிறேன்.
உமது அடியேனுடைய ஆத்துமாவைமகிழ்ச் 4
சியாக்கும்; ஆண்டவரே, உம்மிடத்தில் என்
ஆத்துமாவை உயர்த்துகிறேன்.
ஆண்டவரே, நீர் நல்லவரும், [15]மன்னிக் 5
கிறவரும், உம்மை நோக்கிக் கூப்பிடுகிற
யாவர்மேலும் கிருபை மிகுந்தவருமாயிருக்
கிறீர்.
கர்த்தாவே, என் ஜெபத்திற்குச் செவி 6
கொடுத்து: என் விண்ணப்பங்களின் சத்தத்
தைக் கவனியும்.
நான் துயரப்படுகிற நாளில் உம்மை நோக் 7
கிக் கூப்பிடுவேன்; நீர் என்னைக் கேட்டரு
ளுவீர்.
ஆண்டவரே, தேவர்களுக்குள்ளே [16]உமக்கு 8
நிகருமில்லை; [17]உம்முடைய கிரியைகளுக்கு
ஒப்புமில்லை.
ஆண்டவரே, நீர் உண்டாக்கின எல்லா 9
ஜாதிகளும் வந்து, [18]உமக்கு முன்பாகப்ப
ணிந்து, உமது நாமத்தை மகிமைப்படுத்து
வார்கள்.
தேவரீர் மகத்துவமுள்ளவரும் அதிசயங்க 10
ளைச் செய்கிறவருமாயிருக்கிறீர்; [19]நீர் ஒருவரே
தேவன்.
கர்த்தாவே, உமது வழியை எனக்குப் 11
போதியும், நான் உமது சத்தியத்திலே நடப்
பேன்; [20]நான் உமது நாமத்திற்குப் பயந்திருக்
கும்படி என் இருதயத்தை ஒருமுகப்படுத்தும்.
என் தேவனாகிய ஆண்டவரே; உம்மை 12
என் முழு இருதயத்தோடும் துதித்து, உமது
நாமத்தை என்றென்றைக்கும் மகிமைப்படுத்
துவேன்.
நீர் எனக்குப் பாராட்டின உமது கிருபை 13
பெரியது; [21]என் ஆத்துமாவைத் தாழ்ந்த பாதா
ளத்திற்குத் தப்புவித்தீர்.
தேவனே, அகங்காரிகள் எனக்கு விரோத 14
மாய் எழும்புகிறார்கள், கொடுமைக்காரராகிய
கூட்டத்தார் என் பிராணனை வாங்கத் தேடுகி
றார்கள். [22]உம்மைத் தங்களுக்கு முன்பாக
நிறுத்தி நோக்காதிருக்கிறார்கள்.
ஆனாலும் ஆண்டவரே, நீர் மனவுருக்கமும், 15
இரக்கமும், நீடிய பொறுமையும், [23]பூரணகிரு
பையும், சத்தியமுமுள்ள தேவன்.
என்மேல் நோக்கமாகி, எனக்கு இரங்கும்; 16
உமது வல்லமையை உமது அடியானுக்கு
அருளி, [24]உமது அடியாளின் குமாரனை ரட்
சியும்.

17 கர்த்தாவே, நீர் எனக்குத் துணைசெய்து
என்னைத் தேற்றுகிறதை என்பகைஞர் கண்டு
வெட்கப்படும்படிக்கு, [1]எனக்கு அநுகூல
மாக ஒரு அடையாளத்தைக் காண்பித்தருளும்.

**87** (கோராகின் புத்திரருக்கு ஒப்புவிக்கப்பட்ட
பாட்டாகிய சங்கீதம்.)

அவர் *அஸ்திபாரம் [2]பரிசுத்த பர்வதங்க
ளில் இருக்கிறது.
2 கர்த்தர் யாக்கோபின் வாசஸ்தலங்களெல்
லாவற்றைப்பார்க்கிலும் [3]சீயோனின் வாசல்
களில் பிரியமாயிருக்கிறார்.
3 தேவனுடைய நகரமே! [4]உன்னைக்குறித்து
மகிமையான விசேஷங்கள் வசனிக்கப்படும்.
4 என்னை அறிந்தவர்களுக்குள்ளே †ராகாபை
யும் பாபிலோனையும் [5]குறித்துப் பேசுவேன்,
இதோ, பெலிஸ்தியரிலும், தீரியரிலும், [6]எத்
தியோப்பியரிலுங்கூட, [7]இன்னான் அங்கே
பிறந்தான் என்றும்;
5 சீயோனைக் குறித்து, [8]இன்னான் இன்
னான் அதிலே பிறந்தானென்றும் சொல்லப்
படும்; உன்னதமானவர் தாமே அதை ஸ்திரப்
படுத்துவார்.
6 கர்த்தர் ஜனங்களைப் பேரெழுதும்போது,
[9]இன்னான் அதிலே பிறந்தான் என்று அவர்
களைத் தொகையிடுவார்.
7 எங்கள் ஊற்றுகளெல்லாம் உன்னில்
இருக்கிறது என்று [10]பாடுவாரும் ஆடுவாரும்
ஏகமாய்ச் சொல்லுவார்கள்.

**88** (மகலாத்லேயனோத் வாத்தியத்தில் வாசிக்க,கோராகின்
புத்திரரிலுள்ள ராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
எஸ்ராகியனாகிய ஏமானின் போதக சங்கீதம்.)

என் ரட்சிப்பின் தேவனாகிய கர்த்தாவே,
[11]இரவும் பகலும் உம்மை நோக்கிக் கூப்பிடு
கிறேன்.
2 என் விண்ணப்பம் உமது சமுகத்தில்
வருவதாக; என் கூப்பிடுதலுக்கு உமது செவி
யைச் சாய்த்தருளும்.
3 என் ஆத்துமா துக்கத்தால் நிறைந்திருக்
கிறது; என் ஜீவன் பாதாளத்திற்குச் சமீப
மாய் வந்திருக்கிறது.
4 நான் குழியில் இறங்குகிறவர்களோடு எண்
ணப்பட்டு, பெலனற்ற மனுஷனைப்போலா
னேன்.
5 மரித்தவர்களில் ஒருவனைப்போல் நெகி
ழப்பட்டிருக்கிறேன்; நீர் இனி ஒருபோதும்
நினையாதபடி, உமது கையால் அறுப்புண்டு
போய்ப் பிரேதக்குழிகளிலே கிடக்கிறவர்க
ளைப்போலானேன்.
6 என்னைப் பாதாளக் குழியிலும் இருளிலும்
ஆழங்களிலும் வைத்தீர்.
7 உம்முடைய கோபம் என்னை இறுத்து
கிறது; [12]உம்முடைய அலைகள் எல்லா
வற்றினாலும் என்னை வருத்தப்படுத்துகி
றீர்.
8 எனக்கு அறிமுகமானவர்களை எனக்குத்
தூரமாக விலக்கி, [13]அவர்களுக்கு என்னை அரு
வருப்பாக்கினீர்; நான் வெளியே புறப்படக்
கூடாதபடி அடைபட்டிருக்கிறேன்.
துக்கத்தினால் என் கண் தொய்ந்து போ 9
யிற்று; கர்த்தாவே, அநுதினமும் நான் உம்மை
நோக்கிக் கூப்பிட்டு, உமக்கு நேராக என்
கைகளை விரிக்கிறேன்.
மரித்தவர்களுக்கு அதிசயங்களைச் செய்வீ 10
ரோ? [14]செத்துப்போன வீரர் எழுந்து உம்
மைத் துதிப்பார்களோ?
பிரேதக்குழியில் உமது கிருபையும், அழி 11
வில் உமது உண்மையும் விவரிக்கப்படுமோ?
இருளில் உமது அதிசயங்களும், [15]மறதி 12
யின் பூமியில் உமது நீதியும் அறியப்படுமோ?
நானோ கர்த்தாவே, உம்மை நோக்கிக் கூப் 13
பிடுகிறேன்; காலையிலே என் விண்ணப்பம்
உமக்கு முன்பாக வரும்.
கர்த்தாவே, ஏன் என் ஆத்துமாவைத் தள் 14
ளிவிடுகிறீர்? ஏன் உமது முகத்தை எனக்கு
மறைக்கிறீர்?
சிறுவயது முதல் நான் சிறுமைப்பட்டவ 15
னும் மாண்டுபோகிறவனுமா யிருக்கிறேன்;
[16]உம்மால் வரும் திகில்கள் என்மேல் சுமந்
திருக்கிறது, நான் மனங்கலங்குகிறேன்.
உம்முடைய எரிச்சல்கள் என்மேல் 16
புரண்டுபோகிறது; [17]உம்முடைய பயங்கரங்
கள் என்னை அதம்பண்ணுகிறது.
அவைகள் நாடோறும் தண்ணீரைப்போல் 17
என்னைச் சூழ்ந்து, ஏகமாய் என்னை வளைந்து
கொள்ளுகிறது.
சிநேகிதனையும் தோழனையும் எனக்குத் 18
தூரமாக விலக்கினீர்; [18]எனக்கு அறிமுகமான
வர்கள் மறைந்துபோனார்கள்.

(எஸ்ராகியனாகிய ஏத்தானின் மஸ்கீல் என்னும் **89**
போதக சங்கீதம்.)

கர்த்தரின் கிருபைகளை என்றென்றைக்கும்
பாடுவேன்; உமது உண்மையைத் தலைமுறை
தலைமுறையாக என் வாயினால் அறிவிப்பேன்.
கிருபை என்றென்றைக்கும் ஸ்திரப்பட் 2
டிருக்கும்; உமது உண்மையை வானங்களிலே
ஸ்தாபிப்பீர் என்றேன்.
என்னால் தெரிந்து கொள்ளப்பட்டவ 3
னோடே உடன்படிக்கைபண்ணி, [19]என் தாச
னாகிய தாவீதை நோக்கி:
என்றென்றைக்கும் உன் சந்ததியை நிலைப் 4
படுத்தி, தலைமுறை தலைமுறையாக உன் சிங்
காசனத்தை ஸ்தாபிப்பேன் என்று ஆணையிட்
டேன் என்றீர்.
கர்த்தாவே, வானங்கள் உம்முடைய அதிச 5
யங்களைத்துதிக்கும், [20]பரிசுத்தவான்களின்சபை
யிலே உம்முடைய உண்மையும் விளங்கும்.
ஆகாயமண்டலத்தில் கர்த்தருக்கு நிகரான 6
வர் யார்? பலவான்களின் புத்திரரில் கர்த்த
ருக்கு ஒப்பானவர் யார்?
தேவன் பரிசுத்தவான்களுடைய ஆலோ 7
சனைச்சபையில் மிகவும் பயப்படத்தக்கவர்,
தம்மைச் சூழ்ந்திருக்கிற அனைவராலும் அஞ்
சப்படத்தக்கவர்.

1 41. 11, 12. 2 கொ. 5. 5
* அவர்போட்ட அஸ்திபாரம். ஏசா. 14. 32
2 27. 4: 48. 1
3 78: 67, 68
4 ஏசா. 54. 2. மு. வெளி. 21. 2. மு
† எகிப்து
5 ஏசா. 51. 9
6 ஏசா. 19. 23-25
7 68. 31. அப். 8. 27
8 ஏசா. 60. 1-9. யோ. 1. 12, 13 கலா. 4. 26
9 எசே. 13. 9. மல். 4. 16. லூ. 10. 20. வெளி 20. 12
10 1 நாளா. 23. 5. யாக். 1. 17
11 லூ. 13. 7
12 42. 7
13 யோபு 12. 14: 19. 13. மு
14 ஏசா. 38. 18
15 பிர. 8. 10: 9. 5
16 யோபு 6. 4
17 வெளி. 6. 17
18 யோபு 19. 13
19 2 சாமு. 7. 11. மு. ஏசா. 42. 1
20 19. 1. வெளி. 7. 10-12

8 சேனைகளின் தேவனாகிய கர்த்தாவே,
உம்மைப்போல் வல்லமையுள்ள கர்த்தர் யார்?
[1]உம்முடைய உண்மை உம்மைச் சூழ்ந்திருக்
கிறது.
9 தேவரீர் சமுத்திரத்தின் பெருமையை ஆளு
கிறவர்; [2]அதின் அலைகள் எழும்பும்போது
அவைகளை அடங்கப்பண்ணுகிறீர்.
10 நீர் *ராகாபை வெட்டுண்ட ஒருவனைப்
போல் நொறுக்கினீர்; [3]உமது வல்லமையான
புயத்தினால் உம்முடைய சத்துருக்களைச் சித
றடித்தீர்.
11 வானங்கள் உம்முடையது, பூமியும் உம்மு
டையது, பூலோகத்தையும் அதிலுள்ள யாவை
யும் நீரே அஸ்திபாரப்படுத்தினீர்.
12 வடக்கையும் தெற்கையும் நீர் உண்டாக்கி
னீர்; தாபோரும் எர்மோனும் உம்முடைய
நாமம் விளங்கக் கெம்பீரிக்கும்.
13 உமக்கு வல்லமையுள்ள புயமிருக்கிறது;
உம்முடைய கரம் பராக்கிரமமுள்ளது; உம்மு
டைய வலதுகரம் உன்னதமானது.
14 நீதியும் நியாயமும் [4]உம்முடைய சிங்காச
னத்தின் ஆதாரம்; [5]கிருபையும் சத்தியமும்
உமக்கு முன்பாக நடக்கும்.
15 கெம்பீரசத்தத்தை அறியும் ஜனங்கள் பாக்
கியமுள்ளவர்கள்; [6]கர்த்தாவே, அவர்கள்
உம்முடைய முகத்தின் வெளிச்சத்தில் நடப்
பார்கள்.
16 அவர்கள் உம்முடைய நாமத்தில் நாடோ
றும் களிகூர்ந்து, [7]உம்முடைய நீதியால்
உயர்ந்திருப்பார்கள்.
17 நீரே அவர்கள் பலத்தின் மகிமையாயிருக்
கிறீர்; [8]உம்முடைய தயவினால் எங்கள் கொம்பு
உயரும்.
18 கர்த்தரால் எங்கள் கேடகமும், [9]இஸ்ரவே
லின் பரிசுத்தரால் எங்களுடைய ராஜாவும்
உண்டு.
19 அப்பொழுது நீர் உம்முடைய பக்தனுக்குத்
தரிசனமாகி: [10]சகாயஞ்செய்யத்தக்க சக்தியை
ஒரு சவுரியவான்மேல் வைத்து, ஜனத்
தில் தெரிந்துகொள்ளப்பட்டவனை உயர்த்தி
னேன்.
20 என் தாசனாகிய தாவீதைக் கண்டுபிடித்
தேன்; [11]என் பரிசுத்த தைலத்தினால் அவனை
அபிஷேகம்பண்ணினேன்.
21 என் கை அவனோடே உறுதியாயிருக்கும்;
[12]என் புயம் அவனைப் பலப்படுத்தும்.
22 சத்துரு அவனை நெருக்குவதில்லை; நியா
யக்கேட்டின் மகன் அவனை ஒடுக்குவதில்லை.
23 அவன் சத்துருக்களை அவனுக்கு முன்பாக
மடங்கடித்து, அவனைப் பகைக்கிறவர்களை
வெட்டுவேன்.
24 என் உண்மையும் என் கிருபையும் அவ
னோடிருக்கும்; என் நாமத்தினால் அவன்
கொம்பு உயரும்.
25 அவன் கையைச் சமுத்திரத்தின் மேலும்,
[13]அவன் வலதுகரத்தை ஆறுகள்மேலும்
ஆளும்படி வைப்பேன்.

[1] 1 சாமு. 2. 2
[2] யோபு 38. 11. மாற். 4. 39, 41
* எகிப்து பாத். 14. 26-28
[3] யோசு 12. 1. நியா. 4. 6, 12
[4] 97. 2
[5] யோ. 1. 17. Cor. 10. 18
[6] எண். 6. 26
[7] 71. 15, 16. 1 கொ. 1. 30
[8] 75. 10
[9] ஏசா. 33. 22
[10] ஏசா. 9. 6
[11] 1 சாமு. 16. 11. 12. 2 சாமு. 7. 8-16
[12] 80. 17
[13] 72. 8
[14] 2 சாமு. 7. 14: 22. 47
[15] கொலோ. 1. 15, 16. வெளி. 19. 6
[16] ஏசா. 49. 7
[17] 2 சாமு. 7. 14. எரே. 9. 13 16
[18] 1 இரா. 11. 6 39
[19] புல. 3. 31, 32
[20] எரே. 33. 20
[21] ஆமோ. 4. 2
† வானவில். ஆதி. 9. 12
[22] 1 நாளா. 28. 9. ஓசி. 9. 17
[23] ஏசா. 5. 5, 6

அவன் என்னை நோக்கி: நீர் என் பிதா, 26
[14]என் தேவன், என் ரட்சிப்பின் கன்மலை
யென்று சொல்லுவான்.
நான் அவனை எனக்கு [15]முதற்பேறானவ 27
னும், பூமியின் ராஜாக்களைப்பார்க்கிலும் [16]மகா
உயர்ந்தவனுமாக்குவேன்.
என் கிருபையை என்றென்றைக்கும் அவ 28
னுக்காகக் காப்பேன்; என் உடன்படிக்கை
அவனுக்காக உறுதிப்படுத்தப்படும்.
அவன் சந்ததி என்றென்றைக்கும் நிலைத் 29
திருக்கவும், அவன் ராஜாசனம் வானங்களுள்
ளமட்டும் நிலைநிற்கவும் செய்வேன்.
அவன் பிள்ளைகள் என் நியாயங்களின்படி 30
நடவாமல், [17]என் வேதத்தைவிட்டு விலகி;
என் கட்டளைகளைக் கைக்கொள்ளாமல், 31
என் நியமங்களை மீறிநடந்தால்;
அவர்கள் மீறுதலை மிலாறினாலும், [18]அவர் 32
கள் அக்கிரமத்தை வாதைகளினாலும் தண்டிப்
பேன்.
ஆனாலும் என் கிருபையை அவனை விட்டு 33
விலக்காமலும், [19]என் உண்மையில் பிசகாம
லும் இருப்பேன்.
என் உடன்படிக்கையை மீறாமலும், [20]என் 34
உதடுகள் விளம்பினதை மாற்றாமலும் இருப்
பேன்.
ஒருவிசை என் பரிசுத்தத்தின்பேரில் ஆணை 35
யிட்டேன், [21]தாவீதுக்கு நான் பொய்சொல்
லேன்.
அவன் சந்ததி என்றென்றைக்கும் இருக் 36
கும்; அவன் சிங்காசனம் சூரியனைப்போல
எனக்கு முன்பாக நிலைநிற்கும்.
சந்திரனைப்போல அது என்றென்றைக்கும் 37
உறுதியாயும், ஆகாயமண்டலத்துச் †சாட்சி
யைப்போல் உண்மையாயும் இருக்கும் என்று
விளம்பினீர்.
ஆனாலும் நீர் எங்களை வெறுத்துத் தள்ளி 38
விட்டீர்; [22]நீர் அபிஷேகம் பண்ணுவித்தவன்
மேல் உக்கிரமானீர்.
உமது அடியானுடன் நீர் பண்ணின உடன் 39
படிக்கையை ஒழித்து விட்டு, அவன் கிரீடத்
தைத் தரையிலே தள்ளி அவமானப்படுத்தி
னீர்.
அவன் [23]மதில்களை யெல்லாம் தகர்த்துப் 40
போட்டு, அவன் அரணான ஸ்தலங்களைப் பா
ழாக்கினீர்.
வழிநடக்கிற யாவரும் அவனைக் கொள்ளை 41
யிடுகிறார்கள்; தன் அயலாருக்கு நிந்தையா
னான்.
அவன் சத்துருக்களின் வலதுகையை நீர் 42
உயர்த்தி, அவன் விரோதிகள் யாவரும் சந்
தோஷிக்கும்படி செய்தீர்.
அவன் பட்டயத்தின் கருக்கை மழுக்கிப் 43
போட்டு, அவனை யுத்தத்தில் நிற்காதபடி செய்
தீர்.
அவன் மகிமையை அற்றுப்போகப்பண் 44
ணி, அவன் சிங்காசனத்தைத் தரையிலே தள்
ளினீர்.

45 அவன் வாலிபநாட்களைக் குறுக்கி, அவனை
வெட்கத்தால் மூடினீர்.
46 எதுவரைக்கும், கர்த்தாவே! நீர் என்றைக்
கும் மறைந்திருப்பீரோ? [1]உமது கோபம் அக்
கினியைப்போல எரியுமோ?
47 என் ஜீவன் எவ்வளவு நிலையற்றது என்ப
தை நினைத்தருளும்; [2]மனுபுத்திரர் யாவரை
யும் வீணாகச் சிருஷ்டிக்க வேண்டியதென்ன?
48 மரணத்தைக் காணாமல் உயிரோடிருப்ப
வன் யார்? [3]தன் ஆத்துமாவைப் பாதாள வல்
லடிக்கு விலக்கி விடுகிறவன் யார்?
49 ஆண்டவரே, நீர் தாவீதுக்கு உம்முடைய
உண்மையைக்கொண்டு [4]சத்தியம்பண்ணின
உமது பூர்வ கிருபைகள் எங்கே?
50 ஆண்டவரே, உம்முடைய சத்துருக்கள் உம்
முடைய ஊழியக்காரரையும், நீர் அபிஷேகம்
பண்ணினவனின் காலடிகளையும் நிந்திக்கிற
படியினால்,
51 கர்த்தாவே, உமது அடியார் சுமக்கும் நிந்
தையையும், [5]வலுமையான ஜனங்களெல்லா
ராலும் நான் என் மடியில் சுமக்கும் என் நிந்
தையையும் நினைத்தருளும்.
52 கர்த்தருக்கு என்றென்றைக்கும் [6]ஸ்தோத்
திரமுண்டாவதாக ஆமென், ஆமென்.

## 90 (தேவனுடைய மனிதனாகிய மோசேயின் ஜெபம்.)

ஆண்டவரே, தேவரீர் தலைமுறை தலை
முறையாக [7]எங்களுக்கு அடைக்கலமானவர்.
2 பர்வதங்கள் தோன்றுமுன்னும், நீர் பூமியை
யும் உலகத்தையும் உருவாக்குமுன்னும், [8]நீரே
அநாதியாய் என்றென்றைக்கும் தேவனாயிருக்
கிறீர்.
3 நீர் மனுஷனை நிர்த்தூளியாக்கி, மனுபுத்தி
ரரே, [9]திரும்புங்கள் என்கிறீர்.
4 உமது பார்வைக்கு ஆயிரம் வருஷம் [10]நேற்
றுக்கழிந்த நாள்போலவும் இராச்சாமம்போல
வும் இருக்கிறது.
5 அவர்களை வெள்ளம்போல் வாரிக்கொண்டு
போகிறீர்; நித்திரைக்கு ஒத்திருக்கிறார்கள்;
[11]காலையிலே முளைக்கிற புல்லுக்கு ஒப்பாயி
ருக்கிறார்கள்.
6 அது காலையிலே முளைத்துப் பூத்து, [12]மாலை
யிலே அறுப்புண்டு உலர்ந்துபோம்.
7 நாங்கள் உமது கோபத்தினால் அழிந்து,
உமது உக்கிரத்தினால் கலங்கிப்போகிறோம்.
8 எங்கள் அக்கிரமங்களை உமக்கு முன்பாக
வும், [13]எங்கள் அந்தரங்க பாவங்களை உமது
முகத்தின் வெளிச்சத்திலும் நிறுத்தினீர்.
9 எங்கள் நாட்களெல்லாம் உமது கோ
பத்தால் போய்விட்டது; ஒரு கதையைப்
போல் எங்கள் வருஷங்களைக் கழித்துப்போட்
டோம்.
10 எங்கள் ஆயுசுநாட்கள் எழுபது வருஷம்,
பெலத்தின் மிகுதியால் எண்பது வருஷமாயி
ருந்தாலும், அதின் மேன்மையானது வருத்த
முஞ் சஞ்சலமுமே; [14]அது சீக்கிரமாய்க் கடந்
துபோகிறது, நாங்களும் பறந்துபோகிறோம்.
உமது கோபத்தின் வல்லமையையும், உமக் 11
குப் பயப்படத்தக்கவிதமாய் உமது உக்கிரத்
தையும் அறிந்துகொள்ளுகிறவன் யார்?
நாங்கள் ஞான இருதயமுள்ளவர்களாகும் 12
படி, [15]எங்கள் நாட்களை எண்ணும் அறிவை
எங்களுக்குப் போதித்தருளும்.
கர்த்தாவே, திரும்பிவாரும், எதுவரைக்கும் 13
கோபமாயிருப்பீர்? [16]உமது அடியாருக்காகப்
பரிதபியும்.
நாங்கள் எங்கள் வாழ்நாளெல்லாம் களி 14
கூர்ந்து மகிழும்படி, காலையிலே எங்களை உம
து கிருபையால் திருப்தியாக்கும்.
தேவரீர் எங்களைச் சிறுமைப்படுத்தின நாட் 15
களுக்கும், நாங்கள் துன்பத்தைக் கண்ட வரு
ஷங்களுக்கும் சரியாய் எங்களை மகிழ்ச்சியாக்
கும்.
உமது கிரியை உமது ஊழியக்காரருக்கும், 16
[17]உமது மகிமை அவர்கள் பிள்ளைகளுக்கும்
விளங்குவதாக.
எங்கள் தேவனாகிய ஆண்டவரின் *பிரி 17
யம் எங்கள்மேல் இருப்பதாக; எங்கள் கைக
ளின் கிரியையை எங்களிடத்தில் உறுதிப்
படுத்தும்; [18]ஆம், எங்கள் கைகளின் கிரியை
யை எங்களிடத்தில் உறுதிப்படுத்தியருளும்.

உன்னதமானவரின் மறைவிலிருக்கிற 91
வன் [19]சர்வவல்லவருடைய நிழலில் தங்கு
வான்.
நான் கர்த்தரை நோக்கி: [20]நீர் என் அடைக் 2
கலம், என் கோட்டை, என் தேவன், நான்
நம்பியிருக்கிறவர் என்று சொல்லுவேன்.
அவர் உன்னை வேடனுடைய கண்ணிக் 3
கும், [21]பாழாக்கும் கொள்ளைநோய்க்கும் தப்பு
விப்பார்.
அவர் தமது சிறகுகளாலே உன்னை மூடு 4
வார்; [22]அவர் செட்டைகளின் கீழே அடைக்
கலம் புகுவாய்; அவருடைய சத்தியம் உனக்
குப் பரிசையும் கேடகமுமாகும்.
இரவில் உண்டாகும் பயங்கரத்துக்கும், 5
[23]பகலில் பறக்கும் அம்புக்கும்,
இருளில் நடமாடும் கொள்ளைநோய்க்கும், 6
மத்தியானத்தில் பாழாக்கும் சங்காரத்துக்கும்
பயப்படாதிருப்பாய்.
உன் பக்கத்தில் ஆயிரம்பேரும், உன் வலது 7
புறத்தில் பதினாயிரம்பேரும் விழுந்தாலும்,
அது உன்னை அணுகாது.
உன் கண்களால் மாத்திரம் நீ அதைப்பார்த் 8
து, [24]துன்மார்க்கருக்கு வரும் பலனைக் காண்
பாய்.
எனக்கு அடைக்கலமாயிருக்கிற உன்னத 9
மான கர்த்தரை உனக்குத் தாபரமாகக்கொண்
டாய்.
ஆகையால் பொல்லாப்பு உனக்கு நேரி 10
டாது, [25]வாதை உன் கூடாரத்தை அணுகாது.
உன் வழிகளிலெல்லாம் உன்னைக் காக் 11
கும்படி, [26]உனக்காகத் தம்முடைய தூதர்களுக்
குக் கட்டளையிடுவார்.

1 79. 5: 85. 5
2 யோபு 7. 7: 10. 9
3 எபி. 11. 5
4 2 சாமு. 7. 15. ஏசா. 55. 3
5 69. 9, 10: 74. 22
6 41. 13
7 71. 3. உபா. 33. 27. எசே. 11. 16
8 நீதி. 8. 25, 26
9 ஆதி. 3. 19. பிர. 12. 7
10 2 பே. 3. 8
11 ஏசா. 40. 6
12 யோபு 14. 2
13 50. 21. எரே. 2. 22. 16. 17
14 யாக். 4. 14
15 நீதி. 4. 7
16 உபா. 32. 36
17 ஆப. 3. 2
* தயவு. 27. 4 110. 3
18 யோபு 22. 28. நீதி. 16. 3. ஏசா. 26. 12
19 27. 5: 57. 1
20 142. 5
21 124. 7
22 17. 8
23 121. 5, 6
24 நீதி. 3. 25, 26. மல். 1. 5
25 நீதி. 12. 21
26 மத். 4. 6. எபி. 1. 14

12 உன் பாதம் கல்லில் இடறாதபடிக்கு [1]அ
வர்கள் உன்னைத் தங்கள் கைகளில் ஏந்திக்
கொண்டுபோவார்கள்.
13 சிங்கத்தின்மேலும் விரியன் பாம்பின்மே
லும் நீ நடந்து, பாலசிங்கத்தையும் வலுசர்ப்
பத்தையும் மிதித்துப்போடுவாய்.
14 அவன் என்னிடத்தில் வாஞ்சையாயிருக்
கிறபடியால் அவனை விடுவிப்பேன்; என்
நாமத்தை அவன் அறிந்திருக்கிறபடியால்
[2]அவனை உயர்ந்த அடைக்கலத்திலே வைப்
பேன்.
15 அவன் என்னை நோக்கிக் கூப்பிடுவான்,
நான் அவனுக்கு மறுஉத்தரவு அருளிச்செய்
வேன்; [3]ஆபத்தில் நானே அவனோடிருந்து,
அவனைத் தப்புவித்து, [4]அவனைக் கனப்படுத்
துவேன்.
16 நீடித்த நாட்களால் அவனைத் திருப்தியாக்
கி, [5]என் ரட்சிப்பை அவனுக்குக் காண்பிப்
பேன்.

**92** (ஓய்வுநாளின் பாட்டாகிய சங்கீதம்.)
கர்த்தரைத் துதிப்பதும், [6]உன்னதமான
வரே, உமது நாமத்தைக் கீர்த்தனம் பண்ணு
வதும்,
2 பத்துநரம்புவீணையினாலும்தம்புருவினாலும்,
தியானத்தோடு வாசிக்கும் சுரமண்டலத்தினா
லும்,
3 காலையிலே [7]உமது கிருபையையும், இரா
விலே உமது சத்தியத்தையும் அறிவிப்பதும்
நலமாயிருக்கும்.
4 கர்த்தாவே, உமது செய்கைகளால் என்
னை மகிழ்ச்சியாக்கினீர், உமது கரத்தின் கிரி
யைகளினிமித்தம் ஆனந்த சத்தமிடுவேன்.
5 கர்த்தாவே, உமது கிரியைகள் எவ்வளவு
மகத்துவமானவைகள்! [8]உமது யோசனைகள்
மகா ஆழமானவைகள்.
6 மிருககுணமுள்ள மனுஷன் அதை அறி
யான்; மூடன் அதை உணரான்,
7 துன்மார்க்கர் புல்லைப்போலே தழைத்து,
அக்கிரமக்காரர் யாவரும் செழிக்கும்போது,
[9]அது அவர்கள் என்றென்றைக்கும் அழிந்து
போவதற்கே ஏதுவாகும்.
8 கர்த்தாவே, நீர் என்றென்றைக்கும் உன்
னதமானவராயிருக்கிறீர்.
9 கர்த்தாவே, உமது சத்துருக்கள் அழிவார்
கள்; உமது சத்துருக்கள் அழிந்தேபோவார்
கள்; [10]சகல அக்கிரமக்காரரும் சிதறுண்டுபோ
வார்கள்.
10 என் கொம்பைக் காண்டாமிருகத்தின்
கொம்பைப்போல உயர்த்துவீர்; புது எண்
ணெயால் [11]அபிஷேகம் பண்ணப்படுகிறேன்.
11 என் சத்துருக்களுக்கு நேரிடுவதை என்
கண் காணும்; எனக்கு விரோதமாய் எழும்பு
கிற துன்மார்க்கருக்கு நேரிடுவதை என் காது
கேட்கும்.
12 நீதிமான் பனையைப்போல் செழித்து, [12]லீப
னோனிலுள்ள கேதுருவைப்போல் வளரு
வான்.

[1] யோபு 5. 23
[2] 9. 10
[3] ஏசா. 43. 2: 65. 24
[4] 1 சாமு. 2. 30
[5] தீத். 3. 2: 22. 4
[6] 147. 1
[7] 71. 15
[8] ஏசா. 55. 9. ரோ. 11. 33, 34
[9] 73. 18—20. மல். 4. 1
[10] மத். 7. 23
[11] 2 கொ. 1. 21. 1 யோ. 2. 20
[12] 52. 8. ஓசி. 14. 5, 6
[13] உபா. 32. 4. செப். 3. 5. ரோ. 9. 14
[14] ஏசா. 52. 7. வெளி 19. 6
[15] 45. 6. நீதி. 8. 22. ழ
[16] 89. 9
[17] 2 தீமோ. 2. 19. எபி. 12. 14. வெளி. 21. 27
[18] உபா. 32. 35. நாகூ. 1. 2
[19] ஆதி. 18. 25
[20] யோபு 20. 4. எரே. 12. 1, 2
[21] 73. 8. ழ. யூதா. 15
[22] 10. 10, 11
[23] 92. 6. ரோ. 3. 11
[24] யாத். 4. 11. நீதி. 20. 12
[25] எசே. 39. 21. ஆப. 3. 12
[26] யோபு 35. 10. ஏசா. 28. 26
[27] 1 கொ. 3. 19, 20

கர்த்தருடைய ஆலயத்திலே நாட்டப்பட்ட 13
வர்கள் எங்கள் தேவனுடைய பிராகாரங்களில்
செழித்திருப்பார்கள்.
கர்த்தர் உத்தமரென்றும், [13]என் கன்மலை 14
யாகிய அவரிடத்தில் அநீதியில்லையென்றும்,
விளங்கப்பண்ணும்படி,
அவர்கள் முதிர்வயதிலும் கனிதந்து, புஷ் 15
டியும் பசுமையுமாயிருப்பார்கள்.

கர்த்தர் ராஜரிகம் பண்ணுகிறார், [14]மகத்து **93**
வத்தை அணிந்துகொண்டிருக்கிறார்; கர்த்தர்
பராக்கிரமத்தை அணிந்து, அவர் அதைக் கச்
சையாகக் கட்டிக்கொண்டிருக்கிறார்; ஆதலால்
பூச்சக்கரம் அசையாதபடி நிலைபெற்றிருக்கி
றது.
உமது சிங்காசனம் [15]பூர்வமுதல் உறுதியா 2
னது; நீர் அநாதியாயிருக்கிறீர்.
கர்த்தாவே, நதிகள் எழும்பின; நதிகள் இ 3
ரைச்சலிட்டு எழும்பின; நதிகள் அலைதிரண்டு
எழும்பின.
திரளான தண்ணீர்களின் இரைச்சலைப் 4
பார்க்கிலும், [16]சமுத்திரத்தின் வலுமையான
அலைகளைப் பார்க்கிலும், கர்த்தர் உன்னதத்
திலே வல்லமையுள்ளவர்.
உமது சாட்சிகள் மிகவும் உண்மையுள்ள 5
வைகள்; கர்த்தாவே, பரிசுத்தமானது [17]நித்
தியநாளாக உமது ஆலயத்தின் அலங்காரமா
யிருக்கிறது.

நீதியைச் சரிக்கட்டுகிற தேவனாகிய கர்த் **94**
தாவே, [18]நீதியைச் சரிக்கட்டுகிற தேவனே,
பிரகாசியும்.
பூமியின் நியாயாதிபதியே, [19]நீர் எழுந்து, 2
பெருமைக்காரருக்குப் பதிலளியும்.
கர்த்தாவே, துன்மார்க்கர் எதுவரைக்கும் 3
மகிழ்ந்து, [20]துன்மார்க்கர் எதுவரைக்கும் களி
கூர்ந்திருப்பார்கள்?
எதுவரைக்கும் அக்கிரமக்காரர் யாவரும் 4
வாயாடி, கடினமாய்ப்பேசி, [21]பெருமை பா
ராட்டுவார்கள்?
கர்த்தாவே, அவர்கள் உமது ஜனத்தை நொ 5
றுக்கி, உமது சுதந்தரத்தை ஒடுக்குகிறார்கள்.
விதவையையும் பரதேசியையும் கொன்று, 6
திக்கற்ற பிள்ளைகளைக் கொலைசெய்து:
கர்த்தர் பாரார், [22]யாக்கோபின் தேவன் கவ 7
னியார் என்று சொல்லுகிறார்கள்.
ஜனத்தில் மிருககுணமுள்ளவர்களே, 8
[23]உணர்வடையுங்கள்; மூடரே, எப்பொழுது
புத்திமான்களாவீர்கள்?
காதை உண்டாக்கினவர் கேளாரோ? [24]கண் 9
ணை உருவாக்கினவர் காணாரோ?
ஜாதிகளை [25]தண்டிக்கிறவர் கடிந்துகொள் 10
ளாரோ? [26]மனுஷனுக்கு அறிவைப் போதிக்
கிறவர் அறியாரோ?
மனுஷனுடைய யோசனைகள் [27]வீணென்று 11
கர்த்தர் அறிந்திருக்கிறார்.
கர்த்தாவே, துன்மார்க்கனுக்குக் குழிவெட் 12
டப்படும் வரைக்கும், நீர் தீங்குநாட்களில்
அமர்ந்திருக்கப்பண்ணி,

13 சிட்சித்து, [1]உம்முடைய வேதத்தைக்
கொண்டு போதிக்கிற மனுஷன் பாக்கியவான்.
14 கர்த்தர் தம்முடைய ஜனத்தை நெகிழவிடா
மலும், [2]தம்முடைய சுதந்தரத்தைக் கைவிடாம
லும் இருப்பார்.
15 நியாயம் நீதியினிடமாகத் திரும்பும்; செம்
மையான இருதயத்தார் யாவரும் அதைப் பின்
பற்றுவார்கள்.
16 துன்மார்க்கருக்கு விரோதமாய் என் பட்
சத்தில் எழும்புகிறவன் யார்? அக்கிரமக்கார
ருக்கு விரோதமாய் என் பட்சத்தில் நிற்பவன்
யார்?
17 கர்த்தர் எனக்குத் துணையாயிராவிட்டால்,
[3]என் ஆத்துமா சீக்கிரமாய் மவுனத்தில் வாசம்
பண்ணியிருக்கும்.
18 என் கால் சறுக்குகிறது என்று, நான்
சொல்லும்போது, [4]கர்த்தாவே, உமது கிரு
பை என்னைத் தாங்குகிறது.
19 என் உள்ளத்தில் விசாரங்கள் பெருகுகை
யில், [5]உம்முடைய ஆறுதல்கள் என் ஆத்து
மாவைத் தேற்றுகிறது.
20 தீமையைக் கட்டளையினால் பிறப்பிக்கிற
கொடுங்கோலாசனம் [6]உமக்கு இசைந்திருக்
குமோ?
21 அவர்கள் நீதிமானுடைய ஆத்துமாவுக்கு
விரோதமாய்க் கூட்டங்கூடி, [7]குற்றமில்லாத
ரத்தத்தைக் குற்றப்படுத்துகிறார்கள்.
22 கர்த்தரோ எனக்கு அடைக்கலமும், என்
தேவன் நான் நம்பியிருக்கிற கன்மலையுமாயி
ருக்கிறார்.
23 அவர்களுடைய அக்கிரமத்தை அவர்கள்
மேல் திருப்பி, [8]அவர்களுடைய பொல்லாப்
பினிமித்தம் அவர்களைச் சங்கரிப்பார்; நம்மு
டைய தேவனாகிய கர்த்தரே அவர்களைச் சங்
கரிப்பார்.

**95** கர்த்தரைக் கெம்பீரமாய்ப் பாடி, [9]நம்மு
டைய ரட்சணியக் கன்மலையைச் சங்கீர்த்த
னம் பண்ணக்கடவோம் வாருங்கள்.
2 துதித்தலுடனே அவர் சந்நிதிக்கு முன்பாக
வந்து, சங்கீதங்களால் அவரை ஆர்ப்பரித்துப்
பாடக்கடவோம்.
3 கர்த்தரே மகா தேவனும், [10]எல்லா தேவர்
களுக்கும் மகா ராஜனுமாயிருக்கிறார்.
4 பூமியின் ஆழங்கள் அவர் கையில் இருக்கி
றது; பர்வதங்களின் *உயரங்களும் அவருடை
யவைகள்.
5 சமுத்திரம் அவருடையது, [11]அவரே அதை
உண்டாக்கினார்; வெட்டாந்தரையையும் அவ
ருடைய கரம் உருவாக்கிற்று.
6 நம்மை உண்டாக்கின கர்த்தருக்கு முன்
பாக நாம் பணிந்து குனிந்து [12]முழங்காற்படி
யிடக்கடவோம் வாருங்கள்.
7 அவர் நம்முடைய தேவன்; நாம் அவர்
மேய்ச்சலின் ஜனங்களும், அவர் கைக்குள்
ளான ஆடுகளுமாமே.
8 இன்று அவருடைய சத்தத்தைக் கேட்
பீர்களாகில், [13]வனாந்தரத்தில் கோபம் மூட்
டினபோதும் சோதனைநாளிலும் நடந்தது
போல, உங்கள் இருதயத்தைக் கடினப்படுத்
தாதேயுங்கள்.
அங்கே உங்கள் பிதாக்கள் என்னைச் சோ 9
தித்து, [14]என்னைப் பரீட்சைபார்த்து, என்கிரி
யையையும் கண்டார்கள்.
நாற்பது வருஷமாய் நான் அந்தச் சந்ததி 10
யை அரோசித்து, அவர்கள் வழுவிப்போகிற
இருதயமுள்ள ஜனமென்றும், என்னுடைய
வழிகளை அறியாதவர்களென்றும் சொல்லி,
என்னுடைய இளைப்பாறுதலில் அவர்கள் 11
பிரவேசிப்பதில்லை யென்று, [15]என்னுடைய
கோபத்திலே ஆணையிட்டேன்.

கர்த்தருக்குப் புதுப்பாட்டைப் பாடுங்கள்; **96**
பூமியின் குடிகளே, [16]எல்லாரும் கர்த்தரைப்
பாடுங்கள்.
கர்த்தரைப் பாடி, அவருடைய நாமத்தை 2
ஸ்தோத்திரித்து, நாளுக்குநாள் அவருடைய
ரட்சிப்பைச் சுவிசேஷமாய் அறிவியுங்கள்.
ஜாதிகளுக்குள் அவருடைய மகிமையை 3
யும் சகல ஜனங்களுக்குள்ளும் அவருடைய
அதிசயங்களையும் விவரித்துச் சொல்லுங்கள்.
கர்த்தர் பெரியவரும், [17]மிகவும் ஸ்தோத்தி 4
ரிக்கப்படத்தக்கவருமாயிருக்கிறார்; எல்லா தே
வர்களிலும் பயப்படத்தக்கவர் அவரே.
சகல ஜனங்களுடைய தேவர்களும் விக்கிர 5
கங்கள்தானே, [18]கர்த்தரோ வானங்களை உண்
டாக்கினவர்.
மகிமையும் கனமும் அவர் சமுகத்தில் இருக் 6
கிறது; [19]வல்லமையும் மகத்துவமும் அவர்
பரிசுத்த ஸ்தலத்திலுள்ளது.
ஜனங்களின் வம்சங்களே, கர்த்தருக்கு மகி 7
மையையும் வல்லமையையும் செலுத்துங்கள்,
[20]கர்த்தருக்கே அதைச் செலுத்துங்கள்.
கர்த்தருக்கு அவருடைய நாமத்திற்குரிய 8
மகிமையைச் செலுத்தி, [21]காணிக்கைகளைக்
கொண்டுவந்து, அவருடைய பிராகாரங்களில்
பிரவேசியுங்கள்.
பரிசுத்த அலங்காரத்துடனே கர்த்தரைத் 9
தொழுதுகொள்ளுங்கள்; பூலோகத்தாரே, நீங்
கள் யாவரும் அவருக்கு முன்பாக நடுங்குங்
கள்.
கர்த்தர் ராஜரிகம் பண்ணுகிறார், [22]ஆகை 10
யால் பூச்சக்கரம் அசையாதபடி உறுதிப்பட்
டிருக்கும்; அவர் ஜனங்களை நிதானமாய் நியா
யந்தீர்ப்பார் என்று ஜாதிகளுக்குள்ளே சொல்
லுங்கள்.
வானங்கள் மகிழ்ந்து, [23]பூமி பூரிப்பாகி, 11
சமுத்திரமும் அதின் நிறைவும் முழங்குவ
தாக.
நாடும் அதிலுள்ள யாவும் களிகூருவதாக; 12
அப்பொழுது கர்த்தருக்கு முன்பாகக் காட்டு
விருட்சங்களெல்லாம் கெம்பீரிக்கும்.
அவர் வருகிறார், அவர் பூமியை நியாயந் 13
தீர்க்க வருகிறார்; [24]அவர் பூலோகத்தை நீதி
யோடும், ஜனங்களைச் சத்தியத்தோடும் நியா
யந்தீர்ப்பார்.

1 யோபு 5. 17. நீதி. 3. 11. எபி. 12. 5. ழ
2 1 சாமு. 12. 22. ரோ. 11. 1, 2
3 124. 1, 2
4 38. 16
5 63. 5, 6. 2 கொ. 1. 3, 4
6 ஏசா. 10. 1
7 நீதி. 1. 11, 16. மத். 27. 1
8 நீதி. 5. 22
9 100. 1
10 97. 9. மல். 1. 14
* திரவியங்கள்.
11 ஆதி. 1. 9, 10
12 அப். 21. 5. 1 கொ. 6. 20. பிலி. 2. 10
13 எபி. 3. 7. 15: 4. 7
14 1 கொ. 10. 9
15 எபி. 3. 10, 17; 4. 3, 5
16 1 நாளா. 16. 23-33. வெளி. 5. 9, 10
17 18. 3
18 எரே. 10. 11, 12. ஏசா. 42. 5
19 63. 2
20 யூதா. 25
21 மல். 1. 11. எபி. 13. 15
22 46. 6, 10. வெளி. 19. 6
23 69. 34
24 வெளி. 19. 11: 20. 13

97 கர்த்தர் ராஜரிகம் பண்ணுகிறார்; பூமி
பூரிப்பாகி, [1]திரளான தீவுகள் மகிழக்கடவது.
2 மேகமும் மந்தாரமும் அவரைச் சூழ்ந்திருக்
கிறது; [2]நீதியும் நியாயமும் அவருடைய சிங்
காசனத்தின் ஆதாரம்.
3 அக்கினி அவருக்கு முன்சென்று, [3]சுற்றி
லும் இருக்கிற அவருடைய சத்துருக்களைச்
சுட்டெரிக்கிறது.
4 அவருடைய மின்னல்கள் பூச்சக்கரத்தைப்
பிரகாசிப்பித்தது; [4]பூமி அதைக்கண்டு அதிர்ந்
தது.
5 கர்த்தரின் பிரசன்னத்தினால் பர்வதங்கள்
மெழுகுபோல உருகிற்று, [5]சர்வ பூமியினு
டைய ஆண்டவரின் பிரசன்னத்தினாலேயே
உருகிப்போயிற்று.
6 வானங்கள் அவருடைய நீதியை வெளிப்
படுத்துகிறது; [6]சகல ஜனங்களும் அவருடைய
மகிமையைக் காண்கிறார்கள்.
7 சொரூபங்களை வணங்கி, விக்கிரகங்களைப்
பற்றிப் பெருமைபாராட்டுகிற யாவரும் வெட்
கப்பட்டுப்போவார்களாக; [7]தேவர்களே, நீங்க
ளெல்லாரும் அவரைத் தொழுதுகொள்ளுங்
கள்.
8 சீயோன் கேட்டு மகிழ்ந்தது; கர்த்தாவே,
உம்முடைய நியாயத்தீர்ப்புகளினிமித்தம் யூதா
வின் குமாரத்திகள் களிகூர்ந்தார்கள்.
9 கர்த்தாவே, பூமி முழுவதுக்கும் நீர் உன்
னதமானவர்; எல்லா தேவர்களிலும் நீரே மிக
வும் உயர்ந்தவர்.
10 கர்த்தரில் அன்புகூருகிறவர்களே, தீமை
யை [8]வெறுத்துவிடுங்கள்; அவர் தம்முடைய
பரிசுத்தவான்களின் ஆத்துமாக்களைக் காப்
பாற்றி, துன்மார்க்கரின் கைக்கு அவர்களைத்
தப்புவிக்கிறார்.
11 நீதிமானுக்காக வெளிச்சமும், [9]செம்மை
யான இருதயத்தாருக்காக மகிழ்ச்சியும் விதைக்
கப்பட்டிருக்கிறது.
12 நீதிமான்களே, கர்த்தருக்குள் மகிழ்ந்து,
[10]அவருடைய *பரிசுத்தத்தின் நினைவுகூருத
லைக் கொண்டாடுங்கள்.
98 கர்த்தருக்குப் புதுப்பாட்டைப் பாடுங்கள்;
அவர் அதிசயங்களைச் செய்திருக்கிறார்; [11]அவ
ருடைய வலதுகரமும், அவருடைய பரிசுத்த
புயமும், ரட்சிப்பை உண்டாக்கினது.
2 கர்த்தர் தமது [12]ரட்சிப்பைப் பிரஸ்தாப
மாக்கி, தமது நீதியை ஜாதிகளுடைய கண்க
ளுக்கு முன்பாக விளங்கப்பண்ணினார்.
3 அவர் இஸ்ரவேல் குடும்பத்துக்காகத் தமது
கிருபையையும் உண்மையையும் நினைவுகூர்ந்
தார்; [13]பூமியின் எல்லைகளெல்லாம் நமது தே
வனுடைய ரட்சிப்பைக் கண்டது.
4 பூமியின் குடிகளே, நீங்களெல்லாரும் கர்த்
தரை நோக்கி ஆனந்தமாய் ஆர்ப்பரியுங்கள்;
முழக்கமிட்டுக் கெம்பீரமாய்ப் பாடுங்கள்.
5 சுரமண்டலத்தால் கர்த்தரைக் கீர்த்தனம்
பண்ணுங்கள், சுரமண்டலத்தாலும் கீதசத்தத்
தாலும் அவரைக் கீர்த்தனம்பண்ணுங்கள்.

1 ஏசா. 60. 9
2 89. 14. 1 இரா. 8. 12
3 தானி. 7. 10. எபி. 12. 29
4 யாத். 19. 18
5 நியா. 5. 5. மீகா. 1. 4
6 எஸ். 14 21 மத். 25. 31
7 யாத். 20. 4. எபி. 1. 6
8 நீதி. 3. 7. ரோ. 12. 9
9 யோபு 22. 28. நீதி. 4. 18
10 பிலி. 4. 4
* பரிசுத்த நாமத்தை
11 யாத். 15. 6, 11. ஏசா. 59. 16
12 ஏசா. 52. 10: 62. 2. லூ. 2. 30, 31. ரோ. 3. 25, 26
13 லூ. 1. 54, 72. ரோ. 10. 12, 18
14 வெளி. 1. 7
15 93. 1. எரே. 5. 22
16 உபா. 28. 58. வெளி. 15. 4
17 யோபு 36. 5–7
18 1 நாளா. 28. 2
19 யாத். 15. 25. 1 சாமு. 7. 9
20 யாத். 33. 9
1 89. 33. எரே. 33. 25, 26
22 2. 6
23 149. 2. ஏசா. 63. 19. எசே. 34. 11. ழ
24 65. 1. ஏசா. 35. 10

கர்த்தராகிய ராஜாவின் சமுகத்தில் பூரி 6
கைகளாலும் எக்காள சத்தத்தாலும் ஆனந்த
மாய் ஆர்ப்பரியுங்கள்.
சமுத்திரமும் அதின் நிறைவும், பூச்சக்கர 7
மும் அதின் குடிகளும் முழங்குவதாக.
கர்த்தருக்கு முன்பாக ஆறுகள் கைகொட்டி, 8
பர்வதங்கள் ஏகமாய்க் கெம்பீரித்துப் பாடக்கட
வது.
அவர் பூமியை நியாயந்தீர்க்க வருகிறார்; 9
[14]பூலோகத்தை நீதியோடும் ஜனங்களை நிதா
தானத்தோடும் நியாயந்தீர்ப்பார்.
கர்த்தர் ராஜரிகம் பண்ணுகிறார், [15]ஜனங் 99
கள் தத்தளிப்பார்களாக; அவர் கேருபீன்
களின் மத்தியில் வீற்றிருக்கிறார், பூமி அசை
வதாக.
கர்த்தர் சீயோனில் பெரியவர் அவர் எல் 2
லா ஜனங்கள்மேலும் உயர்ந்தவர்.
மகத்துவமும் பயங்கரமுமான [16]உமது நாமத் 3
தை அவர்கள் துதிப்பார்களாக; அது பரிசுத்த
முள்ளது.
ராஜாவின் வல்லமை நீதியில் பிரியப்படு 4
கிறது, [17]தேவரீர் நியாயத்தை நிலைநிறுத்து
கிறீர்; நீர் யாக்கோபில் நியாயமும் நீதியும்
செய்கிறீர்.
நம்முடைய தேவனாகிய கர்த்தரை உயர்த் 5
தி, அவர் பாதபடியிலே பணியுங்கள்; [18]அவர்
பரிசுத்தமுள்ளவர்.
அவருடைய ஆசாரியரில் மோசேயும்ஆரோ 6
னும், அவர் நாமத்தைப்பற்றிக் கூப்பிடுகிறவர்
களில் சாமுவேலும், [19]கர்த்தரை நோக்கிக்கூப்
பிட்டார்கள்; அவர் அவர்களுக்கு மறு உத்தரவு
அருளினார்.
மேகஸ்தம்பத்திலிருந்து அவர்களோடேபே 7
சினார்; [20]அவர்கள் அவருடைய சாட்சிப் பிரமா
ணங்களையும் அவர் தங்களுக்குக் கொடுத்த கட்
டளையையும் கைக்கொண்டவர்கள்.
எங்கள் தேவனாகிய கர்த்தாவே, நீர் அவர் 8
களுக்கு உத்தரவு அருளினீர்; நீர் அவர்கள்
கிரியைகளினிமித்தம் நீதிசரிக்கட்டினபோதி
லும், [21]அவர்களுக்கு மன்னிக்கிற தேவனாயி
ருந்தீர்.
நம்முடைய தேவனாகிய கர்த்தரை உயர்த்தி, 9
[22]அவருடைய பரிசுத்த பர்வதத்திற்கு நேரா
கப் பணியுங்கள்; நம்முடைய தேவனாகிய
கர்த்தர் பரிசுத்தமுள்ளவர்.
(ஸ்தோத்திர சங்கீதம்.) 100
பூமியின் குடிகளே, எல்லாரும் கர்த்தரைக்
கெம்பீரமாய்ப் பாடுங்கள்.
மகிழ்ச்சியோடே கர்த்தருக்கு ஆராதனை 2
செய்து, ஆனந்த சத்தத்தோடே அவர் சந்நிதி
முன் வாருங்கள்.
கர்த்தரே தேவனென்று அறியுங்கள்; நாம் 3
அல்ல, அவரே நம்மை உண்டாக்கினார் [23]நாம்
அவர் ஜனங்களும், அவர் மேய்ச்சலின் ஆடு
களுமாயிருக்கிறோம்.
அவர் வாசல்களில் துதியோடும், [24]அவர் 4
பிராகாரங்களில் புகழ்ச்சியோடும் பிரவேசித்து

அவரைத் துதித்து, அவருடைய நாமத்தை
ஸ்தோத்திரியுங்கள்.
5 கர்த்தர் நல்லவர், அவருடைய கிருபை என்
றென்றைக்கும், அவருடைய உண்மை தலை
முறை தலைமுறைக்கும் உள்ளது.

## 101

(தாவீதின் சங்கீதம்.)

இரக்கத்தையும் நியாயத்தையும் குறித்துப்
பாடுவேன்; கர்த்தாவே, உம்மைக் கீர்த்தனம்
பண்ணுவேன்.
2 உத்தமமான வழியிலே [1]விவேகமாய் நடப்
பேன்; எப்பொழுது என்னிடத்தில் வருவீர்!
[2]என் வீட்டிலே உத்தம இருதயத்தோடு நடந்து
கொள்ளுவேன்.
3 தீங்கான காரியத்தை என் கண்முன் வைக்க
மாட்டேன்; வழி விலகுகிறவர்களின் செய்
கையை வெறுக்கிறேன்; [3]அது என்னைப் பற்
றாது.
4 மாறுபாடான இருதயம் என்னைவிட்டு அக
லவேண்டும்; [4]பொல்லாதவனை அறியமாட்
டேன்.
5 பிறனை இரகசியமாய் அவதூறு பண்ணு
கிறவனைச் சங்கரிப்பேன்; [5]மேட்டிமைக் கண்
ணனையும் பெருநெஞ்சுள்ளவனையும் பொறுக்க
மாட்டேன்.
6 தேசத்தில் உண்மையானவர்கள் என்னோ
டே வாசம்பண்ணும்படி என் கண்கள் அவர்
கள்மேல் நோக்கமாயிருக்கும்; உத்தமமான வழி
யில் நடக்கிறவன் என்னைச் சேவிப்பான்.
7 கபடுசெய்கிறவன் என் வீட்டுக்குள் இருப்ப
தில்லை; பொய் சொல்லுகிறவன் [6]என் கண்
முன் நிலைப்பதில்லை.
8 அக்கிரமக்காரர் ஒருவரும் கர்த்தருடைய
நகரத்தில் இராதபடி வேர் அறுப்புண்டுபோக,
[7]தேசத்திலுள்ள அக்கிரமக்காரர் யாவரையும்
அதிகாலமே சங்கரிப்பேன்.

## 102

(துயரப்படுகிறவன் துக்கத்தில் மூழ்கி, கர்த்தரிடத்
தில் தன் வியாகுலத்தைத் தெரிவித்துச் செய்யும்
விண்ணப்பம்.)

கர்த்தாவே, என் விண்ணப்பத்தைக் கே
ளும்; [8]என் கூப்பிடுதல் உம்மிடத்தில் சேர்வதாக.
2 என் ஆபத்துநாளிலே உமது முகத்தை
எனக்கு மறையாதேயும்; [9]உமது செவியை
என்னிடத்தில் சாயும்; நான் கூப்பிடுகிற நாளி
லே எனக்குத் தீவிரமாய் உத்தரவு அருளிச்
செய்யும்.
3 என் நாட்கள் புகையைப்போல் ஒழிந்தது;
[10]என் எலும்புகள் ஒரு கொள்ளியைப்போல்
எரியுண்டது.
4 என் இருதயம் புல்லைப்போல்வெட்டுண்டு
உலர்ந்தது; என் போஜனத்தைப் புசிக்க மறந்
தேன்.
5 என் பெருமூச்சின் சத்தத்தினால், என்
எலும்புகள் என் மாம்சத்தோடு ஒட்டிக்கொள்
ளுகிறது.
6 வனாந்தர நாரைக்கு ஒப்பானேன்; [11]பாழான
இடங்களில் தங்கும் ஆந்தையைப்போலா
னேன்.
நான் நித்திரையில்லாமல் வீட்டின்மேல் 7
தனித்திருக்கும் குருவியைப்போல் இருக்கி
றேன்.
நாடோறும் என் சத்துருக்கள் என்னை நிந் 8
திக்கிறார்கள்; [12]என்மேல் மூர்க்கவெறிகொண்
டவர்கள் எனக்கு விரோதமாய்ச் சாபம் இடு
கிறார்கள்.
நீர் என்னை உயரதூக்கி, தாழத் தள்ளினீர், 9
[13]உமது சினத்திற்கும் கடுங்கோபத்திற்கும்
உள்ளானேன்.
ஆதலால் நான் சாம்பலை அப்பமாகப்புசித்து, 10
என் பானங்களைக் கண்ணீரோடே கலக்கி
றேன்.
என் நாட்கள் சாய்ந்துபோகிற நிழலைப் 11
போலிருக்கிறது; [14]புல்லைப்போல் உலர்ந்து
போகிறேன்.
கர்த்தராகிய நீரோ என்றென்றைக்கும் 12
இருக்கிறீர்; [15]உம்முடைய பேர் பிரஸ்தாபம்
தலைமுறை தலைமுறையாக நிற்கும்.
தேவரீர் எழுந்தருளி சீயோனுக்கு இரங்கு 13
வீர்; [16]அதற்குத் தயை செய்யுங்காலமும்,
[17]அதற்காகக் குறித்தநேரமும் வந்தது.
உம்முடைய ஊழியக்காரர் அதின் கல்லு 14
கள்மேல் வாஞ்சைவைத்து, அதின் மண்ணுக்
குப் பரிதபிக்கிறார்கள்.
கர்த்தர் சீயோனைக் கட்டி, தமது மகிமை 15
யில் வெளிப்படுவார்.
திக்கற்றவர்களுடைய ஜெபத்தை அலட்சி 16
யம்பண்ணாமல், [18]அவர்கள் விண்ணப்பத்தை
அங்கீகரிப்பார்.
அப்பொழுது ஜாதிகள் கர்த்தருடைய நாமத் 17
துக்கும், பூமியிலுள்ள ராஜாக்களெல்லாரும்
உம்முடைய மகிமைக்கும் பயப்படுவார்கள்.
பின்சந்ததிக்காக [19]இது எழுதப்படும்; 18
சிருஷ்டிக்கப்படும் ஜனம் கர்த்தரைத் துதிக்
கும்.
கர்த்தர் கட்டுண்டவர்களின் பெருமூச்சைக் 19
கேட்கவும், [20]கொலைக்கு நியமிக்கப்பட்டவர்
களை விடுதலையாக்கவும்,
தம்முடைய உயர்ந்த பரிசுத்த ஸ்தலத்திலி 20
ருந்து பார்த்து வானங்களிலிருந்து பூமியின்
மேல் கண்ணோக்கமானார்.
கர்த்தருக்கு ஆராதனைசெய்ய, ஜனங்களும் 21
ராஜ்யங்களும் ஏகமாய்க் கூடிக்கொள்ளுகை
யில்,
சீயோனில் கர்த்தருடைய நாமத்தையும், 22
[21]எருசலேமில் அவருடைய துதியையும் பிரஸ்
தாபப்படுத்துவார்கள்.
வழியிலே என் பெலனை அவர் ஒடுக்கி, 23
[22]என் நாட்களைக் குறுகப்பண்ணினார்.
அப்பொழுது நான்: [23]என் தேவனே, பாதி 24
வயதில் என்னை எடுத்துக்கொள்ளாதேயும்; உம்
முடைய வருஷங்கள் தலைமுறை தலைமுறை
யாக இருக்கும்.
நீர் ஆதியிலே பூமியை அஸ்திவாரப் படுத்தி 25
னீர்; [24]வானங்கள் உம்முடைய கரத்தின் கிரி
யையாயிருக்கிறது.

[1] 1 சாமு. 18. 14. 1 இரா. 9. 4
[2] ஏசா. 33. 15
[3] 125. 5
[4] 1 கொ. 15. 33
[5] நீதி. 6. 17
[6] வெளி. 21. 27
[7] எரே. 21. 12
[8] 145. 19
[9] ஏசா. 43. 2. 1 கொ. 10. 13
[10] யாக். 4. 14
[11] யோபு 30.29. ஏசா. 34. 11
[12] அப். 23. 12: 26. 11
[13] 30. 7
[14] பிர. 6. 12. யாக். 1. 10
[15] புல. 5. 19
[16] ஏசா. 60. 1. ஓ. சகரி. 1. 12, 13
[17] ஏசா. 40. 2
[18] நெகே. 1. 6. 11; 2. 1—8
[19] ரோ. 15. 4. 1 கொ. 10. 11
[20] 146. 7
[21] 1 பேது. 2. 9
[22] யோபு 21. 21
[23] 39. 13. ஏசா. 38. 10
[24] எபி. 1. 10-12

26 அவைகள் அழிந்துபோம், நீரோ நிலைத்தி
ருப்பீர்; [1]அவைகளெல்லாம் வஸ்திரம்போல்
பழமையாய்ப்போம்; அவைகளை ஒரு சால்வை
யைப்போல் மாற்றுவீர், அப்பொழுது மாறிப்
போம்.
27 நீரோ மாறாதவராயிருக்கிறீர்; [2]உமது
ஆண்டுகள் முடிந்துபோவதில்லை.
28 உமது அடியாரின் பிள்ளைகள் [3]தாபரித்
திருப்பார்கள்; அவர்கள் சந்ததி உமக்கு முன்
பாக நிலைபெற்றிருக்கும் என்று சொன்னேன்.

103 (தாவீதின் சங்கீதம்.)
என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்திரி;
என் முழு உள்ளமே, அவருடைய பரிசுத்த
நாமத்தை ஸ்தோத்திரி.
2 என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்திரி;
அவர் செய்த சகல உபகாரங்களையும் மறவாதே.
3 அவர் உன் [4]அக்கிரமங்களையெல்லாம் மன்
னித்து, [5]உன் நோய்களையெல்லாம் குண
மாக்கி,
4 உன் பிராணனை அழிவுக்கு விலக்கி மீட்டு,
உன்னைக் கிருபையினாலும் இரக்கங்களினா
லும் முடிசூட்டி,
5 நன்மையினால் உன் வாயைத் திருப்தியாக்
குகிறார்; [6]கழுகுக்குச் சமானமாய் உன் வயது
திரும்ப வாலவயதுபோலாகிறது.
6 ஒடுக்கப்படுகிற யாவருக்கும், கர்த்தர் நீதி
யையும் நியாயத்தையும் செய்கிறார்.
7 அவர் தமது வழிகளை மோசேக்கும், தமது
கிரியைகளை இஸ்ரவேல் புத்திரருக்கும் தெரி
யப்பண்ணினார்.
8 கர்த்தர் உருக்கமும், [7]இரக்கமும், நீடிய
சாந்தமும், மிகுந்த கிருபையுமுள்ளவர்.
9 அவர் எப்பொழுதும் கடிந்துகொள்ளார்;
[8]என்றைக்கும் கோபங்கொண்டிரார்.
10 அவர் நம்முடைய பாவங்களுக்குத் தக்கதாக
நமக்குச் செய்யாமலும், [9]நம்முடைய அக்கிர
மங்களுக்குத் தக்கதாக நமக்குச் சரிக்கட்டா
மலும் இருக்கிறார்.
11 பூமிக்கு வானம் எவ்வளவு உயரமாயிருக்கி
றதோ, [10]அவருக்குப் பயப்படுகிறவர்கள்மேல்
அவருடைய கிருபையும் அவ்வளவு பெரிதா
யிருக்கிறது
12 மேற்குக்கும் கிழக்குக்கும் எவ்வளவு தூர
மோ, [11]அவ்வளவு தூரமாய் அவர் நம்முடைய
பாவங்களை நம்மைவிட்டு விலக்கினார்.
13 தகப்பன் தன் பிள்ளைகளுக்கு இரங்குகி
றதுபோல, [12]கர்த்தர் தமக்குப் பயந்தவர்களுக்கு
இரங்குகிறார்.
14 நம்முடைய உருவம் இன்னதென்று அவர்
அறிவார்; [13]நாம் மண்ணென்று நினைவுகூரு
கிறார்.
15 மனுஷனுடைய நாட்கள் புல்லுக்கு ஒப்
பாயிருக்கிறது; [14]வெளியின் புஷ்பத்தைப்
போல் பூக்கிறான்.
16 காற்று அதின்மேல் வீசினவுடனே அது
இல்லாமற்போயிற்று; [15]அது இருந்த இடமும்
இனி அதை அறியாது.

கர்த்தருடைய கிருபையோ அவருக்குப் 17
பயந்தவர்கள் மேலும், அவருடைய நீதி அவர்
கள் பிள்ளைகளுடைய பிள்ளைகள்மேலும் அநா
தியாய் என்றென்றைக்கும் உள்ளது.
அவருடைய உடன்படிக்கையைக் கைக் 18
கொண்டு [16]அவருடைய கட்டளைகளின்படி
செய்ய நினைக்கிறவர்கள் மேலேயே உள்ளது.
கர்த்தர் வானங்களில் தமது சிங்காசனத் 19
தை ஸ்தாபித்திருக்கிறார்; [17]அவருடைய ராஜ
ரிகம் சர்வத்தையும் ஆளுகிறது.
கர்த்தருடைய வார்த்தையைக் கேட்டு, அவ 20
ருடைய வசனத்தின்படி செய்கிற [18]பருத்த
சவுரியவான்களாகிய அவருடைய தூதர்களே,
அவரை ஸ்தோத்திரியுங்கள்.
கர்த்தருக்குப் பிரியமானதைச் செய்து, 21
[19]அவர் பணிவிடைக்காரராயிருக்கிற அவரு
டைய சர்வ சேனைகளே, அவரை ஸ்தோத்திரி
யுங்கள்.
கர்த்தர் ஆளுகிற எவ்விடங்களிலுமுள்ள 22
அவருடைய சகல கிரியைகளே, [20]அவரை
ஸ்தோத்திரியுங்கள்; என் ஆத்துமாவே, கர்த்
தரை ஸ்தோத்திரி.

என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத் 104
திரி; என் தேவனாகிய கர்த்தாவே, நீர்
மிகவும் பெரியவராயிருக்கிறீர்; [21]மகிமையை
யும் மகத்துவத்தையும் அணிந்துகொண்டிருக்
கிறீர்.
ஒளியை வஸ்திரமாகத் தரித்து; [22]வானங் 2
களைத்திரையைப்போல் [23]விரித்திருக்கிறீர்.
தமது மேல்வீடுகளைத் தண்ணீர்களால் மச் 3
சுப்பாவி, [24]மேகங்களைத் தமது இரதமாக்கி,
காற்றினுடைய செட்டைகளின்மேல் செல்
லுகிறார்.
தம்முடைய தூதர்களைக் காற்றுகளாகவும், 4
[25]தம்முடைய ஊழியக்காரரை அக்கினி
ஜுவாலைகளாகவும் செய்கிறார்.
பூமி ஒருபோதும் நிலைபெயராதபடி அதின் 5
ஆதாரங்கள்மேல் அதை ஸ்தாபித்தார்.
அதை வஸ்திரத்தினால் மூடுவதுபோல ஆழத் 6
தினால் மூடினீர்; [26]பர்வதங்களின்மேல் தண்
ணீர்கள் நின்றது.
அவைகள் உமது கண்டிதத்தால் விலகி 7
யோடி, [27]உமது குமுறலின் சத்தத்தால் விரைந்
துபோயிற்று.
அவைகள் மலைகளில் ஏறி, பள்ளத்தாக் 8
குகளில் இறங்கி, நீர் அவைகளுக்கு ஏற்படுத்
தின இடத்தில் சென்றது.
அவைகள் திரும்பவும் வந்து பூமியை மூடிக் 9
கொள்ளாதபடி [28]கடவாதிருக்கும் எல்லையை
அவைகளுக்கு ஏற்படுத்தினீர்.
அவர் பள்ளத்தாக்குகளில் நீரூற்றுகளை வர 10
விடுகிறார்; அவைகள் மலைகள் நடுவே ஓடு
கிறது.
அவைகள் வெளியின் ஜீவன்களுக்கெல் 11
லாம் தண்ணீர்கொடுக்கும்; அங்கே காட்டுக்
கழுதைகள் தங்கள் தாகத்தைத் தீர்த்துக்கொள்
ளும்.

1 ஏசா. 34. 4. ரோ. 8. 20. 2 பே. 2. 7–12
2 மல். 3. 6. எபி. 13. 8. யாக். 1. 17
3 69. 36
4 மத். 9. 2-6. எபே. 1. 7
5 யாத். 15. 26. எரே. 17. 14
6 ஏசா. 40. 31
7 யாத். 34. 6, 7
8 ஏசா. 57. 16. மீகா. 7. 18, 19
9 எஸ்றா. 9. 13
10 எபே. 3. 18
11 எரே. 50. 20
12 மல். 3. 17
13 ஆதி. 3. 19. பிர. 12. 7
14 ஏசா. 40. 6, 8. யாக். 1. 10, 11
15 யோபு 20. 9
16 யாத். 20. 6. உபா. 7. 9
17 11. 4; 95. 5. தானி. 4. 34, 35
18 யோவேல். 2. 11
19 தானி. 7. 9, 10. எபி. 1. 14
20 145. 10
21 வெளி. 1. 13. ழ
22 தானி. 7. 9. 1 தீமோ. 6. 16
23 ஏசா. 40. 22
24 ஏசா. 19. 1. ஆமோ. 9. 6
25 2 இரா. 2. 11: 6. 17. எபி. 1. 7
26 ஆதி. 7. 19
27 ஆதி. 8. 1–5
28 யோபு 38 10, 11

12 அவைகளின் ஓரமாய் ஆகாயத்துப் பறவை
கள் சஞ்சரித்து, கிளைகள்மேலிருந்து பாடும்.
13 தம்முடைய மேல்வீடுகளிலிருந்து பர்வதங்
களுக்குத்தண்ணீர் இறைக்கிறார்; உமது கிரி
யைகளின் பலனாலே பூமி திருப்தியாயிருக்
கிறது.
14 பூமியிலிருந்து ஆகாரம் உண்டாகும்படி,
அவர் மிருகங்களுக்குப் புல்லையும், [1]மனுஷ
ருக்கு உபயோகமான பயிர்வகைகளையும்
முளைப்பிக்கிறார்.
15 மனுஷனுடைய இருதயத்தை மகிழ்ச்சியாக்
கும் திராட்சரசத்தையும், [2]அவனுக்கு முகக்
களையை உண்டுபண்ணும் எண்ணெயையும்,
மனுஷனுடைய இருதயத்தை ஆதரிக்கும் ஆகா
ரத்தையும் விளைவிக்கிறார்.
16 கர்த்தருடைய விருட்சங்களும், அவர் நாட்
டின லீபனோனின் கேதுருக்களும் சாரத்தி
னால் நிறைந்திருக்கும்.
17 அங்கே குருவிகள் கூடுகட்டும்; தேவதாரு
விருட்சங்கள் கொக்குகளின் குடியிருப்பு.
18 உயர்ந்தபர்வதங்கள்வரையாடுகளுக்கும்,கன்
மலைகள் குழிமுசல்களுக்கும் அடைக்கலம்.
19 சந்திரனைக் காலக்குறிப்புகளுக்காகப்
படைத்தார்; [3]சூரியன் தன் அஸ்தமனத்தை
அறியும்.
20 நீர் இருளைக் கட்டளையிடுகிறீர், இராக்கால
மாகும்; அதிலே சகல காட்டுஜீவன்களும் நட
மாடும்.
21 பாலசிங்கங்கள் [4]இரைக்காக கெர்ச்சித்து,
தேவனால் தங்களுக்கு ஆகாரம் கிடைக்கும்
படித் தேடும்.
22 சூரியன் உதிக்கையில் அவைகள் ஒதுங்கி,
தங்கள் தாபரங்களில் படுத்துக்கொள்ளும்.
23 அப்பொழுது மனுஷன் சாயங்காலமட்டும்
தன் வேலைக்கும், [5]தன் பண்ணைக்கும் புறப்
படுகிறான்.
24 கர்த்தாவே, உமது கிரியைகள் எவ்வளவு
திரளாயிருக்கிறது! அவைகளை யெல்லாம்
ஞானமாய்ப் படைத்தீர்; [6]பூமி உம்முடைய
பொருள்களினால் நிறைந்திருக்கிறது.
25 பெரிதும் விஸ்தாரமுமான இந்தச் சமுத்
திரமும் அப்படியே நிறைந்திருக்கிறது; அ
திலே சஞ்சரிக்கும் சிறியவைகளும் பெரிய
வைகளுமான எண்ணிறந்த ஜீவன்கள் உண்டு.
26 அதிலே கப்பல்கள் ஓடும்; அதிலே விளை
யாடும்படி நீர் உண்டாக்கின *தீமிங்கிலங்
களும் உண்டு.
27 ஏற்ற வேளையில் ஆகாரத்தைத் தருவீர்
என்று அவைகளெல்லாம் உம்மை நோக்கிக்
காத்திருக்கும்.
28 நீர் கொடுக்க, அவைகள் வாங்கிக்கொள்
ளும்; [7]நீர் உம்முடைய கையைத் திறக்க,
அவைகள் நன்மையால் திருப்தியாகும்.
29 நீர் உமது முகத்தை மறைக்க, திகைக்கும்;
[8]நீர் அவைகளின் சுவாசத்தை வாங்கிக்
கொள்ள, அவைகள் மாண்டு, தங்கள் மண்
ணுக்குத் திரும்பும்.

[1] யோபு 28. 5
[2] நீதி. 31. 6, 7
[3] ஆதி. 1. 14
[4] யோபு 38. 39
[5] ஆதி. 3. 19
[6] நீதி. 3. 19
* லிவியாதான். யோபு 41. 1. ஷ
[7] 145. 16
[8] யோபு 34. 14, 15. பிர. 12. 7
[9] ஏசா 32. 14, 15. எசே. 37. 9
[10] ஆதி. 1. 31. ஏசா. 62. 5
[11] ஆப. 3. 10. யாத். 19. 18
[12] நீதி. 2. 22
[13] 1 நாளா. 16. 8-22. ஏசா. 12. 4
[14] 27. 8. ஆமோ. 5. 4, 6
[15] ஏசா. 26. 9
[16] ஆதி. 17. 2: 26. 3. லூ. 1. 72. எபி. 6. 17
[17] ஆதி. 28. 13 15
[18] உபா. 7. 7

நீர் உம்முடைய ஆவியை அனுப்பும்போது, 30
[9]அவைகள் சிருஷ்டிக்கப்படும்; நீர் பூமியின்
ரூபத்தையும் புதிதாக்குகிறீர்.
கர்த்தருடைய மகிமை என்றென்றைக்கும் 31
விளங்கும்; [10]கர்த்தர் தம்முடைய கிரியைக
ளிலே மகிழுவார்.
அவர் பூமியை நோக்கிப்பார்க்க, அது அதி 32
ரும்; [11]அவர் பர்வதங்களைத் தொட, அவை
கள் புகையும்.
நான் உயிரோடிருக்குமட்டும் என் கர்த்த 33
ரைப் பாடுவேன்; நான் உள்ளளவும் என்
தேவனைக் கீர்த்தனம் பண்ணுவேன்.
நான் அவரைத் தியானிக்கும் தியானம் 34
இனிதாயிருக்கும்; நான் கர்த்தருக்குள் மகிழு
வேன்.
பாவிகள் பூமியிலிருந்து நிர்மூலமாகி, 35
[12]துன்மார்க்கர் இனி இராமற் போவார்கள்.
என் ஆத்துமாவே, கர்த்தரை ஸ்தோத்திரி,
அல்லேலூயா.

கர்த்தரைத் துதித்து, [13]அவருடைய நா **105**
மத்தைப் பிரஸ்தாபமாக்குங்கள்; அவரு
டைய செய்கைகளை ஜனங்களுக்குள்ளே பிர
சித்தப்படுத்துங்கள்.
அவரைப் பாடி, அவரைக் கீர்த்தனம் பண் 2
ணுங்கள்; அவருடைய அதிசயங்களையெல்
லாம் தியானித்துப் பேசுங்கள்.
அவருடைய பரிசுத்த நாமத்தைக்குறித்து 3
மேன்மைபாராட்டுங்கள்; கர்த்தரைத் தேடுகிற
வர்களின் இருதயம் மகிழ்வதாக.
கர்த்தரையும் அவர் வல்லமையையும்நாடுங் 4
கள்; [14]அவர் சமூகத்தை நித்தமும் தேடுங்கள்.
அவருடைய தாசனாகிய ஆபிரகாமின் சந் 5
ததியே! அவரால் தெரிந்துகொள்ளப்பட்ட
வர்களாகிய யாக்கோபின் புத்திரரே!
அவர் செய்த அதிசயங்களையும், அவரு 6
டைய அற்புதங்களையும், அவர் வாக்கின் நியா
யத்தீர்ப்புகளையும் நினைவுகூருங்கள்.
அவரே நம்முடைய தேவனாகிய கர்த்தர், 7
[15]அவருடைய நியாயத்தீர்ப்புகள் பூமி யெங்
கும் விளங்கும்.
ஆயிரந்தலைமுறைக்கென்று அவர் கட்டளை 8
யிட்ட வாக்கையும், [16]ஆபிரகாமோடே அவர்
பண்ணின உடன்படிக்கையையும்,
அவர் ஈசாக்குக்கு இட்ட ஆணையையும் 9
என்றென்றைக்கும் நினைத்திருக்கிறார்.
அதை யாக்கோபுக்குப் பிரமாணமாகவும், 10
[17]இஸ்ரவேலுக்கு நித்திய உடன்படிக்கையாக
வும்.
உறுதிப்படுத்தி: உங்கள் சுதந்தர பாகமான 11
கானான் தேசத்தை உனக்குத் தருவேன்
என்றார்.
அக்காலத்தில் அவர்கள் கொஞ்சத் தொ 12
கைக் குட்பட்ட சொற்ப ஜனங்களும் [18]பர
தேசிகளுமாயிருந்தார்கள்.
அவர்கள் ஒரு ஜனத்தை விட்டு மறுஜனத் 13
தண்டைக்கும், ஒரு ராஜ்யத்தைவிட்டு மறு
தேசத்தாரண்டைக்கும் போனார்கள்.

14 அவர்களை ஒடுக்கும்படி ஒருவருக்கும்
இடங்கொடாமல், அவர்கள் நிமித்தம் ராஜாக்
களைக் கடிந்துகொண்டு:
15 நான் அபிஷேகம் பண்ணினவர்களை நீங்
கள் தொடாமலும் [1]என்னுடைய தீர்க்கதரிசி
களுக்குத் தீங்கு செய்யாமலும் இருங்கள்
என்றார்.
16 அவர் தேசத்திலே பஞ்சத்தை வருவித்து,
[2]ஆகாரமென்னும் ஆதாரவுகோலை முற்றிலும்
முறித்தார்.
17 அவர்களுக்கு முன்னாலே ஒரு புருஷனை
அனுப்பினார்; [3]யோசேப்பு சிறையாக விற்
கப்பட்டான்.
18 அவன் கால்களை விலங்குபோட்டு ஒடுக்கி
னார்கள்; அவன் பிராணன் இரும்பில் அடை
பட்டிருந்தது.
19 கர்த்தர் சொன்ன வார்த்தை நிறைவேறு
மளவும் [4]அவருடைய வசனம் அவனைப் புட
மிட்டது.
20 ராஜா ஆள் அனுப்பி, [5]அவனைக் கட்ட
விழ்க்கச் சொன்னான்; ஜனங்களின் அதிபதி
அவனை விடுதலைபண்ணினான்.
21 தன் பிரபுக்களை அவன் மனதின்படி கட்ட
வும், தன் மூப்பர்களை ஞானிகளாக்கவும்,
22 அவனைத் தன் வீட்டுக்கு ஆண்டவனும்,
தன் ஆஸ்திக்கெல்லாம் அதிபதியுமாக்கினான்.
23 அப்பொழுது இஸ்ரவேல் எகிப்திற்கு வந்
தான்; [6]யாக்கோபு காமின் தேசத்திலே பர
தேசியாயிருந்தான்.
24 அவர் தம்முடைய ஜனங்களை மிகவும் பலு
கப்பண்ணி, [7]அவர்களுடைய சத்துருக்களைப்
பார்க்கிலும் அவர்களைப் பலவான்களாக்கினார்.
25 தம்முடைய ஜனங்களைப் பகைக்கவும், தம்
முடைய ஊழியக்காரரை வஞ்சனையாய் நடத்
தவும், அவர்களுடைய இருதயத்தை மாற்
றினார்.
26 தம்முடைய தாசனாகிய மோசேயையும்
[8]தாம் தெரிந்துகொண்ட ஆரோனையும் அனுப்
பினார்.
27 இவர்கள் அவர்களுக்குள் அவருடைய
அடையாளங்களையும், [9]காமின் தேசத்திலே
அற்புதங்களையும் செய்தார்கள்.
28 அவர் இருளை அனுப்பி, அந்தகாரத்தை
உண்டாக்கினார்; [10]அவருடைய வார்த்தைகளை
எதிர்ப்பாரில்லை.
29 அவர்களுடைய தண்ணீர்களை இரத்தமாக
மாற்றி, [11]அவர்களுடைய மச்சங்களைச் சாகப்
பண்ணினார்.
30 அவர்களுடைய தேசம் தவளைகளைத் திர
ளாய்ப் பிறப்பித்தது; [12]அவர்களுடைய ராஜாக்
களின் அறைவீடுகளிலும் அவைகள் வந்தது.
31 அவர் கட்டளையிட, [13]அவர்களுடைய எல்
லைகளிலெங்கும் வண்டுகளும் பேன்களும்
வந்தது.
32 அவர்களுடைய மழைகளைக் கல்மழை
யாக்கி, [14]அவர்களுடைய தேசத்திலே ஜுவா
லிக்கிற அக்கினியை வரப்பண்ணினார்.

1 ஆதி. 20. 7
2 ஆதி. 41. 54. ஏசா 3. 1
3 ஆதி. 45. 5. 39. 1, 20
4 ஆதி. 41. 25
5 ஆதி. 41. 14, 40
6 ஆதி. 46. 6, 7
7 யாத். 1. 7; ஞ
8 யாத். 4. 12. ஞ
9 யாத். 7–12. அதி
10 யாத். 10. 21-23
11 யாத். 7. 20, 21
12 யாத். 8. 5, 6
13 யாத். 8. 17, 24
14 யாத். 9. 23-25
15 யாத். 10. 12-14
16 யாத். 12. 29
17 யாத். 12. 35
18 யாத். 12. 33
19 யாத் 13. 21. நெகே. 9. 12
20 78. 18
21 யாத். 17. 6. எண். 20. 11. 1 கொ. 10. 4
22 ஆதி. 15. 14
23 உபா. 4. 1, 40
24 யோசு. 21. 43
25 1 நாளா. 16. 34
26 40. 5
27 15. 2. கலா. 6. 9
28 எபே. 1. 4
29 ஏசா. 35. 10. யோ. 16. 22
30 எபே. 1. 18
31 119. 132

அவர்களுடைய திராட்சச்செடிகளையும் அத் 33
திமரங்களையும் அழித்து, அவர்களுடைய எல்
லைகளிலுள்ள மரங்களையும் முறித்தார்.
அவர் கட்டளையிட, [15]எண்ணிமுடியாத 34
வெட்டுக்கிளிகளும் பச்சைப்புழுக்களும் வந்து,
அவர்களுடைய தேசத்திலுள்ள சகல பூண் 35
டுகளையும் அரித்து, அவர்களுடைய நிலத்தின்
கனியைத் தின்றுபோட்டது.
அவர்களுடைய தேசத்திலே [16]தலைச்சன்கள் 36
அனைத்தையும், அவர்களுடைய பெலனில்
முதற்பெலனான யாவரையும் சங்கரித்தார்.
அப்பொழுது அவர்களை [17]வெள்ளியோடும் 37
பொன்னோடும் புறப்படப் பண்ணினார்; அவர்
கள் கோத்திரங்களில் பலவீனப்பட்டவன்
ஒருவனும் இருந்ததில்லை.
எகிப்தியர் அவர்களுக்குப் பயந்ததினால், 38
[18]அவர்கள் புறப்பட்டபோது மகிழ்ந்தார்கள்.
அவர் [19]மேகத்தை மறைவுக்காக விரித்து, 39
இரவை வெளிச்சமாக்குகிறதற்காக அக்கினி
யையும் தந்தார்.
கேட்டார்கள், [20]அவர் காடைகளை வரப் 40
பண்ணினார்; வான அப்பத்தினாலும் அவர்
களைத் திருப்தியாக்கினார்.
கன்மலையைத் திறந்தார், [21]தண்ணீர்கள் 41
புறப்பட்டு, வறண்டவெளிகளில் ஆறாய்
ஓடிற்று.
அவர் தம்முடைய பரிசுத்த வாக்குத்தத்தத் 42
தையும், [22]தம்முடைய தாசனாகிய ஆபிரகா
மையும் நினைத்து,
தம்முடைய ஜனத்தைக் களிப்போடும், 43
தாம் தெரிந்துகொண்டவர்களைக் கெம்பீர சத்
தத்தோடும் புறப்படப்பண்ணி,
தமது கட்டளைகளைக் காத்து நடக்கும்படிக் 44
கும், [23]தமது நியாயப்பிரமாணங்களைக் கைக்
கொள்ளும்படிக்கும்,
அவர்களுக்குப் புறஜாதிகளுடைய தேசங் 45
களைக் கொடுத்தார்; [24]அந்நிய ஜனங்களுடைய
பிரயாசத்தின் பலனைச் சுதந்தரித்துக் கொண்
டார்கள். அல்லேலூயா.

அல்லேலூயா, [25]கர்த்தரைத் துதியுங்கள்; **106**
அவர் நல்லவர், அவர் கிருபை என்றுமுள்
ளது.
கர்த்தருடைய வல்லமையான செய்கை 2
களைச் சொல்லி, [26]அவருடைய துதியை
யெல்லாம் பிரஸ்தாபப்படுத்தத்தக்கவன் யார்?
நியாயத்தைக் கைக்கொள்ளுகிறவர்களும் 3
[27]எக்காலத்திலும் நீதியைச் செய்கிறவர்களும்
பாக்கியவான்கள்.
கர்த்தாவே, நீர் தெரிந்துகொண்டவர்களின் 4
[28]நன்மையை நான் கண்டு, [29]உம்முடைய
ஜாதியின் மகிழ்ச்சியால் மகிழ்ந்து, [30]உம்மு
டைய சுதந்தரத்தோடே மேன்மை பாராட்டும்
படிக்கு,
உம்முடைய ஜனங்களுக்கு நீர் பாராட்டும் 5
கிருபையின்படி என்னை நினைத்து, [31]உம்மு
டைய ரட்சிப்பினால் என்னைச் சந்தித்தருளும்.

6 எங்கள் பிதாக்களோடுங்கூட நாங்களும் பா
வஞ்செய்து, [1]அக்கிரமம் நடப்பித்து, ஆகாமி
யம் பண்ணினோம்.
7 எங்கள் பிதாக்கள் எகிப்திலே உம்முடைய
அதிசயங்களை உணராமலும், உம்முடைய
கிருபைகளின் திரட்சியை நினையாமலும்
போய், [2]சிவந்தசமுத்திர ஓரத்திலே கலகம்
பண்ணினார்கள்.
8 ஆனாலும் அவர் தமது வல்லமையை வெ
ளிப்படுத்தும்படி, தம்முடைய நாமத்தினிமித்
தம் [3]அவர்களை ரட்சித்தார்.
9 அவர் சிவந்த சமுத்திரத்தை அதட்டினார்,
அது வற்றிப்போயிற்று; [4]வெட்டாந்தரையில்
நடக்கிறதுபோல அவர்களை ஆழங்களில்
நடந்துபோகப்பண்ணினார்.
10 பகைஞன் கைக்கு அவர்களை விலக்கி ரட்
சித்து, சத்துருவின் கைக்கு அவர்களை விலக்கி
மீட்டார்.
11 அவர்கள் சத்துருக்களைத் தண்ணீர்கள்
மூடிக்கொண்டது; [5]அவர்களில் ஒருவனும்
மீந்திருக்கவில்லை.
12 அப்பொழுது அவர்கள் அவருடைய வார்த்
தைகளை விசுவாசித்து, [6]அவருடைய துதி
யைப் பாடினார்கள்.
13 ஆனாலும் சீக்கிரமாய் அவருடைய கிரி
யைகளை மறந்தார்கள்; [7]அவருடைய ஆலோ
சனைக்கு அவர்கள் காத்திராமல்,
14 வனாந்தரத்திலே இச்சையுள்ளவர்களாகி,
[8]அவாந்தரவெளியிலே தேவனைப் பரீட்சை
பார்த்தார்கள்.
15 அப்பொழுது அவர்கள் கேட்டதை அவர்க
ளுக்குக் கொடுத்தார், [9]அவர்கள் ஆத்துமாக்
களிலோ இளைப்பை அனுப்பினார்.
16 பாளயத்தில் அவர்கள் மோசேயின்மேலும்,
[10]கர்த்தருடைய பரிசுத்தனாகிய ஆரோனின்
மேலும் பொறாமை கொண்டார்கள்.
17 பூமி பிளந்து தாத்தானை விழுங்கி, [11]அபிரா
மின் கூட்டத்தை மூடிப்போட்டது.
18 அவர்கள் கூட்டத்தில் அக்கினி பற்றி
யெரிந்தது; [12]அக்கினிஜுவாலை துன்மார்க்
கரை எரித்துப்போட்டது.
19 அவர்கள் ஓரேபிலே ஒரு கன்றுக்குட்டியை
யுண்டாக்கி, வார்ப்பிக்கப்பட்ட விக்கிரகத்தை
நமஸ்கரித்தார்கள்.
20 தங்கள் *மகிமையைப் புல்லைத்தின்கிற
மாட்டின் சாயலாக மாற்றினார்கள்.
21 எகிப்திலேபெரிய கிரியைகளையும், காமின்
தேசத்திலே அதிசயங்களையும், சிவந்த சமுத்
திரத்தண்டையிலே பயங்கரமானவைகளையும்
செய்தவராகிய,
22 தங்கள் ரட்சகரான தேவனை மறந்தார்கள்.
23 ஆகையால், அவர்களை நாசம்பண்ணுவேன்
என்றார்; அப்பொழுது அவரால் தெரிந்து
கொள்ளப்பட்ட மோசே, அவர்களை அவர்
அழிக்காதபடிக்கு, அவருடைய உக்கிரத்தை
ஆற்றும்பொருட்டு, [13]அவருக்கு முன்பாகத்
திறப்பின் வாயிலே நின்றான்.

அவருடைய வார்த்தையை விசுவாசியா 24
மல், [14]இச்சிக்கப்படத்தக்க தேசத்தை அசட்
டை பண்ணினார்கள்.
கர்த்தருடைய சத்தத்திற்குச் செவிகொடா 25
மல், தங்கள் கூடாரங்களில் முறுமுறுத்தார்கள்.
அப்பொழுது அவர்கள் வனாந்தரத்திலே 26
மடியவும், அவர்கள் சந்ததி ஜாதிகளுக்குள்ளே
அழியவும்,
அவர்கள் பற்பல தேசங்களிலே சித 27
றடிக்கப்படவும், அவர்களுக்கு விரோதமா
கத் தம்முடைய கையை எடுத்தார்.
அவர்கள் பாகால்பேயோரைப் [15]பற்றிக் 28
கொண்டு, ஜீவனில்லாதவைகளுக்கு இட்ட
பலிகளைப் புசித்து,
தங்கள் கிரியைகளினால் அவருக்குக் கோ 29
பம் மூட்டினார்கள்; ஆகையால் வாதை அவர்
களுக்குள் புகுந்தது.
அப்பொழுது பினெகாஸ் எழுந்து நின்று 30
நியாயஞ்செய்தான்; அதினால் வாதை நிறுத்
தப்பட்டது.
அது தலைமுறை தலைமுறையாக என்றைக் 31
கும் அவனுக்கு நீதியாக எண்ணப்பட்டது.
மேரிபாவின் தண்ணீர்களிடத்திலும் [16]அவ 32
ருக்குக் கடுங்கோபம் மூட்டினார்கள்; அவர்கள்
நிமித்தம் மோசேக்கும் பொல்லாப்பு வந்தது.
அவர்கள் அவன் ஆவியை விசனப்படுத் 33
தினதினாலே, தன் உதடுகளினால் பதறிப்
பேசினான்.
கர்த்தர் தங்களுக்குச் சொன்னபடி, [17]அவர் 34
கள் அந்த ஜனங்களை அழிக்கவில்லை.
ஜாதிகளுடனே கலந்து, அவர்கள் கிரியை 35
களைக் கற்று;
அவர்களுடைய விக்கிரகங்களைச் சேவித் 36
தார்கள்; [18]அவைகள் அவர்களுக்குக் கண்ணி
யாயிற்று.
அவர்கள் தங்கள் குமாரரையும் [19]தங்கள் 37
குமாரத்திகளையும் பிசாசுகளுக்குப் பலியிட்
டார்கள்.
அவர்கள் கானான்தேசத்து விக்கிரகங்களுக் 38
குப் பலியிட்டு, தங்கள் குமாரர் குமாரத்திக
ளுடைய குற்றமில்லாத ரத்தத்தைச் சிந்தினார்
கள்; [20]தேசம் ரத்தத்தால் தீட்டுப்பட்டது.
அவர்கள் தங்கள் கிரியைகளினால் அசுத்த 39
மாகி, [21]தங்கள் செய்கைகளினால் சோரம்போ
னார்கள்.
அதினால் கர்த்தருடைய கோபம் தமது ஜனத் 40
தின்மேல் மூண்டது; [22]அவர் தமது சுதந்த
ரத்தை அருவருத்தார்.
அவர்களை ஜாதிகளுடைய கையில் ஒப்புக் 41
கொடுத்தார்; அவர்களுடைய பகைஞர் அவர்
களை ஆண்டார்கள்.
அவர்களுடைய சத்துருக்கள் அவர்களை 42
ஒடுக்கினார்கள்; அவர்களுடைய கையின்கீழ்த்
தாழ்த்தப்பட்டார்கள்.
அநேகந்தரம் அவர்களை விடுவித்தார்; அவர் 43
களோ தங்கள் யோசனையினால் அவருக்கு
விரோதமாய்க் கலகம்பண்ணி, தங்களுடைய

[1] தானி. 9. 5
[2] யாத். 14 11, 12
[3] யாத். 9. 16
[4] யாத். 14. 21. ழ
[5] யாத். 14. 27
[6] யாத். 14. 31
[7] யாத். 15–17. அதி.
[8] எண். 11. 4, 33
[9] ஏசா. 10. 16
[10] எண். 16.1. ழ
[11] எண். 16. 31, 32
[12] யாத். 9. 23–25
* ஜீவனுள்ள தேவனை. எரே. 2. 11
[13] எசே. 20. 13
[14] உபா. 8. 7
[15] எண். 25. 2. ழ
[16] எண். 20. 3. ழ
[17] யோசு. 1. 21. ழ
[18] நியா. 2. 3. ழ
[19] எசே. 16. 20
[20] எண். 35. 33
[21] எசே. 20. 18
[22] நியா. 2. 14. ழ. செக. 9. 27. ழ. புல. 2. 7

அக்கிரமத்தினால் சிறுமைப் படுத்தப்பட்டார்
கள்.
44 அவர்கள் கூப்பிடுதலை அவர் கேட்கும்
போதோ, [1]அவர்களுக்கு உண்டான இடுக்
கத்தை அவர் கண்ணோக்கி,
45 அவர்களுக்காகத் தமது உடன்படிக்கையை
நினைத்து, தமது மிகுந்த கிருபையின்படி
மனஸ்தாபப்பட்டு,
46 அவர்களைச் சிறைபிடித்த யாவரும் [2]அவர்க
ளுக்கு இரங்கும்படி செய்தார்.
47 எங்கள் தேவனாகிய கர்த்தாவே, நாங்கள்
உமது பரிசுத்த நாமத்தைப் போற்றி, உம்மைத்
துதிக்கிறதில் மேன்மை பாராட்டும்படி எங
களை ரட்சித்து, [3]எங்களை ஜாதிகளிலிருந்து
சேர்த்தருளும்.
48 இஸ்ரவேலின் தேவனாகிய கர்த்தர் அநாதி
யாய் என்றென்றைக்கும் [4]ஸ்தோத்திரிக்கப்
படத்தக்கவர். ஜனங்களெல்லாரும்: ஆமென்,
அல்லேலூயா, என்பார்களாக.

**107** கர்த்தரைத் துதியுங்கள்; அவர் நல்ல
வர், [5]அவர் கிருபை என்றுமுள்ளது
2 கர்த்தரால் சத்துருவின் கைக்கு நீங்கலாக்கி
[6]மீட்கப்பட்டு,
3 கிழக்கிலும் மேற்கிலும் வடக்கிலும் தெற்
கிலுமுள்ள பல தேசங்களிலுமிருந்துசேர்க்கப்
பட்டவர்கள், [7]அப்படிச் சொல்லக்கடவர்கள்
4 அவர்கள் தாபரிக்கும் ஊரைக் காணாமல்,
[8]வனாந்தரத்திலே அவாந்தர வழியாய்,
5 பசியாகவும், தாகமாகவும், ஆத்துமா தொய்ந்
ததாகவும் அலைந்து திரிந்தார்கள்.
6 தங்கள் ஆபத்திலே கர்த்தரை நோக்கிக் கூப்
பிட்டார்கள், [9]அவர்கள் இக்கட்டுகளிலிருந்து
அவர்களை விடுவித்தார்.
7 தாபரிக்கும் ஊருக்குப்போய்ச் சேர, அவர்
களைச் செவ்வையான [10]வழியிலே நடத்தினார்
8 தவனமுள்ள ஆத்துமாவைக் கர்த்தர் திருப்
தியாக்கி, [11]பசியுள்ள ஆத்துமாவை நன்மையி
னால் நிரப்புகிறாரென்று,
9 அவருடைய கிருபையினிமித்தமும், மனு
புத்திரருக்கு அவர் செய்கிற அதிசயங்களி
னிமித்தமும் அவரைத் துதிப்பார்களாக
10 தேவனுடைய வார்த்தைகளுக்கு விரோத
மாய்க் கலகம்பண்ணி, [12]உன்னதமானவரு
டைய ஆலோசனையை அசட்டைபண்ணின
வர்கள்,
11 அந்தகாரத்திலும் மரண இருளிலும் வைக்
கப்பட்டிருந்து, [13]ஒடுக்கத்திலும் இரும்பிலும்
கட்டுண்டுகிடந்தார்கள்.
12 அவர்களுடைய இருதயத்தை அவர் வருத்
தத்தால் தாழ்த்தினார்; [14]சகாயரில்லாமல் விழுந்
துபோனார்கள்.
13 தங்கள் ஆபத்திலே கர்த்தரை நோக்கிக்
கூப்பிட்டார்கள்; அவர்கள் இக்கட்டுகளிலி
ருந்து அவர்களை நீங்கலாக்கி ரட்சித்தார்.
14 அந்தகாரத்திலும் மரண இருளிலுமிருந்து
அவர்களை வெளிப்படப்பண்ணி, [15]அவர்கள்
கட்டுகளை அறுத்தார்.

கர்த்தர் வெண்கலக் கதவுகளை உடைத்து, 15
[16]இருப்புத் தாழ்ப்பாள்களை முறித்தாரென்று,
அவருடைய கிருபையினிமித்தமும், மனு 16
புத்திரருக்கு அவர் செய்கிற அதிசயங்களி
னிமித்தமும் அவரைத் துதிப்பார்களாக.
நிர்மூடர் தங்கள் பாதகமார்க்கத்தாலும் தங் 17
கள் அக்கிரமங்களாலும் [17]நோய்கொண்டு ஒடுங்
கிப்போகிறார்கள்.
அவர்கள் ஆத்துமா சகல போஜனத்தையும் 18
அரோசிக்கிறது, அவர்கள் மரணவாசல்கள் பரி
யந்தம் சமீபிக்கிறார்கள்.
தங்கள் ஆபத்திலே கர்த்தரை நோக்கிக் கூப் 19
பிடுகிறார்கள்; [18]அவர்கள் இக்கட்டுகளுக்கு
அவர்களை நீங்கலாக்கி ரட்சிக்கிறார்.
அவர் தமது வசனத்தை அனுப்பி அவர்க 20
ளைக் குணமாக்கி, [19]அவர்களை அழிவுக்குத்
தப்புவிக்கிறார்.
அவர்கள் கர்த்தரை அவருடைய கிருபையி 21
னிமித்தமும், மனுபுத்திரருக்கு அவர் செய்கிற
அதிசயங்களினிமித்தமும் துதித்து,
ஸ்தோத்திர பலிகளைச் செலுத்தி, [20]அவரு 22
டைய கிரியைகளை ஆனந்த சத்தத்தோடே
விவரிப்பார்களாக.
கப்பலேறி, கடல்யாத்திரைபண்ணி, திர 23
ளான தண்ணீர்களிலே தொழில் செய்கிறார்
களே,
அவர்கள் கர்த்தருடைய கிரியைகளையும், 24
ஆழத்திலே அவருடைய அதிசயங்களையும்
காண்கிறார்கள்.
அவர் கட்டளையிட பெருங்காற்று எழும்பி, 25
[21]அதின் அலைகளைக் கொந்தளிக்கப்பண்
ணும்.
அவர்கள் ஆகாயத்தில் ஏறி, ஆழங்களில் 26
இறங்குகிறார்கள், [22]அவர்கள் ஆத்துமா கிலே
சத்தினால் கரைந்துபோகிறது.
வெறித்தவனைப்போல் அலைந்து தடுமாறுகி 27
றார்கள்; அவர்களுடைய ஞானமெல்லாம்
முழுகிப்போகிறது.
அப்பொழுது தங்கள் ஆபத்திலே அவர்கள் 28
கர்த்தரை நோக்கிக் கூப்பிடுகிறார்கள், அவர்
கள் இக்கட்டுகளுக்கு அவர்களை நீங்கலாக்கி
விடுவிக்கிறார்.
கொந்தளிப்பை அமர்த்துகிறார், [23]அதின் 29
அலைகள் அடங்குகின்றது.
அமைதலுண்டானதி னிமித்தம் அவர்கள் 30
சந்தோஷப்படுகிறார்கள்; தாங்கள் நாடின
துறைமுகத்தில் அவர்களைக் கொண்டுவந்து
சேர்க்கிறார்.
அவர்கள் கர்த்தரை அவருடைய கிருபையி 31
னிமித்தமும், மனுபுத்திரருக்கு அவர் செய்கிற
அதிசயங்களினிமித்தமும் துதித்து,
ஜனங்களின் சபையிலே அவரை உயர்த்தி, 32
[24]மூப்பர்களின் சங்கத்திலே அவரைப் போற்
றுவார்களாக.
அவர் ஆறுகளை அவாந்தரவெளியாகவும், 33
[25]நீரூற்றுகளை வறண்ட ஸ்தலமாகவும்,

1 லேவி. 26. 40–42
2 எஸ்றா. 9. 9
3 1 நாளா. 16. 35
4 41. 13
5 119. 68. மத். 19. 17
6 106. 10
7 ஏசா. 43. 5, 6
8 உபா. 32. 10
9 ஓசி. 5. 15
10 எஸ்றா. 8. 21. ஏசா. 30. 21
11 லூ. 1. 53
12 புல. 3. 42. லூ. 7. 30
13 யோபு 36. 8, 9
14 யோபு 9. 13
15 146. 7. அப். 12. 7. ழ
16 ஏசா. 45. 2
17 38. 3, 5
18 யோபு 33. 19 ழ
19 2 இரா. 20. 4, 5. மத். 8. 8
20 லேவி. 7. 12. எபி. 13. 15
21 யோனா. 1. 4. ழ
22 செகே. 2. 10
23 89. 9. மத். 8 26
24 22. 22: 66. 16: 111. 1
25 1 இரா. 17. 1, 7

34 குடிகளுடைய பொல்லாப்பினிமித்தம் செ
ழிப்பான தேசத்தை [1]உவர்நிலமாகவும் மாற்று
கிறார்.
35 அவர் அவாந்தரவெளியைத் தண்ணீர்த்
தடாகமாகவும், [2]வறண்ட நிலத்தை நீரூற்று
களாகவும் மாற்றி,
36 பசித்தவர்களை அங்கே குடியேற்றுகிறார்;
அங்கே அவர்கள் குடியிருக்கும் நகரத்தைக்
கட்டி,
37 வயல்களை உண்டாக்கி விதைத்து, திராட்
சத்தோட்டங்களை நாட்டுகிறார்கள், அவைகள்
வரத்துள்ள பலனைத் தரும்.
38 அவர்களை ஆசீர்வதிக்கிறார், மிகுதியும் பெரு
குகிறார்கள்; அவர்களுடைய மிருக ஜீவன்
கள் குறையாதிருக்கப் பண்ணுகிறார்.
39 பின்பு அவர்கள் இடுக்கத்தினாலும், ஆபத்
தினாலும், [3]துயரத்தினாலும் குறைவுபட்டுத்
தாழ்வடைகிறார்கள்.
40 அவர் பிரபுக்களின்மேல் இகழ்ச்சிவரப்
பண்ணி, [4]வழியில்லாத அவாந்தரவெளியிலே
அவர்களைத் திரியச்செய்து,
41 எளியவனையோ சிறுமையினின்று எடுத்து,
[5]உயர்ந்த அடைக்கலத்திலே வைத்து,
அவன் வம்சங்களை மந்தையைப்போ லாக்கு
கிறார்.
42 உத்தமர்கள் [6]அதைக் கண்டு மகிழுவார்கள்;
நியாயக்கேடெல்லாம் தன் வாயை மூடும்
43 எவன் ஞானமுள்ளவனோ அவன் இவை
களைக் கவனிக்கக்கடவன்; [7]ஞானவான்கள்
கர்த்தருடைய கிருபைகளை உணர்ந்துகொள்
வார்கள்.

# 108

(தாவீதின் சங்கீதமாகிய பாட்டு.)

தேவனே, என் இருதயம் ஆயத்தமாயிருக்
கிறது; [8]நான் பாடிக் கீர்த்தனம் பண்ணு
வேன்; என் மகிமையும் பாடும்.
2 வீணையே, சுரமண்டலமே, விழியுங்கள்,
நான் அதிகாலையில் விழிப்பேன்.
3 கர்த்தாவே, ஜனங்களுக்குள்ளே உம்மைத்
துதிப்பேன்; ஜாதிகளுக்குள்ளே உம்மைக்
கீர்த்தனம் பண்ணுவேன்.
4 உமது கிருபை வானங்களுக்கு மேலாகவும்,
உமது சத்தியம் மேகமண்டலங்கள் பரியந்த
மும் எட்டுகிறது.
5 தேவனே, வானங்களுக்கு மேலாக உயர்ந்
திரும்; உமது மகிமை பூமியனைத்தின்மேலும்
உயர்ந்திருப்பதாக.
6 உமது பிரியர் விடுவிக்கப்படும்பொருட்டு,
[9]உமது வலதுகரத்தினால் இரட்சித்து, எங்கள்
ஜெபத்தைக் கேட்டருளும்.
7 தேவன் தமது பரிசுத்தத்தைக்கொண்டு
விளம்பினார், ஆகையால் களிகூருவேன்; சீகே
மைப் பங்கிட்டு, சுக்கோத்தின் பள்ளத்தாக்
கை அளந்துகொள்ளுவேன்.
8 கிலேயாத் என்னுடையது, மனாசேயும் என்
னுடையது; எப்பிராயீம் என் தலையின் பெ
லன், [10]யூதா என் நியாயப் பிரமாணிகன்.
மோவாப் என் பாதபாத்திரம்; ஏதோமின் 9
மேல் என் பாதரட்சையை எறிவேன்; பெ
லிஸ்தியாவின்மேல் ஆர்ப்பரிப்பேன்.
அரணான பட்டணத்திற்குள் என்னை நடத் 10
திக்கொண்டு போகிறவன் யார்? ஏதோம்மட்
டும் எனக்கு வழிகாட்டுகிறவன் யார்?
எங்கள் சேனைகளோடே புறப்படாமலி 11
ருந்த தேவரீரல்லவா? எங்களைத் தள்ளிவிட்டி
ருந்த தேவரீரல்லவா?
இக்கட்டில் எங்களுக்கு உதவிசெய்யும்; 12
[11]மனுஷனுடைய உதவி விருதா.
தேவனாலே பராக்கிரமஞ் செய்வோம்; 13
[12]அவரே எங்கள் சத்துருக்களை மிதித்துப்
போடுவார்.

# 109

(இராகத்தலைவனுக்கு ஒப்புவிக்கப்பட்ட
தாவீதின் சங்கீதம்.)

நான் துதிக்கும் தேவனே, [13]மவுனமாயிரா
தேயும்.
துன்மார்க்கனுடைய வாயும், கபட்டுவாயும், 2
எனக்கு விரோதமாய்த் திறந்திருக்கிறது;
[14]கள்ள நாவினால் என்னோடே பேசுகிறார்கள்.
பகையுண்டாக்கும் வார்த்தைகளால் என் 3
னைச் சூழ்ந்துகொண்டு, [15]முகாந்தரமில்லாமல்
என்னோடே போர் செய்கிறார்கள்.
என் சிநேகத்துக்குப் பதிலாக என்னை 4
விரோதிக்கிறார்கள், [16]நானோ ஜெபம் பண்
ணிக்கொண்டிருக்கிறேன்.
நன்மைக்குப் பதிலாக எனக்குத் தீமை 5
செய்கிறார்கள், [17]என் சிநேகத்துக்குப் பதிலாக
என்னைப் பகைக்கிறார்கள்.
அவனுக்கு மேலாகத் துஷ்டனை ஏற்படுத் 6
திவையும், [18]சாத்தான் அவன் வலது பக்கத்
தில் நிற்பானாக.
அவன் நியாயம் விசாரிக்கப்படும்போது குற் 7
றவாளியாகக்கடவன்; [19]அவன் ஜெபம் பாவமா
கக்கடவது.
அவன் நாட்கள் கொஞ்சமாகக்கடவது; 8
[20]அவன் உத்தியோகத்தை வேறொருவன் பெ
றக்கடவன்.
அவன் பிள்ளைகள் திக்கற்றவர்களும், 9
[21]அவன் மனைவி விதவையுமாகக் கடவர்கள்.
அவன் பிள்ளைகள் அலைந்து திரிந்து பிச் 10
சையெடுத்து, தங்கள் பாழான வீடுகளிலிருந்து
இரந்துண்ணக்கடவர்கள்,
கடன் கொடுத்தவன் [22]அவனுக்கு உள்ள 11
தெல்லாவற்றையும் அபகரித்துக்கொள்வானாக;
அவன் பிரயாசத்தின் பலனை அந்நியர் பறித்
துக்கொள்ளக்கடவர்கள்.
அவனுக்கு ஒருவரும் இரக்கங் காண்பியா 12
மலும், அவனுடைய திக்கற்ற பிள்ளைகளுக்குத்
தயவுசெய்யாமலும் போவார்களாக.
அவன் சந்ததியார் நிர்மூலமாகக்கடவர்கள், 13
[23]இரண்டாந் தலைமுறையில் அவர்கள் பேர்
அற்றுப்போவதாக.
அவன்பிதாக்களின் அக்கிரமம் [24]கர்த்தருக்கு 14
முன்பாக நினைக்கப்படக் கடவது, அவன்
தாயின் பாவம் நீங்காமலிருப்பதாக.

1 ஆதி. 13. 10: 19. 25
2 ஏசா. 41. 18
3 2 இரா. 10·32
4 யோபு 12. 21, 24
5 1 சாமு. 2. 5 8
6 யோபு 5. 15, 16
7 எரே. 9. 12. ஓசி. 14. 9
8 57. 7–11
9 60. 5. ழ
10 ஆதி. 49. 10
11 யோபு 16. 2. ஏசா. 2. 22
12 ரோ. 16. 20. 2 கொ. 2. 14
13 83. 1. எரே. 17. 14
14 மத். 26. 60. அப். 6. 13
15 யோ. 15. 25
16 லூ. 6. 11, 12
17 35. 7, 12
18 சகரி. 3. 1
19 நீதி. 28. 9
20 அப். 1. 20
21 யாத். 22. 24
22 யோபு 18. 9, 19
23 37. 28. நீதி. 10. 7. ஏசா. 14. 20
24 யாத். 20. 5. ஏசா. 43. 25

15 அவைகள் நித்தமும் கர்த்தருக்கு முன்பாக
இருக்கக்கடவது; அவர்கள் பேர் பூமியிலிரா
மல் நிர்மூலமாவதாக.
16 அவன் தயைசெய்ய நினையாமல், சிறுமை
யும் எளிமையு மானவனைத் துன்பப்படுத்தி,
மனமுறிவுள்ளவனைக் கொலைசெய்யும்படி தே
டினனே.
17 சாபத்தை [1]விரும்பினன், அது அவனுக்கு
வரும்; அவன் ஆசீர்வாதத்தை விரும்பாமற்
போனன், அது அவனுக்குத் தூரமாய் வில
கிப்போம்.
18 சாபத்தை அவன் தனக்கு அங்கியாக உடுத்
திக்கொண்டான்; அது அவன் உள்ளத்தில்
தண்ணீரைப்போலவும், [2]அவன் எலும்புகளில்
எண்ணெயைப்போலவும் பாயும்.
19 அது அவன் மூடிக்கொள்ளுகிற வஸ்திர
மாகவும், நித்தமும் கட்டிக்கொள்ளுகிற கச்
சையாகவும் இருப்பதாக.
20 இதுதான் என்னை விரோதிக்கிறவர்க
ளுக்கும், என் ஆத்துமாவுக்கு விரோதமாய்த்
தீங்கு பேசுகிறவர்களுக்கும் கர்த்தரால் வரும்
பலன்.
21 ஆண்டவராகிய கர்த்தாவே, நீர் உமது
நாமத்தினிமித்தம் [3]என்னை ஆதரித்து, உமது
கிருபை நலமானதினால், என்னை விடுவித்தரு
ளும்.
22 நான் சிறுமையும் எளிமையுமானவன், என்
இருதயம் எனக்குள் குத்துண்டிருக்கிறது.
23 சாயும் நிழலைப்போல் அகன்றுபோனேன்;
[4]வெட்டுக்கிளியைப்போல் பறக்கடிக்கப்படு
கிறேன்.
24 உபவாசத்தினால் என் முழங்கால்கள் தளர்ச்
சியடைகிறது; [5]என் மாம்சம் புஷ்டியற்று
உலர்ந்துபோகிறது.
25 நான் அவர்களுக்கு நிந்தையானேன்;
[6]அவர்கள் என்னைப்பார்த்து, தங்கள் தலையைத்
துலுக்குகிறார்கள்.
26 என் தேவனாகிய கர்த்தாவே, எனக்குச்
சகாயம்பண்ணும்; உமது கிருபையின்படி
என்னை ரட்சியும்.
27 இது உமது கரம் என்றும், [7]கர்த்தாவே, தே
வரீர் இதைச் செய்தீர் என்றும், அவர்கள் அறி
வார்களாக.
28 அவர்கள் சபித்தாலும், நீர் ஆசீர்வதியும்;
அவர்கள் எழும்பினாலும் வெட்கப்பட்டுப்போ
வார்களாக; [8]உமது அடியானோ மகிழக்கட
வன்.
29 என் விரோதிகள் இலச்சையால் மூடப்
பட்டு, [9]தங்கள் வெட்கத்தைச் சால்வையைப்
போல் தரித்துக்கொள்ளக்கடவர்கள்.
30 கர்த்தரை நான் என் வாயினால் மிகவும்
துதித்து, அநேகர் நடுவிலே அவரைப் புகழு
வேன்.
31 ஆக்கினைக் குள்ளாகத் தீர்க்கிறவர்களினின்
று எளியவனுடைய ஆத்துமாவை ரட்சிக்கும்
படி [10]அவர் அவன் வலதுபாரிசத்தில் நிற்பார்.

1 சதி. 14. 14. எசே. 35 6
2 எண். 5. 22
3 25. 11
4 102. 11: 144. 4
5 எபி. 12. 12
6 22. 6, 7. மத். 27. 39
7 17. 13, 14
8 2 சாமு. 16. 11, 12. ஏசா. 65. 14
9 35. 26
10 73. 23
11 மத். 22. 44. அப். 2. 34. 1 கொ. 15. 25. எபி. 1. 13
12 96. 9. நியா. 5. 2. கலா. 1. 15, 16
13 சகரி. 6. 13. எபி. 5. 6: 6 20: 7. 17, 21
14 ரோ. 2. 5. வெளி. 6. 17
15 ஆப. 3. 13
16 நியா. 7. 5, 6
17 109. 30
18 யோபு 38. 41. வெளி. 15. 3
19 மத். 6. 26, 33
20 19. 7
21 மத். 1. 21

## 110

(தாவீதின் சங்கீதம்.)

கர்த்தர் என் ஆண்டவரை நோக்கி: [11]நான்
உம்முடைய சத்துருக்களை உமக்குப் பாதபடி
யாக்கிப் போடும்வரைக்கும், நீர் என்னுடைய
வலது பாரிசத்தில் உட்காரும் என்றார்.
கர்த்தர் சீயோனிலிருந்து உமது வல்லமை 2
யின் செங்கோலை அனுப்புவார்; நீர் உம்மு
டைய சத்துருக்களின் நடுவே ஆளுகை செய்
யும்.
உமது பராக்கிரமத்தின் நாளிலே உம்மு 3
டைய ஜனங்கள் [12]மனப்பூர்வமும் பரிசுத்த
அலங்காரமுமுள்ளவர்களாயிருப்பார்கள்; விடி
யற்காலத்துக் கர்ப்பத்தில் பிறக்கும் பனிக்குச்
சமானமாய் உம்முடைய யௌவன ஜனம்
உமக்குப் பிறக்கும்.
நீர் மெல்கிசேதேக்கின் முறைமையின் 4
படி என்றென்றைக்கும் ஆசாரியராயிருக்கிறீர்
[13]என்று கர்த்தர் ஆணையிட்டார்; மனம் மாரு
மலுமிருப்பார்.
உம்முடைய வலது பாரிசத்திலிருக்கிற 5
ஆண்டவர், தமது கோபத்தின் நாளிலே [14]ரா
ஜாக்களை வெட்டுவார்.
அவர் ஜாதிகளுக்குள் நியாயந்தீர்ப்பார்; 6
எல்லா இடங்களையும் பிரேதங்களால் நிரப்பு
வார்; [15]விஸ்தாரமான தேசங்களின்மேல் தலை
வர்களா யிருக்கிறவர்களை நொறுக்கிப்போடு
வார்.
வழியிலே அவர் நதியில் குடிப்பார்; [16]ஆகை 7
யால் அவர் தமது தலையை எடுப்பார்.

## 111

அல்லேலூயா, செம்மையானவர்களு
டைய சங்கத்திலும் சபையிலும் [17]கர்த்தரை
முழு இருதயத்தோடும் துதிப்பேன்.
கர்த்தரின் செய்கைகள் பெரியவைகளும், 2
[18]அவைகளில் பிரியப்படுகிற எல்லாராலும்
ஆராயப்படுகிறவைகளுமா யிருக்கிறது:
அவருடைய செயல் மகிமையும் மகத்துவமு 3
முள்ளது, அவருடைய நீதி என்றென்றைக்
கும் நிற்கும்.
அவர் தம்முடைய அதிசயமான செய்கை 4
களை நினைவுகூரும்படி செய்தார், கர்த்தர் இரக்
கமும் மன உருக்கமுமுள்ளவர்.
தமக்குப் பயந்தவர்களுக்கு [19]ஆகாரம் கொ 5
டுத்தார்; தமது உடன்படிக்கையை என்றென்
றைக்கும் நினைப்பார்.
ஜாதிகளின் சுதந்தரத்தைத் தமது ஜனங்க 6
ளுக்குக் கொடுத்ததினால், தமது கிரியைகளின்
பெலத்தை அவர்களுக்குத் தெரியப்படுத்தினார்.
அவருடைய கரத்தின் கிரியைகள் சத்திய 7
மும் நியாயமுமானவைகள்; [20]அவருடைய கட்
டளைகளெல்லாம் உண்மையானவைகள்.
அவைகள் என்றென்றைக்குமுள்ள சதாகா 8
லங்களுக்கும் உறுதியானவைகள், அவைகள்
உண்மையும் செம்மையுமாய்ச் செய்யப்பட்ட
வைகள்.
அவர் தமது ஜனத்திற்கு மீட்பை அனுப்பி, 9
[21]தமது உடன்படிக்கையை நித்திய உடன்

படிக்கையாகக் கட்டளையிட்டார்; [1]அவரு
டைய நாமம் பரிசுத்தமும் பயங்கரமுமானது.
10 கர்த்தருக்குப் பயப்படுதலே [2]ஞானத்தின்
ஆரம்பம்; அவருடைய கற்பனைகளின்படி
செய்கிற யாவருக்கும் நற்புத்தியுண்டு; அவர்
புகழ்ச்சி என்றைக்கும் நிற்கும்.

**112** அல்லேலூயா, கர்த்தருக்குப் பயந்து
[3]அவருடைய கட்டளைகளில் மிகவும் பிரிய
மாயிருக்கிற மனுஷன் பாக்கியவான்.
2 அவன் சந்ததி பூமியில் பலத்திருக்கும்,செம்
மையானவர்களின் வம்சம் ஆசீர்வதிக்கப்படும்.
3 ஆஸ்தியும் ஐசுவரியமும் [4]அவன் வீட்டி
லிருக்கும்; அவனுடைய நீதி என்றைக்கும்
நிற்கும்.
4 செம்மையானவர்களுக்கு இருளிலே [5]வெ
ளிச்சம் உதிக்கும்; அவன் இரக்கமும் மன
உருக்கமும் நீதியுமுள்ளவன்.
5 இரங்கிக் கடன் கொடுத்து, [6]தன் காரியங்
களை நியாயமானபடி நடப்பிக்கிற மனுஷன்
பாக்கியவான்.
6 அவன் என்றென்றைக்கும் அசைக்கப்படா
திருப்பான்; [7]நீதிமான் நித்திய கீர்த்தியுள்ள
வன்.
7 துர்ச்செய்தியைக் கேட்கிறதினால் [8]பயப்
படான்; அவன் இருதயம் கர்த்தரை நம்பித்
திடனாயிருக்கும்.
8 அவன் இருதயம் உறுதியாயிருக்கும்;
அவன் தன் சத்துருக்களில் சரிக்கட்டுதலைக்
காணுமட்டும் பயப்படாதிருப்பான்.
9 வாரியிறைத்தான், [9]ஏழைகளுக்குக் கொ
டுத்தான், அவனுடைய நீதி என்றென்றைக்
கும் நிற்கும்; [10]அவன் கொம்பு மகிமையாய்
உயர்த்தப்படும்.
10 துன்மார்க்கன் அதைக்கண்டு மனமடிவாகி,
தன் [11]பற்களைக் கடித்துக் கரைந்துபோவான்;
துன்மார்க்கருடைய ஆசை அழியும்.

**113** அல்லேலூயா, கர்த்தருடைய ஊழியக்
காரரே, துதியுங்கள்; கர்த்தருடைய நாமத்
தைத் துதியுங்கள்.
2 இது முதல் என்றென்றைக்கும் கர்த்தரு
டைய நாமம் ஸ்தோத்திரிக்கப்படக்கடவது.
3 சூரியன் உதிக்கும் திசைதொடங்கி [12]அது
அஸ்தமிக்கும் திசைமட்டும் கர்த்தருடைய நா
மம் துதிக்கப்படுவதாக.
4 கர்த்தர் எல்லா ஜாதிகள்மேலும் உயர்ந்த
வர்; அவருடைய மகிமை வானங்களுக்கு
மேலானது.
5 உன்னதங்களில் வாசம்பண்ணுகிற நம்மு
டைய தேவனாகிய கர்த்தருக்குச் சமானமான
வர் யார்?
6 அவர் வானத்திலும் பூமியிலுமுள்ளவைக
ளைப் பார்க்கும்படி [13]தம்மைத் தாழ்த்துகிறார்.
7 அவர் சிறியவனைப் புழுதியிலிருந்து தூக்கி
விடுகிறார்; [14]எளியவனைக் குப்பையிலிருந்து
உயர்த்துகிறார்.
8 அவனைப் பிரபுக்களோடும்,தமது ஜனத்தின்
அதிபதிகளோடும், உட்காரப்பண்ணுகிறார்.
மலடியைச் சந்தோஷமான பிள்ளைத்தாய்ச் 9
சியாக்கி, [15]வீட்டிலே குடியிருக்கப்பண்ணு
கிறார். அல்லேலூயா.

இஸ்ரவேல் எகிப்திலும், [16]யாக்கோபின் **114**
குடும்பம் அந்நியபாஷைக்காரரான ஜனத்தி
லுமிருந்து புறப்பட்டபோது,
யூதா அவருக்குப் பரிசுத்த ஸ்தானமும், 2
[17]இஸ்ரவேல் அவருக்கு ராஜ்யமுமாயிற்று.
கடல் கண்டு விலகி ஓடிற்று; [18]யோர்தான் 3
பின்னிட்டுத் திரும்பினது.
மலைகள் ஆட்டுக் கடாக்களைப்போலவும், 4
[19]குன்றுகள் ஆட்டுக் குட்டிகளைப்போலவும்
துள்ளினது.
கடலே, நீ விலகியோடுகிறதற்கும்; யோர் 5
தானே, நீ பின்னிட்டுத் திரும்புகிறதற்கும்;
மலைகளே,
நீங்கள் ஆட்டுக்கடாக்களைப்போலவும்; குன் 6
றுகளே, நீங்கள் ஆட்டுக்குட்டிகளைப்போல
வும் துள்ளுகிறதற்கும், உங்களுக்கு என்ன
வந்தது?
பூமியே, நீ ஆண்டவருக்கு முன்பாகவும், 7
[20]யாக்கோபுடைய தேவனுக்கு முன்பாகவும்
அதிரு.
அவர் கன்மலையைத் தண்ணீர்த் தடாகமாக 8
வும், [21]கற்பாறையை நீரூற்றுகளாகவும் மாற்று
கிறார்.

எங்களுக்கு அல்ல, கர்த்தாவே, எங் **115**
களுக்கு அல்ல, [22]உமது கிருபையினிமித்த
மும், உமது சத்தியத்தினிமித்தமும், உம்மு
டைய நாமத்திற்கே மகிமை வரப்பண்ணும்.
அவர்களுடைய தேவன் இப்பொழுது எங் 2
கே [23]என்று புறஜாதிகள் சொல்வானேன்?
நம்முடையதேவன் [24]பரலோகத்தில் இருக் 3
கிறார்; தமக்குச் சித்தமான யாவையும் செய்
கிறார்.
அவர்களுடைய விக்கிரகங்கள் வெள்ளியும் 4
பொன்னும், [25]மனுஷருடைய கைவேலையுமா
யிருக்கிறது.
அவைகளுக்கு வாயிருந்தும் பேசாது; 5
அவைகளுக்குக் கண்களிருந்தும் காணாது.
அவைகளுக்குக் காதுகளிருந்தும் கேளாது; 6
அவைகளுக்கு மூக்கிருந்தும் முகராது.
அவைகளுக்குக் கைகளிருந்தும் தொடாது; 7
அவைகளுக்குக் கால்களிருந்தும் நடவாது; தங்
கள் தொண்டையால் சத்தமிடவும் மாட்டாது.
அவைகளைப் பண்ணுகிறவர்களும், [26]அவை 8
களை நம்புகிறவர்கள் யாவரும், அவைகளைப்
போலவே இருக்கிறார்கள்.
இஸ்ரவேலே, கர்த்தரை நம்பு; [27]அவரே 9
அவர்களுக்குத் துணையும் அவர்களுக்குக் கேட
கமுமாயிருக்கிறார்.
ஆரோன் குடும்பத்தாரே, கர்த்தரை நம்புங் 10
கள்; அவரே அவர்களுக்குத் துணையும் அவர்
களுக்குக் கேடகமுமாயிருக்கிறார்.
கர்த்தருக்குப் பயப்படுகிறவர்களே, கர்த்த 11
ரை நம்புங்கள்; அவரே அவர்களுக்குத் துணை
யும் அவர்களுக்குக் கேடகமுமாயிருக்கிறார்.

1 உபா. 28. 58. லூ. 1. 49
2 யோபு 28. 28 நீதி. 1. 7: 9, 10. பிர. 12.13
3 1. 1-3: 119. 16
4 மத். 6. 33
5 ஏசா. 58. 10
6 லூ. 6. 35. எபே. 5. 15
7 நீதி. 10. 7
8 நீதி. 1. 33
9 2 கொ. 9. 9
10 1 சாமு. 2. 1
11 லூ. 13. 28
12 ஏசா. 59. 19. மல். 1. 11
13 ஏசா. 57 15
14 1 சாமு. 2. 8
15 1 சாமு. 2. 5. ஏசா. 54 1. கலா. 27
16 யாத். 13. 3: 12. 41
17 யாத். 25. 8. உபா. 27. 9, 12
18 யாத். 14 21. யோசு. 3 13, 16
19 ஆப. 3. 6, 8
20 மீகா. 6. 1, 2
21 யாத். 17. 6. எண். 20. 11
22 ஏசா. 48. 11. பிர. 12. 13
23 யோவேல். 2. 17
24 தானி. 4. 35
25 உபா. 4. 28. ஏசா. 40. 19. எரே. 10. 3-7
26 ஏசா. 44. 9-11. யோனா. 2. 8. ஆப. 2. 18, 19
27 நீதி. 30. 5

12 கர்த்தர் நம்மை [1]நினைத்திருக்கிறார், அவர்
ஆசீர்வதிப்பார்; இஸ்ரவேல் குடும்பத்தாரை
ஆசீர்வதிப்பார், அவர் ஆரோன் குடும்பத்தாரை
ஆசீர்வதிப்பார்.
13 கர்த்தருக்குப் பயப்படுகிற [2]பெரியோரை
யும் சிறியோரையும் ஆசீர்வதிப்பார்.
14 கர்த்தர் உங்களையும் உங்கள் பிள்ளைகளையும்
வர்த்திக்கப்பண்ணுவார்.
15 வானத்தையும் பூமியையும் படைத்த கர்த்த
ராலே [3]நீங்கள் ஆசீர்வதிக்கப்பட்டவர்கள்.
16 வானங்கள் கர்த்தருடையவைகள்; பூமியை
யோ மனுபுத்திரருக்குக் கொடுத்தார்.
17 மரித்தவர்களும் மவுனத்தில் இறங்குகிற
[4]அனைவரும் கர்த்தரைத் துதியார்கள்.
18 நாமோ, இதுமுதல் என்றென்றைக்கும்
[5]கர்த்தரை ஸ்தோத்திரிப்போம். அல்லே
லூயா.

**116** கர்த்தர் என் சத்தத்தையும் என் விண்
ணப்பத்தையும் கேட்டதினால், [6]அவரில்
அன்புகூருகிறேன்
2 அவர் தமது செவியை எனக்குச் சாய்த்த
படியால், நான் உயிரோடிருக்குமளவும் அவ
ரைத் தொழுதுகொள்ளுவேன்.
3 மரணக்கட்டுகள் என்னைச் சுற்றிக்கொண்
டது, [7]பாதாள இடுக்கண்கள் என்னைப் பிடித்
தது; இக்கட்டையும் சஞ்சலத்தையும் அடைந்
தேன்.
4 அப்பொழுது நான் கர்த்தருடைய நாமத்
தைத் தொழுதுகொண்டு: [8]கர்த்தாவே, என்
ஆத்துமாவை விடுவியும் என்று கெஞ்சினேன்.
5 கர்த்தர் கிருபையும் நீதியுமுள்ளவர்; [9]நம்மு
டைய தேவன் மன உருக்கமானவர்.
6 கர்த்தர் கபடற்றவர்களைக் காக்கிறார்; நான்
மெலிந்துபோனேன், அவர் என்னை ரட்சித்தார்.
7 என் ஆத்துமாவே, கர்த்தர் உனக்கு நன்மை
செய்தபடியால், [10]நீ உன் இளைப்பாறுதலுக்
குத் திரும்பு.
8 என் ஆத்துமாவை மரணத்துக்கும், என்
கண்ணைக் கண்ணீருக்கும், [11]என் காலை இடறு
தலுக்கும் தப்புவித்தீர்.
9 நான் கர்த்தருக்கு முன்பாக ஜீவனுள்ளோர்
தேசத்திலே நடப்பேன்.
10 விசுவாசித்தேன், ஆகையால் பேசுகிறேன்;
[12]நான் மிகுதியும் வருத்தப்பட்டேன்.
11 எந்த மனுஷனும் பொய்யன் என்று என்
மனக்கலக்கத்திலே சொன்னேன்.
12 கர்த்தர் எனக்குச் செய்த எல்லா உபகாரங்
களுக்காகவும், அவருக்கு என்னத்தைச் செ
லுத்துவேன்.
13 இரட்சிப்பின் பாத்திரத்தை [13]யெடுத்துக்
கொண்டு, கர்த்தருடைய நாமத்தைத் தொழுது
கொள்ளுவேன்.
14 நான் கர்த்தருக்குச் செய்த பொருத்தனைகளை
[14]அவருடைய ஜனங்களெல்லாருக்கு முன்பாக
வும் செலுத்துவேன்.
15 கர்த்தருடைய பரிசுத்தவான்களின் மரணம்
[15]அவர் பார்வைக்கு அருமையானது.
கர்த்தாவே, நான் உமது அடியேன்; நான் 16
உமது அடியாளின் புத்திரனும், உமது ஊழி
யக்காரனுமாயிருக்கிறேன்; என் கட்டுகளை
அவிழ்த்துவிட்டீர்.
நான் உமக்கு ஸ்தோத்திரபலியைச் செலுத் 17
தி, [16]கர்த்தருடைய நாமத்தைத் தொழுது
கொள்ளுவேன்.
நான் கர்த்தருக்குச் செய்த பொருத்தனை 18
களை [17]அவருடைய ஜனங்களெல்லாருக்கு
முன்பாகவும்,
கர்த்தருடைய ஆலயத்தின் பிராகாரங்களி 19
லும், [18]எருசலேமே உன் நடுவிலும் நிறை
வேற்றுவேன். அல்லேலூயா.

ஜாதிகளே, எல்லாரும் கர்த்தரைத் துதி **117**
யுங்கள்; [19]ஜனங்களே, எல்லாரும் அவ
ரைப் போற்றுங்கள்.
அவர் நம்மேல் வைத்த கிருபை பெரியது; 2
கர்த்தரின் உண்மை [20]என்றென்றைக்கு முள்
ளது. அல்லேலூயா.

கர்த்தரைத் துதியுங்கள், [21]அவர் நல்ல **118**
வர்; அவர் கிருபை என்றுமுள்ளது.
அவர் கிருபை என்றுமுள்ளதென்று[22] இஸ்ர 2
வேல் சொல்வதாக.
அவர் கிருபை என்றுமுள்ளதென்று, 3
ஆரோனின் குடும்பத்தார் சொல்வார்களாக.
அவர் கிருபை என்றுமுள்ளதென்று, கர்த் 4
தருக்குப் பயப்படுகிறவர்கள் சொல்வார்களாக.
நெருக்கத்திலிருந்து கர்த்தரை நோக்கிக் 5
கூப்பிட்டேன், [23]கர்த்தர் என்னைக் கேட்ட
ருளி விசாலத்திலே வைத்தார்.
கர்த்தர் என்பட்சத்தில் இருக்கிறார், [24]நான் 6
பயப்படேன்; மனுஷன் எனக்கு என்ன
செய்வான்?
எனக்கு அநுகூலம் பண்ணுகிறவர்கள் நடு 7
வில் கர்த்தர் என்பட்சத்தில் இருக்கிறார்; என்
சத்துருக்களில் சரிகட்டுதலைக் காண்பேன்.
மனுஷனை நம்புவதைப்பார்க்கிலும், [25]கர்த் 8
தர் பேரில் பற்றுதலாயிருப்பதே நலம்.
பிரபுக்களை நம்புவதைப்பார்க்கிலும், [26]கர்த் 9
தர் பேரில் பற்றுதலாயிருப்பதே நலம்.
எல்லா ஜாதியாரும் என்னை வளைந்துகொள் 10
ளுகிறார்கள்; கர்த்தருடைய நாமத்தினால் அவர்
களைச் சங்கரிப்பேன்.
என்னைச் சுற்றிலும் வளைந்துகொள்ளுகி 11
றார்கள்; கர்த்தருடைய நாமத்தினால் அவர்க
ளைச் சங்கரிப்பேன்.
தேனீக்களைப்போல [27]என்னை வளைந்து 12
கொள்ளுகிறார்கள்; முள்ளில்பற்றின நெருப்
பைப்போல [28]அணைந்துபோவார்கள்; கர்த்தரு
டைய நாமத்தினால் அவர்களைச் சங்கரிப்பேன்.
நான் விழும்படி நீ என்னைத் தள்ளினாய்; 13
[29]கர்த்தரோ எனக்கு உதவிசெய்தார்.
கர்த்தர் என் பெலனும், என் கீதமுமான 14
வர்; [30]அவர் எனக்கு ரட்சிப்புமானார்.
நீதிமான்களுடைய கூடாரங்களில் ரட்சிப் 15
பின் கெம்பீரசத்தம் உண்டு; கர்த்தரின் வலது
கரம் பராக்கிரமஞ் செய்யும்.

[1] எசா. 44. 21
[2] 29. 11
[3] எபே. 1. 3, 4
[4] ஏசா. 38. 18, 19
[5] தானி. 2. 20
[6] 18. 1–6
[7] யோனா. 2. 2. ழ
[8] 34. 6
[9] 103. 8. எஸ்றா. 9. 15. நெகே. 9. 8. தானி. 9. 7
[10] எரே. 6. 16. மத். 11. 29. எபி. 4. 3
[11] யூதா. 24
[12] 2 கொ. 4. 13
[13] லூ. 22. 17
[14] யோனா. 2. 9
[15] 72. 14
[16] லேவி. 7. 12
[17] பிர. 5. 5
[18] 96. 8: 100 4
[19] ரோ. 15. 11
[20] ஏசா. 25. 1. யோ. 14. 6. 1 யோ. 5. 6
[21] 1 நாளா. 16. 8, 24. எஸ்றா. 3. 10, 11
[22] 115. 9. ழ
[23] 120. 1
[24] 27. 1. எபி. 13. 6
[25] எரே. 17. 5, 7
[26] 146. 3
[27] உபா. 1. 44
[28] 2 சாமு. 23 6. நாகூம். 1. 10
[29] மீகா. 7. 8
[30] யாத். 15. 2, 6. ஏசா. 12. 2

16 கர்த்தரின் வலதுகரம் உயர்ந்திருக்கிறது;
கர்த்தரின் வலதுகரம் பராக்கிரமஞ் செய்யும்.
17 நான் சாவாமல், பிழைத்திருந்து, [1]கர்த்தரு
டைய செய்கைகளை விவரிப்பேன்.
18 கர்த்தர் என்னை [2]வெகுவாய்த் தண்டித்
தும், என்னைச் சாவுக்கு ஒப்புக்கொடுக்க
வில்லை.
19 நீதியின் வாசல்களைத் திறவுங்கள்; [3]நான்
அவைகளுக்குள் பிரவேசித்துக் கர்த்தரைத்
துதிப்பேன்.
20 கர்த்தரின் வாசல் இதுவே; நீதிமான்கள்
இதற்குள் பிரவேசிப்பார்கள்.
21 நீர் எனக்குச் செவிகொடுத்து, எனக்கு
ரட்சிப்பாயிருந்தபடியால், நான் உம்மைத்
துதிப்பேன்.
22 வீடு கட்டுகிறவர்கள் ஆகாதென்று தள்ளின
கல்லே, [4]மூலைக்குத் தலைக்கல்லாயிற்று.
23 அது கர்த்தராலே ஆயிற்று, அது நம்மு
டைய கண்களுக்கு ஆச்சரியமாயிருக்கிறது.
24 இது கர்த்தர் உண்டுபண்ணின நாள்;
இதிலே களிகூர்ந்து மகிழக்கடவோம்.
25 கர்த்தாவே, இரட்சியும்; கர்த்தாவே, காரி
யத்தை வாய்க்கப்பண்ணும்.
26 கர்த்தருடைய நாமத்திலே வருகிறவர்
[5]ஸ்தோத்திரிக்கப்பட்டவர்; கர்த்தருடைய
ஆலயத்திலிருந்து உங்களை ஆசீர்வதிக்கிறோம்.
27 கர்த்தர் நம்மைப் பிரகாசிப்பிக்கிற [6]தேவ
னாயிருக்கிறார்; பண்டிகைப் பலியைக் கொண்
டுபோய் பலிபீடத்தின் கொம்புகளில் கயிறுக
ளால் கட்டுங்கள்.
28 நீர் என் தேவன், [7]நான் உம்மைத் துதிப்
பேன்; நீர் என் தேவன், நான் உம்மை
உயர்த்துவேன்.
29 கர்த்தரைத் துதியுங்கள், அவர் நல்லவர்;
அவர் கிருபை என்றுமுள்ளது.

# 119

א ஆலெப்.

சர்த்தருடைய வேதத்தின் படி நடக்கிற உத்
தமமார்க்கத்தார் [8]பாக்கியவான்கள்.
2 அவருடைய சாட்சிகளைக் கைக்கொண்டு;
[9]அவரை முழு இருதயத்தோடும் தேடுகிறவர்
கள் பாக்கியவான்கள்.
3 அவர்கள் அநியாயம் [10]செய்வதில்லை; அவ
ருடைய வழிகளில் நடக்கிறார்கள்.
4 உமது கட்டளைகளை நாங்கள் கருத்தாய்க்
கைக்கொள்ளும்படி [11]நீர் கற்பித்தீர்.
5 உமது பிரமாணங்களைக் கைக்கொள்ளும்
படி, என் நடைகள் ஸ்திரப்பட்டால் நலமா
யிருக்கும்.
6 நான் உம்முடைய கற்பனைகளையெல்லாம்
கண்ணோக்கும்போது, [12]வெட்கப்பட்டுப்
போவதில்லை.
7 உம்முடைய நீதி நியாயங்களை நான் கற்
றுக்கொள்ளும்போது, செம்மையான இரு
தயத்தால் உம்மைத் துதிப்பேன்.
8 உமது பிரமாணங்களைக் கைக்கொள்ளு
வேன்; முற்றிலும் என்னைக் கைவிடாதேயும்.

ב பேத்.

வாலிபன் தன் வழியை எதினால் சுத்தம் 9
பண்ணுவான்? [13]உமது வசனத்தின்படி தன்
னைக் காத்துக்கொள்ளுகிறதினால்தானே.
என் முழு இருதயத்தோடும் உம்மைத் 10
தேடுகிறேன், [14]என்னை உமது கற்பனைகளை
விட்டு வழிதப்பவிடாதேயும்.
நான் உமக்கு விரோதமாய் பாவஞ்செய் 11
யாதபடிக்கு, [15]உமது வாக்கை என் இருதயத்
தில் வைத்துவைத்தேன்.
கர்த்தாவே, நீர் ஸ்தோத்திரிக்கப்பட்ட 12
வர்; [16]உம்முடைய பிரமாணங்களை எனக்குப்
போதியும்.
உம்முடைய வாக்கின் நியாயத்தீர்ப்புகளை 13
யெல்லாம் என் உதடுகளால் விவரித்திருக்
கிறேன்.
திரளான செல்வத்தில் களிகூருவதுபோல, 14
நான் உமது சாட்சிகளின் வழியில் களிகூரு
கிறேன்.
உமது கட்டளைகளைத் தியானித்து, உமது 15
வழிகளைக் கண்ணோக்குகிறேன்.
உமது பிரமாணங்களில் மனமகிழ்ச்சியா 16
யிருக்கிறேன் உமது வசனத்தை மறவேன்.

ג கிமெல்.

உமது அடியேனுக்கு [17]அனுகூலமாயிரும்; 17
அப்பொழுது நான் பிழைத்து, உமது வசனத்
தைக் கைக்கொள்ளுவேன்.
உமது வேதத்திலுள்ள அதிசயங்களை நான் 18
பார்க்கும்படிக்கு என் கண்களைத் திறந்த
ருளும்.
பூமியிலே நான் [18]பரதேசி; உமது கற்பனை 19
களை எனக்கு மறையாதேயும்.
உமது நியாயங்கள்மேல் என் ஆத்துமா எக் 20
காலமும் வைத்திருக்கிற [19]வாஞ்சையினால்
தொய்ந்துபோகிறது.
உமது கற்பனைகளைவிட்டு வழி விலகின 21
சபிக்கப்பட்ட அகங்காரிகளை [20]நீர் கடிந்து
கொள்ளுகிறீர்.
நிந்தையையும் அவமானத்தையும் என்னை 22
விட்டகற்றும்; நான் உம்முடைய சாட்சிக
ளைக் கைக்கொள்ளுகிறேன்.
பிரபுக்களும் உட்கார்ந்து எனக்கு விரோத 23
மாய்ப் பேசிக்கொள்ளுகிறார்கள்; உமது அடி
யேனோ, உமது பிரமாணங்களைத் தியானிக்
கிறேன்.
உம்முடைய சாட்சிகள் எனக்கு இன்பமும், 24
[21]என் ஆலோசனைக்காரருமாயிருக்கிறது.

ד டாலெத்.

என் ஆத்துமா மண்ணோடு ஒட்டிக்கொண் 25
டிருக்கிறது; உமது வசனத்தின்படி என்னை
உயிர்ப்பியும்.
என் வழிகளை நான் உமக்கு விவரித்துக் 26
காட்டினபோது எனக்குச் செவிகொடுத்தீர்;
உமது பிரமாணங்களை எனக்குப் போதியும்.
உமது கட்டளைகளின் வழியை எனக்கு 27
உணர்த்தியருளும்; அப்பொழுது உமது அதி
சயங்களைத் தியானிப்பேன்.

[1] ஆப. 1. 12
[2] 2 கொ. 6. 9
[3] ஏசா. 26. 2. வெளி. 22. 14
[4] மத். 21. 42. அப். 4. 11. எபே. 2. 20. 1 பே. 2. 4, 7
[5] மத். 21. 9: 23. 39
[6] எஸ்தர். 8. 16. 1 பே. 2. 9
[7] யாத். 15. 2. ஏசா. 25. 1
[8] 128. 1
[9] நீதி. 23. 26. 1 யோ. 3. 20
[10] 1 யோ. 3. 9: 5. 18
[11] உபா. 6. 17
[12] 1 யோ. 2. 28
[13] நீதி. 1. 4
[14] 2 நாளா. 15. 15
[15] 1. 2
[16] 25. 4
[17] 116. 7
[18] எபி. 11. 13. 1 பே. 2. 11
[19] 63. 1
[20] 1 பே. 5. 5
[21] நீதி. 7. 1-4

28 சஞ்சலத்தால் என் ஆத்துமா கரைந்துபோ
கிறது; உமது வசனத்தின்படி என்னை எடுத்து
நிறுத்தும்.
29 பொய்வழியை என்னைவிட்டு விலக்கி,
[1]உம்முடைய வேதத்தை எனக்கு அருள்செய்
யும்.
30 மெய்வழியை நான் தெரிந்துகொண்டு,
உம்முடைய நியாயங்களை எனக்கு முன்பாக
நிறுத்தினேன்.
31 உமது சாட்சிகள்மேல் பற்றுதலாயிருக்கி
றேன்; கர்த்தாவே, என்னை [2]வெட்கத்திற்
குட்படப் பண்ணாதேயும்.
32 நீர் என் இருதயத்தை விசாலமாக்கும்
போது, [3]நான் உமது கற்பனைகளின் வழியாக
ஓடுவேன்.

ה ஏ.

33 கர்த்தாவே உமது பிரமாணங்களின் வழி
யை எனக்குப் போதியும்; [4]முடிவுபரியந்தம்
நான் அதைக் காத்துக்கொள்ளுவேன்.
34 எனக்கு உணர்வைத் தாரும்; [5]அப்பொ
ழுது நான் உமது வேதத்தைப்பற்றிக்கொண்டு,
என் முழு இருதயத்தோடும் அதைக் கைக்
கொள்ளுவேன்.
35 உமது கற்பனைகளின் பாதையில் என்னை
நடத்தும்; நான் அதில் பிரியமாயிருக்கிறேன்.
36 என் இருதயம் பொருளாசையைச் சாரா
மல், [6]உமது சாட்சிகளைச் சாரும்படிசெய்யும்.
37 மாயையைப் பாராதபடி நீர் என் கண்களை
விலக்கி [7]உமது வழிகளில் என்னை உயிர்ப்பி
யும்.
38 உமக்குப் பயப்படுகிறதற்கு ஏற்ற உமது
வாக்கை [8]உமது அடியேனுக்கு உறுதிப்
படுத்தும்.
39 நான் அஞ்சுகிறநிந்தையை விலக்கியருளும்;
உம்முடைய நியாயத்தீர்ப்புகள் நல்லவைகள்.
40 இதோ, உம்முடைய கட்டளைகள்மேல்
வாஞ்சையாயிருக்கிறேன்; [9]உமது நீதியால்
என்னை உயிர்ப்பியும்.

ו வெள.

41 கர்த்தாவே, உம்முடைய வாக்கின்படி,
உமது தயவும் உமது இரட்சிப்பும் எனக்கு
வருவதாக.
42 அப்பொழுது என்னை நிந்திக்கிறவனுக்கு
உத்தரவு சொல்லுவேன்; உம்முடைய வச
னத்தை நம்பியிருக்கிறேன்.
43 சத்தியவசனம்முற்றிலும் என் வாயினின்று
நீங்கவிடாதேயும்; [10]உம்முடைய நியாயத்தீர்ப்
புகளுக்குக் காத்திருக்கிறேன்.
44 நான் எப்பொழுதும் என்றைக்கும் உமது
வேதத்தைக் காத்துக்கொள்ளுவேன்.
45 நான் உம்முடைய கட்டளைகளை ஆராய்கிற
படியால், [11]விசாலத்திலே நடப்பேன்.
46 நான் உம்முடைய சாட்சிகளைக்குறித்து,
[12]ராஜாக்களுக்கு முன்பாகவும் வெட்கப்படா
மல் பேசுவேன்.
47 நான் பிரியப்படுகிற உமது கற்பனைகளின்
பேரில் மனமகிழ்ச்சியாயிருப்பேன்

[1] நீதி. 30. 8
[2] ஏசா. 49. 23
[3] ஏசா. 60. 5. 2 கொ. 6. 11
[4] மத். 10. 22. வெளி. 2. 26
உபா. 4. 6. நீதி. 2. 6. யாக். 1. 5
[6] எசே. 33. 31. லூ. 12. 15. 1 தீமோ. 6.10. எபி. 13. 5
[7] நீதி. 23. 5 ஏசா. 33. 15
[8] 2 சாமு. 7. 25. 2 கொ. 1. 20
[9] யோ. 10. 10
[10] ஏசா. 59. 21
[11] யோ. 8. 32, 36. கலா. 5. 1, 13
[12] மத். 10. 18, 19. அப். 26. 1. ழ
[13] 1 பே. 1. 13, 21
[14] ரோ. 15. 4
[15] யோபு 23.11. ஏசா. 38. 3
[16] எஸ்றா. 9. 3
[17] 63. 6
[18] எரே. 10.16 புல. 3. 24
[19] எபி. 10. 22
[20] புல. 3. 40, 41. லூ. 15. 17, 18
[21] அப். 16. 25
[22] நீதி. 13. 20
[23] எரே. 3. 15
[24] எரே. 31. 18, 19. எபி. 12. 11

நான் பிரியப்படுகிற உமது கற்பனைகளுக் 48
குக் கையெடுப்பேன், உமது பிரமாணங்க
ளைத் தியானிப்பேன்.

ז சாயீன்.

நீர் என்னை நம்பப்பண்ணின வசனத்தை 49
[13]உமது அடியேனுக்காக நினைத்தருளும்.
அதுவே என் சிறுமையில் எனக்கு ஆறு 50
தல், [14]உம்முடைய வாக்கு என்னை உயிர்ப்
பித்தது.
அகந்தைக்காரர் என்னை மிகவும் பரியாசம் 51
பண்ணியும், [15]நான் உமது வேதத்தைவிட்டு
விலகினதில்லை.
கர்த்தாவே, ஆதிமுதலான உமது நியாயத் 52
தீர்ப்புகளை நான் நினைத்து, என்னைத் தேற்று
கிறேன்.
உமது வேதத்தைவிட்டு விலகுகிற துன் 53
மார்க்கர்நிமித்தம் நடுக்கம் [16]என்னைப்பிடித்தது.
நான் பரதேசியாய்த் தங்கும் வீட்டிலே 54
உமது பிரமாணங்கள் எனக்குக் கீதங்களாயின.
கர்த்தாவே, இராக்காலத்தில் உமது நாமத் 55
தை நினைத்து, [17]உமது வேதத்தைக் கைக்
கொள்ளுகிறேன்.
நான் உமது கட்டளைகளைக் கைக்கொண்ட 56
படியினால், இது எனக்குக் கிடைத்தது.

ח கேத்.

கர்த்தாவே, நீரே என் [18]பங்கு; நான் உமது 57
வசனங்களைக் கைக்கொள்ளுவேன் என்
றேன்.
முழு இருதயத்தோடும் [19]உம்முடைய தய 58
வுக்காகக் கெஞ்சுகிறேன்; உமது வாக்கின்
படி எனக்கு இரங்கும்.
என் வழிகளைச் சிந்தித்துக்கொண்டு, [20]என் 59
கால்களை உம்முடைய சாட்சிகளுக்கு நேராகத்
திருப்பினேன்.
உமது கற்பனைகளைக் கைக்கொள்ளும்படி, 60
நான் தாமதியாமல் தீவிரித்தேன்.
துன்மார்க்கரின் கூட்டங்கள் என்னைக் 61
கொள்ளையிட்டும், உம்முடைய வேதத்தை
நான் மறக்கவில்லை.
உமது நீதியான நியாயத்தீர்ப்புகளினிமித் 62
தம், உம்மைத் துதிக்கும்படி பாதிராத்திரியில்
[21]எழுந்திருப்பேன்.
உமக்குப் பயந்து, உமது கட்டளைகளைக் 63
கைக்கொள்ளுகிற அனைவருக்கும் [22]நான்
தோழன்.
கர்த்தாவே, பூமி உமது கிருபையினால் 64
நிறைந்திருக்கிறது; உமது பிரமாணங்களை
எனக்குப் போதியும்.

ט தேத்.

கர்த்தாவே, உமது வசனத்தின்படி உமது 65
அடியேனை நன்றாய் நடத்தினீர்.
உத்தம நிதானிப்பையும் அறிவையும் எனக் 66
குப் [23]போதித்தருளும், உம்முடைய கற்பனை
களின்பேரில் விசுவாசமாயிருக்கிறேன்.
நான் உபத்திரவப்படுவதற்கு முன் [24]வழி 67
தப்பி நடந்தேன்; இப்பொழுதோ உம்மு
டைய வார்த்தையைக் காத்து நடக்கிறேன்

68 தேவரீர் நல்லவரும், [1]நன்மை செய்கிற
வருமா யிருக்கிறீர்; உமது பிரமாணங்களை
எனக்குப் போதியும்.
69 அகங்காரிகள் எனக்கு விரோதமாய்ப்
பொய்களைப் பிணைக்கிறார்கள்; நானோ, முழு
இருதயத்தோடும் உம்முடைய கட்டளைகளைக்
கைக்கொள்ளுவேன்.
70 அவர்கள் இருதயம் நிணந்துன்னிக் கொ
ழுத்திருக்கிறது; நானோ, உம்முடைய வேதத்
தில் மனமகிழ்ச்சியாயிருக்கிறேன்.
71 நான் உபத்திரவப்பட்டது எனக்கு நல்
லது; [2]அதினால் உமது பிரமாணங்களைக் கற்
றுக்கொள்ளுகிறேன்.
72 அநேகமாயிரம் பொன் வெள்ளியைப் பார்க்
கிலும், [3]நீர் விளம்பின வேதமே எனக்கு நலம்.

யோட்.

73 உம்முடைய கரங்கள் என்னை உண்டாக்கி,
என்னை உருவாக்கிற்று; [4]உம்முடைய கற்
பனைகளைக் கற்றுக்கொள்ள என்னை உணர்
வுள்ளவனாக்கும்.
74 நான் உம்முடைய வசனத்திற்குக் காத்
திருக்கிறபடியால், உமக்குப் பயந்தவர்கள்
[5]என்னைக் கண்டு சந்தோஷப்படுவார்கள்.
75 கர்த்தாவே, உமது நியாயத்தீர்ப்புகள் நீதி
யுள்ளதென்றும், [6]உண்மையின்படி என்னை
உபத்திரவப்படுத்தினீரென்றும் அறிவேன்.
76 நீர் உமது அடியேனுக்குக் கொடுத்த உமது
வாக்கின்படி, உமது கிருபை என்னைத் தேற்
றுவதாக.
77 நான் பிழைத்திருக்கும்படிக்கு உமது இரக
கங்கள் எனக்குக் கிடைப்பதாக; உம்முடைய
வேதம் என் மகிழ்ச்சி.
78 அகங்காரிகள் என்னைப் பொய்களினால்
கெடுக்கப் பார்த்தபடியால் வெட்கப்பட்டுப்
போவார்களாக; நானோ உமது கட்டளைகளைத்
தியானிப்பேன்.
79 உமக்குப் பயந்து, உமது சாட்சிகளை அறிந்
திருக்கிறவர்கள் என்னண்டைக்குத் திரும்பு
வார்களாக.
80 நான் வெட்கப்பட்டுப் போகாதபடிக்கு,
[7]என் இருதயம் உமது பிரமாணங்களில் உத்
தமமாயிருக்கக்கடவது:

כ கப்.

81 உம்முடைய ரட்சிப்புக்கு [8]என் ஆத்துமா
தவிக்கிறது; உம்முடைய வசனத்துக்குக் காத்
திருக்கிறேன்.
82 எப்பொழுது என்னைத் தேற்றுவீர் என்று,
உம்முடைய வாக்கின்மேல் நோக்கமாய் என்
கண்கள் பூத்துப்போகிறது.
83 புகையிலுள்ள [9]துருத்தியைப்போலா
னேன்; உமது பிரமாணங்களையோ மறவேன்.
84 உமது அடியேனுடைய [10]நாட்கள் எம்மாத்
திரம்? என்னைத் துன்பப்படுத்துகிறவர்களுக்கு
நீர் எப்பொழுது [11]நியாயத்தீர்ப்பு செய்வீர்?
85 உம்முடைய வேதத்துக்கு விரோதமாய்
அகங்காரிகள் [12]எனக்குக் குழிகளை வெட்டி
னார்கள்.

[1] 25. 8. மத். 19. 17
[2] எபி. 12. 10, 11
[3] நீதி. 8. 11, 19
[4] 111. 10
[5] 34. 2
[6] எபி. 12. 10. வெளி. 3. 19
[7] உபா. 26. 16. எசே. 11. 19
[8] 84. 2
[9] யோபு 30. 30
[10] 39. 4
[11] 2 தெச. 1. 6. வெளி. 6. 10
[12] 35. 7. நீதி. 16. 27
[13] மத். 24. 34, 35. 1 பே. 1. 25
[14] எரே. 33. 25
[15] செப். 3. 17
[16] மத். 5. 18: 24. 35
[17] உபா. 4. 6, 8
[18] 2 தீமோ. 3. 15
[19] யோபு 32. 7-9
[20] நீதி. 1. 15
[21] 19. 10. யோபு 23. 12

உம்முடையகற்பனைகளெல்லாம் உண்மை 86
யாயிருக்கிறது; அநியாயமாய் என்னைத் துன்
பப் படுத்துகிறார்கள்; நீர் எனக்குச் சகாயம்
பண்ணும்.
அவர்கள் என்னைப் பூமியிலிராமல் நீக்கி 87
விடச் சற்றேதப்பிற்று; ஆனாலும் நான் உமது
கட்டளைகளை விட்டுவிடவில்லை.
உமது கிருபையின்படியே என்னை உயிர்ப் 88
பியும்; அப்பொழுது நான் உம்முடைய வாக்
கின் சாட்சியைக் காத்து நடப்பேன்.

ל லாமேட்.

கர்த்தாவே, உமது வசனம் என்றென் 89
றைக்கும் [13]வானங்களில் நிலைத்திருக்கிறது.
உம்முடைய உண்மை தலைமுறை தலை 90
முறையாக இருக்கும்; பூமியை உறுதிப்படுத்
தினீர், அது நிலைத்திருக்கிறது.
உம்முடைய பிரமாணங்களை நிறைவேற் 91
றும்படி அவைகள் இந்நாள் வரைக்கும் நிற்கி
றது; [14]சமஸ்தமும் உம்மைச் சேவிக்கும்.
உமது வேதம் என் மனமகிழ்ச்சியாயிரா 92
திருந்தால், என் துக்கத்திலே அழிந்துபோ
யிருப்பேன்.
நான் ஒருபோதும் உம்முடைய கட்டளை 93
களை மறக்கமாட்டேன்; அவைகளால் நீர்
என்னை உயிர்ப்பித்தீர்.
நான் உம்முடையவன், [15]என்னை ரட்சி 94
யும்; உம்முடைய கட்டளைகளை ஆராய்கி
றேன்.
துன்மார்க்கர் என்னை அழிக்கக் காத்திருக் 95
கிறார்கள்; நான் உமது சாட்சிகளைச் சிந்தித்
துக்கொண்டிருக்கிறேன்.
சகல சம்பூரணத்திற்கும் எல்லையைக் கண் 96
டேன்; [16]உம்முடைய கற்பனையோ மகா
விஸ்தாரம்.

מ மேம்.

உமது வேதத்தில் நான் எவ்வளவு பிரியமா 97
யிருக்கிறேன்! நாள் முழுதும் அது என் தியா
னம்.
நீர் உம்முடைய கற்பனைகளைக் கொண்டு 98
என்னை என் சத்துருக்களிலும் அதிக ஞான
முள்ளவனாக்குகிறீர்; [17]அவைகள் என்றைக்
கும் என்னுடனே இருக்கிறது.
உம்முடைய சாட்சிகள் என் தியானமா 99
யிருக்கிறபடியால், [18]எனக்குப் போதித்த
வர்களெல்லாரிலும் அறிவுள்ளவனாயிருக்
கிறேன்.
உம்முடைய கட்டளைகளை நான் கைக் 100
கொண்டிருக்கிறபடியால், [19]முதியோர்களைப்
பார்க்கிலும் ஞானமுள்ளவனாயிருக்கிறேன்.
உம்முடைய வசனத்தை நான் காத்து நடக் 101
கும்படிக்கு, [20]சகல பொல்லாத வழிகளுக்
கும் என் கால்களை விலக்குகிறேன்.
நீர் எனக்குப் போதித்திருக்கிறபடியால், 102
நான் உம்முடைய நியாயங்களை விட்டு வில
கேன்.
உம்முடைய வார்த்தைகள் என் நாவுக்கு 103
எவ்வளவு இனிமையானவைகள்; [21]என்

வாய்க்கு அவைகள் தேனிலும் மதுரமாயி
ருக்கும்.
104 உமது கட்டளைகளால் உணர்வடைந்
தேன். [1]ஆதலால் எல்லாப் பொய்வழிகளை
யும் வெறுக்கிறேன்.

נ நூன்.

105 உம்முடைய வசனம் என் கால்களுக்குத்
தீபமும், [2]என் பாதைக்கு வெளிச்சமுமாயி
ருக்கிறது.
106 உம்முடைய நீதி நியாயங்களைக்காத்து
நடப்பேன் என்று ஆணையிட்டேன்; [3]அதை
நிறைவேற்றுவேன்.
107 நான் மிகவும் உபத்திரவப்படுகிறேன்;
கர்த்தாவே, உம்முடைய வசனத்தின்படி
யே என்னை உயிர்ப்பியும்.
108 கர்த்தாவே, [4]என் வாயின் உற்சாகபலி
களை நீர் அங்கீகரித்து, உமது நியாயங்களை
எனக்குப் போதித்தருளும்.
109 என் பிராணன் எப்பொழுதும் என் கை
யில் இருக்கிறது; [5]ஆனாலும் உம்முடைய
வேதத்தை மறவேன்.
110 துன்மார்க்கர் எனக்குக் கண்ணி வைக்
கிறார்கள்; ஆனாலும் நான் உம்முடைய கட்
டளைகளை விட்டு வழிதவறேன்.
111 உம்முடைய சாட்சிகளை நித்திய சுதந்தர
மாக்கிக் கொண்டிருக்கிறேன், [6]அவைகளே
என் இருதயத்தின் மகிழ்ச்சி.
112 முடிவுபரியந்தம் [7]இடைவிடாமல் உம்
முடைய பிரமாணங்களின்படி செய்ய என்
இருதயத்தைச் சாய்த்தேன்.

ס சாமெக்.

113 வீண் சிந்தனைகளை [8]நான் வெறுத்து,
உமது வேதத்தில் பிரியப்படுகிறேன்.
114 என் மறைவிடமும் என் [9]கேடகமும்
நீரே; உம்முடைய வசனத்துக்குக் காத்திருக்
கிறேன்.
115 பொல்லாதவர்களே, என்னைவிட்டு
அகன்று போங்கள்; [10]என் தேவனுடைய
கற்பனைகளை நான் கைக்கொள்ளுவேன்.
116 நான் பிழைத்திருப்பதற்கு உமது வார்த்
தையின்படி என்னை ஆதரித்தருளும்; என்
நம்பிக்கை [11]விருதாவாய்ப் போக என்னை
வெட்கத்திற்கு உட்படுத்தாதேயும்.
117 என்னை ஆதரித்தருளும்; அப்பொழுது
நான் ரட்சிக்கப்பட்டு, எக்காலமும் உம்மு
டைய பிரமாணங்களின்பேரில் நோக்கமா
யிருப்பேன்.
118 உமது பிரமாணங்களை விட்டு வழிவிலகு
கிற யாவரையும் [12]மிதித்துப் போடுகிறீர்;
அவர்களுடைய உபாயம் வெறும் [13]பொய்
யே.
119 பூமியிலுள்ள துன்மார்க்கர் யாவரையும்
களிம்பைப்போல அகற்றிவிடுகிறீர்; [14]ஆகை
யால் உமது சாட்சிகளில் பிரியப்படுகிறேன்
120 உமக்குப் பயப்படும் பயத்தால் என்
உடம்பு [15]சிலிர்க்கிறது; உமது நியாயத் தீர்ப்
புகளுக்குப் பயப்படுகிறேன்

1 நீதி. 8. 13
2 நீதி. 6. 23
3 நெகே. 10.29
4 எபி. 13. 15
5 யோபு 13. 14
6 எரே. 15. 16
7 வெளி. 2. 10
8 எரே. 4. 14
9 32. 7
10 மத். 7. 23. 1 கொ. 15.33
11 ரோ. 5. 5
12 மல். 4. 3
13 1 யோ. 2.21
14 எசே. 22. 18
15 ஆப. 3. 16
16 எபி. 7. 22
17 103. 10
18 116. 16
19 19. 10. நீதி. 8. 11
20 ஏசா. 25. 1
21 நீதி. 1. 4: 9. 4–6. 2 கொ. 4. 4, 6
22 2 தெச. 1. 6, 7
23 17. 5. ரோ. 6. 12, 14
24 எண். 6. 25, 26
25 எரே. 13. 7: 14. 17. எசே. 9. 4
26 தானி. 9. 7

ע ஆயின்.

நியாயமும் நீதியும் செய்கிறேன்; என்னை 121
ஒடுக்குகிறவர்களுக்கு என்னை ஒப்புக்கொ
டாதேயும்.
உமது அடியேனுக்கு நன்மையாகத் துணை 122
நில்லும்; [16]அகங்காரிகள் என்னை யொடுக்க
வொட்டாதேயும்.
உமது ரட்சிப்புக்கும் உமது நீதியின் வார்த் 123
தைக்கும் காத்திருக்கிறதினால் என் கண்கள்
பூத்துப்போகிறது.
உமது அடியேனை உமது [17]கிருபையின் 124
படியே நடத்தி, உமது பிரமாணங்களை எனக்
குப் போதியும்.
நான் உமது [18]அடியேன்; உம்முடைய 125
சாட்சிகளை நான் அறியும்படி என்னை உணர்
வுள்ளவனாக்கும்.
நீதியைச் செய்யக் கர்த்தருக்கு வேளை வந் 126
தது; அவர்கள் உம்முடைய நியாயப் பிர
மாணத்தை மீறினார்கள்.
ஆதலால் நான் பொன்னிலும் பசும்பொன் 127
னிலும் [19]அதிகமாய் உமது கற்பனைகளில்
பிரியப்படுகிறேன்.
எல்லா வற்றைப்பற்றியும் நீர் அருளின 128
எல்லாக் கட்டளைகளும் செம்மையென்று
எண்ணி, சகல பொய்வழிகளையும் வெறுக்கி
றேன்.

פ பே.

உம்முடைய சாட்சிகள் அதிசயமானவை 129
கள்; [20]ஆகையால் என் ஆத்துமா அவைகளைக்
கைக்கொள்ளும்.
உம்முடைய வசனத்தின் பிரசித்தம் வெ 130
ளிச்சம் தந்து, [21]பேதைகளை உணர்வுள்ள
வர்களாக்கும்.
உம்முடைய கற்பனைகளை நான் வாஞ்சிக் 131
கிறபடியால், என் வாயை ஆவென்று திறந்து
அவைகளுக்கு ஏங்குகிறேன்.
உம்முடைய நாமத்தை நேசிக்கிறவர்க 132
ளுக்கு வழங்கும் நியாயத்தின்படியே [22]என்
னை நோக்கிப் பார்த்து, எனக்கு இரங்கும்.
உம்முடைய வார்த்தையிலே என் காலடி 133
களை நிலைப்படுத்தி, [23]ஒரு அநியாயமும்
என்னை ஆளவொட்டாதேயும்.
மனுஷர் செய்யும் இடுக்கத்துக்கு என்னை 134
விலக்கி விடுவித்தருளும்; அப்பொழுது நான்
உம்முடைய கட்டளைகளைக் காத்துக்கொள்
வேன்.
உமது அடியேன்மேல் உமது முகத்தைப் 135
பிரகாசிக்கப்பண்ணி, [24]உமது பிரமாணங்
களை எனக்குப் போதியும்.
உம்முடைய வேதத்தை மனுஷர் காத்து 136
நடவாதபடியால், [25]என் கண்களிலிருந்து
நீர்த்தாரைகள் ஓடுகிறது.

צ த்சாடே.

கர்த்தாவே, நீர் நீதிபரர், [26]உமது நியாயத் 137
தீர்ப்புகள் செம்மையானவைகள்.
நீர் கட்டளையிட்ட சாட்சிகள் நீதியும், 138
மகா உண்மையுமானவைகள்.

139 என் சத்துருக்கள் உம்முடைய வசனங்
களை மறந்தபடியால், [1]என் பக்திவைராக்கி
யம் என்னைப் பட்சிக்கிறது.
140 உமது வார்த்தை மிகவும் புடமிடப்பட்
டது, [2]உமது அடியேன் அதில் பிரியப்படு
கிறேன்.
141 நான் சிறியவனும் அசட்டை பண்ணப்
பட்டவனுமா யிருக்கிறேன்; ஆனாலும் உமது
கட்டளைகளை மறவேன்.
142 உம்முடைய நீதி நித்திய நீதி, [3]உம்மு
டைய வேதம் சத்தியம்.
143 இக்கட்டும் நெருக்கமும் என்னைப் பிடித்
தது; ஆனாலும் உம்முடைய கற்பனைகள்
என் மனமகிழ்ச்சி.
144 உம்முடைய சாட்சிகளின் நீதி என்றைக்
கும நிற்கும்; என்னை உணர்வுள்ளவனாக்
கும், [4]அப்பொழுது நான் பிழைத்திருப்
பேன்.

ק கோப்.

145 முழு இருதயத்தோடும் கூப்பிட்டேன்,
கர்த்தாவே, என் ஜெபத்தைக் கேளும்; உம்
முடைய பிரமாணங்களைக் கைக்கொள்ளு
வேன்.
146 உம்மை நோக்கிக் கூப்பிட்டேன், என்னை
இரட்சியும்; அப்பொழுது நான் உம்முடைய
சாட்சிகளைக் காத்துக்கொள்ளுவேன்.
147 அதிகாலையில் [5]நான் எழுந்து சத்தமிட்
டேன்; உம்முடைய வசனத்துக்குக் காத்
திருக்கிறேன்.
148 உமது வசனத்தைத் தியானிக்கும்படி,
[6]குறித்த சாமங்களுக்கு முன்னே என் கண்கள்
விழித்துக்கொள்ளும்.
149 உம்முடைய கிருபையின்படி என் சத்தத்
தைக் கேளும்; கர்த்தாவே, உம்முடைய
நியாயத்தின்படி என்னை உயிர்ப்பியும்.
150 தீவினையைப் பின்பற்றுகிறவர்கள் சமீபிக்
கிறார்கள்; அவர்கள் உம்முடைய வேதத்
துக்குத் தூரமாயிருக்கிறார்கள்.
151 கர்த்தாவே, [7]நீர் சமீபமாயிருக்கிறீர்;
உமது கற்பனைகளெல்லாம் உண்மை.
152 நீர் உம்முடைய சாட்சிகளை [8]என்றென்
றைக்கும் நிற்க ஸ்தாபித்தீர் என்பதை, அவை
களால் நான் நெடுநாளாய் அறிந்திருக்கிறேன்.

ר ரேஷ்.

153 என் உபத்திரவத்தைப் [9]பார்த்து, என்னை
விடுவியும்; உமது வேதத்தை மறவேன்.
154 எனக்காக நீர் வழக்காடி [10]என்னை மீட்
டுக்கொள்ளும், உம்முடைய வார்த்தையின்
படியே என்னை உயிர்ப்பியும்.
155 இரட்சிப்பு துன்மார்க்கருக்குத் தூரமா
யிருக்கிறது, [11]அவர்கள் உமது பிரமாணங்
களைத் தேடார்கள்.
156 கர்த்தாவே, உம்முடைய இரக்கங்கள்
மிகுதியா யிருக்கிறது; உமது நியாயங்களின்
படி என்னை உயிர்ப்பியும்.
157 என்னைத் துன்பப்படுத்துகிறவர்களும்
என்னை விரோதிக்கிறவர்களும் அநேகர்;
ஆனாலும் உம்முடைய சாட்சிகளைவிட்டு
விலகேன்.
உமது வசனத்தைக் காத்துக்கொள்ளாத 158
துரோகிகளை நான் கண்டபோது, [12]எனக்கு
அருவருப்பாயிருந்தது.
இதோ, உம்முடைய கட்டளைகளை நேசிக் 159
கிறேன்; கர்த்தாவே, உமது கிருபையின்
படி என்னை உயிர்ப்பியும்.
உம்முடைய வசனம் சமூலமும் சத்தியம், 160
உம்முடைய நீதி நியாயமெல்லாம் நித்தியம்.

ש ஷீன்.

பிரபுக்கள் காரணமில்லாமல் [13]என்னைத் 161
துன்பப்படுத்தினார்கள், ஆனாலும் என் இரு
தயம் உமது வசனத்திற்கே பயப்படுகிறது.
மிகுந்த கொள்ளையுடைமையைக் கண்டு 162
பிடிக்கிறவன் மகிழ்கிறதுபோல, நான் உமது
வார்த்தையின்பேரில் மகிழுகிறேன்.
பொய்யைப் பகைத்து அருவருக்கிறேன்; 163
உம்முடைய வேதத்தையோ நேசிக்கிறேன்.
உமது நீதி நியாயங்களினிமித்தம், ஒரு 164
நாளில் ஏழுதரம் உம்மைத் துதிக்கிறேன்.
உம்முடைய வேதத்தை நேசிக்கிறவர்க 165
ளுக்கு மிகுந்த [14]சமாதானமுண்டு; அவர்க
ளுக்கு இடறலில்லை.
கர்த்தாவே, உம்முடைய ரட்சிப்புக்கு 166
நான் காத்திருந்து, [15]உம்முடைய கற்பனைக
ளின்படி செய்கிறேன்.
என் ஆத்துமா உமது சாட்சிகளைக் காக் 167
கும்; அவைகளை நான் மிகவும் நேசிக்கிறேன்.
உமது கட்டளைகளையும் உமது சாட்சி 168
களையும் காத்து நடக்கிறேன்; [16]என் வழிக
ளெல்லாம் உமக்கு முன்பாக இருக்கிறது.

ת தௌ.

கர்த்தாவே, என் கூப்பிடுதல் உமது சந் 169
நிதியில் வருவதாக; உமது வசனத்தின்படி
யே என்னை உணர்வுள்ளவனாக்கும்.
என் விண்ணப்பம் உமது சந்நிதியில் 170
வருவதாக; உமது வார்த்தையின்படி என்னை
விடுவித்தருளும்.
உம்முடைய பிரமாணங்களை நீர் எனக் 171
குப் போதிக்கும்போது, என் உதடுகள் உமது
துதியைப் பிரஸ்தாபப்படுத்தும்.
உமது கற்பனைகளெல்லாம் நீதியுள்ளவை 172
கள்; ஆதலால், என் நாவு உம்முடைய வச
னத்தை விவரித்துச் சொல்லும்.
நான் உம்முடைய கட்டளைகளைத் தெரிந்து 173
கொண்டபடியால், [17]உமது கரம் எனக்குத்
துணையாயிருப்பதாக.
கர்த்[illegible] உம்முடைய ரட்சிப்பின் 174
மேல் ஆ[illegible]யிருக்கிறேன்; உம்முடைய
வேதம் என் ம[illegible]
என் ஆத்துமா [illegible] உம்மைத் 175
துதிக்கக்கடவது; [illegible]த்தீர்ப்புகள்
எனக்கு உதவியாயி[illegible]
காணாமற்போன ஆட்[illegible]போல் [18]வழி 176
தப்பிப்போனேன்; உமது அடியேனைத் தேடி
வீராக; உமது கற்பனைகளை நான் மறவேன்.

[1] 69. 9. யோ. 2. 17
[2] சங். 30. 5
[3] யோ. 17. 17
[4] சங். 10. 21
[5] 130. 6
[6] 63. 1, 6
[7] 139. 2. ஓ
[8] லூ. 21. 33
[9] புல. 5. 1
[10] மீகா. 7. 9. 1 யோ. 3. 1
[11] லூ. 16. 24
[12] எசே. 9. 4
[13] 1 சாமு. 24. 11, 17: 26. 21, 23
[14] சங். 8. 2. ஏசா. 32. 17. யோ. 14. 27 பிலி. 4. 7
[15] ஆதி. 49. 18
[16] சங். 5. 21
[17] யோசு. 24. 22. சங். 1. 29. லூ. 10. 42
[18] ஏசா. 53. 6. லூ. 15. 4. ஓ. 1 பே. 2. 25

## 120

(ஆரோகண சங்கீதம்.)

என் நெருக்கத்திலே [1]கர்த்தரை நோக்கிக்
கூப்பிட்டேன்; அவர் எனக்குச் செவிகொடுத்
தார்.
2 கர்த்தாவே, பொய் உதடுகளுக்கும் கபட
நாவுக்கும் என் ஆத்துமாவைத் தப்புவியும்.
3 கபடநாவே, உனக்கு என்ன கிடைக்கும்?
உனக்கு என்ன செய்யப்படும்?
4 பலவானுடைய கூர்மையான அம்புக
ளும், சூரைச்செடிகளை எரிக்கும் தழலுமே
கிடைக்கும்.
5 ஐயோ! நான் மேசேக்கிலே சஞ்சரித்தது
போதும், [2]கேதாரின் கூடாரங்களண்டை
யிலே குடியிருந்ததும் போதும்!
6 சமாதானத்தைப் பகைக்கிறவர்களிடத்தில்
என் ஆத்துமா குடியிருந்ததும் போதும்!
7 நான் சமாதானத்தை நாடுகிறேன்; அவர்
களோ, நான் பேசும்போது யுத்தத்துக்கு எத்
தனப்படுகிறார்கள்.

## 121

(ஆரோகண சங்கீதம்.)

எனக்கு ஒத்தாசை வரும் பர்வதங்களுக்கு
நேராக [3]என் கண்களை ஏறெடுக்கிறேன்.
2 வானத்தையும் பூமியையும் உண்டாக்கின
கர்த்தரிடத்திலிருந்து [4]எனக்கு ஒத்தாசைவரும்.
3 உன் காலைத் தள்ளாடவொட்டார்; [5]உன்
னைக் காக்கிறவர் உறங்கார்.
4 இதோ, இஸ்ரவேலைக் காக்கிறவர் உறங்கு
கிறதுமில்லை தூங்குகிறதுமில்லை.
5 கர்த்தர் உன்னைக் காக்கிறவர்; கர்த்தர் உன்
வலதுபக்கத்திலே உனக்கு [6]நிழலா யிருக்
கிறார்.
6 பகலிலே வெயிலாகிலும், [7]இரவிலே நில
வாகிலும் உன்னைச் சேதப்படுத்துவதில்லை.
7 கர்த்தர் உன்னை எல்லாத் தீங்குக்கும் விலக்
கிக் காப்பார்; [8]அவர் உன் ஆத்துமாவைக்
காப்பார்.
8 கர்த்தர் உன் போக்கையும் உன் வரத்தையும்
[9]இதுமுதற்கொண்டு என்றைக்குங் காப்பார்.

## 122

(தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.)

கர்த்தருடைய ஆலயத்துக்குப் போவோம்
வாருங்கள் என்று எனக்கு அவர்கள் சொன்
னபோது [10]மகிழ்ச்சியாயிருந்தேன்.
2 எருசலேமே, உன் வாசல்களில் எங்கள்
கால்கள் நிற்கலாயிற்று.
3 எருசலேம் இசைவிணைப்பான [11]நகரமாய்க்
கட்டப்பட்டிருக்கிறது.
4 அங்கே இஸ்ரவேலுக்குச் சாட்சியாகக் கர்த்
தருடைய ஜனங்களாகிய கோத்திரங்கள் [12]கர்த்
தரின் நாமத்தை ஸ்தோத்திரிப்பதற்குப்போ
கும்.
5 அங்கே தாவீதின் வம்சத்தாருடைய சிங்கா
சனங்களாகிய [13]நியாயாசனங்கள் வைக்கப்
பட்டிருக்கிறது.
6 எருசலேமின் சமாதானத்துக்காக வேண்
டிக்கொள்ளுங்கள்; [14]உன்னை நேசிக்கிறவர்கள்
சுகித்திருப்பார்களாக.
உன் அலங்கத்திற்குள்ளே சமாதானமும், 7
உன் அரமனைகளுக்குள்ளே சுகமும் இருப்ப
தாக.
என் சகோதரர் நிமித்தமும் என் சிநேகிதர் 8
நிமித்தமும், உன்னில் சமாதானம் இருப்ப
தாக என்பேன்.
எங்கள் தேவனாகிய கர்த்தரின் ஆலயத்தி 9
னிமித்தம் [15]உனக்கு நன்மையுண்டாகத் தேடு
வேன்.

## 123

(ஆரோகண சங்கீதம்.)

பரலோகத்தில் வாசமாயிருக்கிறவரே, [16]உம்
மிடத்திற்கு என் கண்களை ஏறெடுக்கிறேன்.
இதோ, வேலைக்காரரின் கண்கள் தங்கள் 2
எஜமான்களின் கையை நோக்கியிருக்குமாப்
போலவும், வேலைக்காரியின் கண்கள் தன் எஜ
மாட்டியின் கையை நோக்கியிருக்குமாப்போ
லவும், எங்கள் தேவனாகிய கர்த்தர் எங்களுக்கு
இரக்கஞ்செய்யும் வரைக்கும், எங்கள் கண்
கள் அவரை நோக்கியிருக்கிறது.
எங்களுக்கு இரங்கும் கர்த்தாவே, எங்க 3
ளுக்கு இரங்கும்; நிந்தனையினால் மிகவும்
நிறைந்திருக்கிறோம்.
சுகஜீவிகளுடைய நிந்தனையினாலும், அகங் 4
காரிகளுடைய இகழ்ச்சியினாலும், எங்கள்
ஆத்துமா மிகவும் நிறைந்திருக்கிறது.

## 124

(தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.)

மனுஷர் நமக்கு விரோதமாய் எழும்பின 2
போது, [17]கர்த்தர் நமது பக்கத்திலிராவிட்
டால்,
கர்த்தர் தாமே நமது பக்கத்திலிராவிட்டால், 3
அவர்கள் கோபம் நமமேல் எரிகையில்,
[18]நம்மை உயிரோடே விழுங்கியிருப்பார்கள்.
அப்பொழுது தண்ணீர்கள் நம்மேல் 4
பாய்ந்து, வெள்ளங்கள் நமது ஆத்துமாவின்
மேல் பெருகி,
கொந்தளிக்கும் ஜலங்கள் நமது ஆத்துமா 5
வின்மேல் புரண்டுபோயிருக்கும் என்று இஸ்ர
வேல் இப்பொழுது சொல்வதாக.
நம்மை அவர்களுடைய பற்களுக்கு இரை 6
யாக ஒப்புக்கொடாதிருக்கிற கர்த்தருக்கு
ஸ்தோத்திரம்.
வேடருடைய கண்ணிக்குத் தப்பின குரு 7
வியைப்போல நம்முடைய ஆத்துமா தப்
பிற்று, [19]கண்ணி தெறித்தது, நாம் தப்பி
னோம்.
நம்முடைய சகாயம் [20]வானத்தையும் பூமி 8
யையும் உண்டாக்கின கர்த்தருடைய நாமத்
தில் உள்ளது.

## 125

(ஆரோகண சங்கீதம்.)

கர்த்தரை நம்புகிறவர்கள் என்றென்றைக்
கும் அசையாமல் நிலைத்திருக்கும் சீயோன்
பர்வதத்தைப்போல் இருப்பார்கள்.
பர்வதங்கள் எருசலேமைச் சுற்றிலும் இருக் 2
குமாப்போல், கர்த்தர் இதுமுதல் என்றென்
றைக்கும் தம்முடைய ஜனத்தைச் சுற்றிலும்
இருக்கிறார்.

---

1 யோனா. 2. 2
2 ஆதி. 10. 2: 25. 13
3 எரே. 3. 23
4 ஓசி. 13. 9
5 1 சாமு. 2. 9. நீதி. 3. 25, 26. ஏசா. 27. 3
6 ஏசா. 25 4
7 ஏசா. 49. 10. வெளி. 7. 16
8 2 இராஜா. 4. 18
9 உபா. 28. 6. நீதி. 2. 8
10 ஏசா. 2. 2, 3. எரே. 30. 5. சகரி. 8. 21
11 2 சாமு. 5. 9
12 யாத். 23. 17. உபா. 16. 16
13 உபா. 17. 8
14 51. 18
15 நெகே. 2. 10
16 121. 1
17 யாத். 15. 1. ழ
18 நீதி. 1. 12
19 நீதி. 6. 5
20 121. 2

3 நீதிமான்கள் அநியாயத்திற்குத் தங்கள் கை
களை நீட்டாதபடிக்கு, [1]ஆகாமியத்தின் செ
ங்கோல் நீதிமான்களுடைய சுதந்தரத்தின்
மேல் நிலைத்திராது.
4 கர்த்தாவே, நல்லவர்களுக்கும் இருதயத்தில்
செம்மையானவர்களுக்கும் நன்மை செய்யும்.
5 தங்கள் கோணலான வழிகளுக்குச் சாய்
கிறவர்களைக் கர்த்தர் அக்கிரமக்காரரோடே
போகப்பண்ணுவார். இஸ்ரவேலுக்கோ [2]சமா
தானம் உண்டு.

**126** (ஆரோகண சங்கீதம்.)

சீயோனின் சிறையிருப்பைக் கர்த்தர் திருப்
பும்போது, [3]சொப்பனம் காண்கிறவர்கள்
போல் இருந்தோம்.
2 அப்பொழுது நம்முடைய வாய் நகைப்
பினாலும், [4]நம்முடைய நாவு ஆனந்த சத்தத்தி
னாலும் நிறைந்திருந்தது; அப்பொழுது: கர்த்
தர் இவர்களுக்குப் பெரிய காரியங்களைச் செய்
தார் என்று புறஜாதிகளுக்குள்ளே சொல்லிக்
கொண்டார்கள்.
3 கர்த்தர் நமக்குப் பெரிய காரியங்களைச்
செய்தார்; இதினிமித்தம் நாம் மகிழ்ந்திருக்
கிறோம்.
4 கர்த்தாவே, தெற்கத்தி வெள்ளங்களைத்
திருப்புவதுபோல, எங்கள் சிறையிருப்பைத்
திருப்பும்.
5 கண்ணீரோடே விதைக்கிறவர்கள் [5]கெம்
பீரத்தோடே அறுப்பார்கள்.
6 அள்ளித்தூவும் விதையைச் சுமக்கிறவன்
அழுது கொண்டுபோகிறான்; [6]ஆனாலும் தான்
அறுத்த அரிகளைச் சுமந்துகொண்டு கெம்பீரத்
தோடே திரும்பி வருவான்.

**127** (சாலொமோன் பாடின ஆரோகண சங்கீதம்.)

கர்த்தர் வீட்டைக் கட்டாராகில், [7]அதைக்
கட்டுகிறவர்களின் பிரயாசம் விருதா;
2 கர்த்தர் நகரத்தைக் காவாராகில் காவலாளர்
விழித்திருக்கிறது விருதா.
3 நீங்கள் அதிகாலையில் எழுந்து, நேரப்பட
வேலையிலே தரித்து, வருத்தத்தின் [8]அப்பத்
தைச் சாப்பிடுகிறதும் விருதா; அவரே தமக்
குப் பிரியமானவனுக்கு நித்திரை அளிக்கிறார்
4 இதோ, பிள்ளைகள் கர்த்தரால் வரும் சுதந்
தரம், [9]கர்ப்பத்தின் கனி அவரால் கிடைக்கும்
பலன்.
5 வாலவயதின் குமாரர் பலவான் கையி
லுள்ள அம்புகளுக்கு ஒப்பாயிருக்கிறார்கள்.
6 அவைகளால் தன் அம்பறாத்தூணியை நிரப்
பின புருஷன் பாக்கியவான்; அவர்கள் நாண
மடையாமல் [10]ஒலிமுகவாசலில் சத்துருக்க
ளோடே பேசுவார்கள்.

**128** (ஆரோகண சங்கீதம்.)

கர்த்தருக்குப் பயந்து, அவர் வழிகளில்
நடக்கிறவன் எவனோ, [11]அவன் பாக்கியவான்
2 உன் கைகளின் பிரயாசத்தை நீ சாப்பிடு
வாய்; [12]உனக்குப் பாக்கியமும் நன்மையும்
உண்டாயிருக்கும்.

உன் மனைவி உன் வீட்டோரங்களில் கனிதரு 3
ரும் [13]திராட்சக்கொடியைப்போல் இருப்பாள்;
உன் பிள்ளைகள் உன் பந்தியைச் சுற்றிலும்
[14]ஒலிவமரக் கன்றுகளைப்போல் இருப்பார்கள்.
இதோ, கர்த்தருக்குப் பயப்படுகிற மனு 4
ஷன் இவ்விதமாய் ஆசீர்வதிக்கப்படுவான்.
கர்த்தர் சீயோனிலிருந்து உன்னை ஆசீர்வ 5
திப்பார்; [15]நீ ஜீவனுள்ள நாளெல்லாம் எருச
லேமின் வாழ்வைக் காண்பாய்.
நீ உன் பிள்ளைகளின் [16]பிள்ளைகளையும், 6
இஸ்ரவேலுக்கு உண்டாகும் [17]சமாதானத்தை
யும் காண்பாய்.

(ஆரோகண சங்கீதம்.) **129**

என் சிறு வயது தொடங்கி [18]அநேகந்தரம்
என்னை நெருக்கினார்கள்;
என் சிறுவயது தொடங்கி அநேகந்தரம் 2
என்னை நெருக்கியும், [19]என்னை மேற்கொள்
ளாமற் போனார்கள்.
உழுகிறவர்கள் என் முதுகின்மேல் உழுது, 3
[20]தங்கள் படைச்சால்களை நீளமாக்கினார்கள்.
கர்த்தரோ நீதியுள்ளவர்; துன்மார்க்கரு 4
டைய கயிறுகளை அவர் அறுத்தார் என்று,
இஸ்ரவேல் இப்பொழுது சொல்வதாக.
சீயோனைப் பகைக்கிற அனைவரும் வெட் 5
கிப் [21]பின்னிட்டுத் திரும்பக்கடவர்கள்.
வீட்டின்மேல் முளைக்கும் புல்லுக்கு அவர் 6
கள் ஒப்பாவார்களாக; [22]அது வளருமுன்
உலர்ந்துபோம்.
அறுக்கிறவன் அதினால் தன் கையையும், 7
அரிகளைக் கட்டுகிறவன் தன் மடியையும் நிரப்
புவதில்லை.
கர்த்தருடைய ஆசீர்வாதம் உங்களுக்கு உண் 8
டாவதாக; [23]கர்த்தரின் நாமத்தினால் உங்களை
ஆசீர்வதிக்கிறோம் என்று வழிப்போக்கர்
சொல்வதுமில்லை.

(ஆரோகண சங்கீதம்.) **130**

கர்த்தாவே, ஆழங்களிலிருந்து [24]உம்மை
நோக்கிக் கூப்பிடுகிறேன்.
ஆண்டவரே, என் சத்தத்தைக் கேளும்; 2
என் விண்ணப்பங்களின் சத்தத்திற்கு [25]உம
து செவிகள் கவனித்திருப்பதாக.
கர்த்தாவே, நீர் அக்கிரமங்களைக் கவனித் 3
திருப்பீரானால், [26]யார் நிலைநிற்பான், ஆண்ட
வரே.
உமக்குப் [27]பயப்படும்படிக்கு உம்மிடத்தில் 4
[28]மன்னிப்பு உண்டு.
கர்த்தருக்குக் காத்திருக்கிறேன்; என் ஆத் 5
துமா காத்திருக்கிறது; அவருடைய வார்த்
தையை நம்பியிருக்கிறேன்.
எப்பொழுது விடியும் என்று விடியற்காலத் 6
திற்குக் காத்திருக்கிற சாமக்காரரைப்பார்க்கி
லும் அதிகமாய் என் ஆத்துமா ஆண்டவருக்
குக் [29]காத்திருக்கிறது.
இஸ்ரவேல் கர்த்தரை நம்பியிருப்பதாக; 7
[30]கர்த்தரிடத்தில் கிருபையும், அவரிடத்தில்
திரளான மீட்பும் உண்டு.

1 நீதி 22. 8. ஏசா. 14.5,6
2 கலா. 6. 16
3 53. 6: 85. 1. ஓசி. 6. 11
4 யோபு 8. 21
5 எரே. 31. 9-14
6 30. 5
7 1 கொ. 3. 6,7
8 ஆதி. 3. 17, 19
9 ஆதி. 33. 5. 1 சாமு. 2. 5
10 யோபு 5. 4
11 112. 1
12 ஏசா. 3. 10
13 எசே. 19. 10
14 144. 12
15 134. 3
16 ஆதி. 50. 23. யோபு 42. 16
17 125. 5
18 யாத். 1. 13, 14. புல. 1. 3
19 யோ. 16. 33
20 ஏசா. 50. 6
21 1 கொ 16. 22
22 மத். 13. 6, 21
23 ரூத். 2. 4
24 புல. 3. 55. யோனா. 2. 2
25 2 நாளா. 6. 40
26 143. 2. ரோ. 3. 20–24
27 எரே. 33. 8, 9. 2 தீமோ. 2. 19
28 யாத் 34. 7. தானி. 9. 9. ரோ. 2. 4; 8 1. 1 யோ. 2. 1, 2
29 ஏசா. 8. 17: 26. 8
30 71. 5. ரோ. 8. 24. எபி. 10. 35

8 அவர் இஸ்ரவேலை [1]அதின் சகல அக்கிர
மங்களினின்றும் மீட்டுக்கொள்வார்.

## 131 (தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.)

கர்த்தாவே, என் இருதயம் இறுமாப்புள்ள
தல்ல, [2]என் கண்கள் மேட்டிமையுள்ளவை
களுமல்ல; பெரிய காரியங்களிலும், எனக்கு
மிஞ்சின கருமங்களிலும் நான் தலையிடுகிறது
மில்லை.
2 தாயின் பால்மறந்த குழந்தையைப் போல
நான் என் ஆத்துமாவை அடக்கி அமரப்பண்
ணினேன்; [3]என் ஆத்துமா பால்மறந்த குழந்
தையைப்போல் இருக்கிறது.
3 இது முதல் என்றென்றைக்கும் இஸ்ர
வேல் கர்த்தரை நம்பியிருப்பதாக.

## 132 (ஆரோகண சங்கீதம்.)

கர்த்தாவே, தாவீதையும் அவனுடைய
சகல உபத்திரவத்தையும் நினைத்தருளும்.
2 அவன்: நான் கர்த்தருக்கு ஒரு இடத்தை
யும், [4]யாக்கோபில் வல்லவருக்கு ஒரு வாசஸ்
தலத்தையும் காணுமட்டும்,
3 என் வீடாகிய கூடாரத்தில் பிரவேசிப்பது
மில்லை, என் படுக்கையாகிய கட்டிலின்மேல்
ஏறுவதுமில்லை;
4 என் கண்களுக்கு நித்திரையையும், என்
இமைகளுக்கு உறக்கத்தையும் வரவிடுவது
மில்லை என்று,
5 *கர்த்தருக்கு ஆணையிட்டு, [5]யாக்கோபின் வல்
லவருக்குப் பொருத்தனை பண்ணினான்.
6 இதோ, நாம் எப்பிராத்தாவிலே அதின்
செய்தியைக் கேட்டு, [6]வனத்தின் வெளிகளில்
அதைக் கண்டோம்.
7 அவருடைய [7]வாசஸ்தலங்களுக்குள் பிர
வேசித்து, [8]அவர் பாதபடியில் பணிவோம்.
8 கர்த்தாவே, உமது வல்லமை விளங்கும்
பெட்டியுடன் [9]நீர் உமது தாபர ஸ்தலத்திற்
குள் எழுந்தருளும்.
9 உம்முடைய ஆசாரியர்கள் நீதியைத் தரித்
து, [10]உம்முடைய பரிசுத்தவான்கள் கெம்பீ
ரிப்பார்களாக.
10 நீர் அபிஷேகம் பண்ணுவித்தவனின் முகத்
தை உமது தாசனாகிய தாவீதினிமித்தம் புறக்
கணியாதிரும்.
11 உன் கர்ப்பத்தின் கனியை உன் சிங்காச
னத்தின்மேல் வைப்பேன் என்றும்,
12 உன் குமாரர் என் உடன்படிக்கையையும்,
நான் போதிக்கும் என் சாட்சிகளையும் காத்து
நடந்தால், அவர்கள் குமாரரும் என்றென்றைக்
கும் உன் சிங்காசனத்தில் வீற்றிருப்பார்கள்
என்றும், கர்த்தர் தாவீதுக்கு உண்மையாய்
[11]ஆணையிட்டார்; அவர் தவறமாட்டார்.
13 கர்த்தர் சீயோனைத் தெரிந்துகொண்டு, அது
தமக்கு வாசஸ்தலமாகும்படி விரும்பினார்.
14 இது என்றென்றைக்கும் நான் தங்கும்
இடம்; [12]இதை நான் விரும்பினபடியால்,
இங்கே வாசம்பண்ணுவேன்.
15 அதின் ஆகாரத்தை நான் ஆசீர்வதித்து வரு
வேன்; [13]அதின் ஏழைகளை நான் அப்பத்தி
னால் திருப்தியாக்குவேன்.
அதின் ஆசாரியர்களுக்கு ரட்சிப்பை 16
[14]உடுத்துவேன்; அதிலுள்ள பரிசுத்தவான்கள்
மிகவும் கெம்பீரிப்பார்கள்.
அங்கே தாவீதுக்காக ஒரு கொம்பை முளைக் 17
கப்பண்ணுவேன்; [15]நான் அபிஷேகம் பண்
ணுவித்தவனுக்காக ஒரு விளக்கை ஆயத்தம்
பண்ணினேன்.
அவன் சத்துருக்களுக்கு வெட்கத்தை உடுத் 18
துவேன்; அவன் மீதிலோ அவன் கிரீடம்
பூக்கும் என்றார்.

## (தாவீது பாடின ஆரோகண சங்கீதம்.) 133

இதோ. சகோதரர் ஒருமித்து வாசம்பண்
ணுகிறது [16]எத்தனை நன்மையும் எத்தனை இன்
பமுமானது?
அது ஆரோனுடைய சிரசின்மேல் ஊற்றப் 2
பட்டு, [17]அவனுடைய தாடியிலே வடிகிறதும்,
அவனுடைய அங்கிகளின்மேல் இறங்குகிறது
மான நல்ல தைலத்துக்கும்,
எர்மோன்மேலும், [18]சீயோன் பர்வதங்கள் 3
மேலும் இறங்கும் பனிக்கும் ஒப்பாயிருக்
கிறது; அங்கே கர்த்தர் என்றென்றைக்கும்
[19]ஆசீர்வாதத்தையும் ஜீவனையும் கட்டளையிடு
கிறார்.

## (ஆரோகண சங்கீதம்.) 134

இதோ, இராக்காலங்களில் கர்த்தருடைய
ஆலயத்தில் நிற்கும் கர்த்தரின் ஊழியக்கார
ரே, [20]நீங்களெல்லாரும் கர்த்தரை ஸ்தோத்தி
ரியுங்கள்.
உங்கள் கைகளைப் பரிசுத்த ஸ்தலத்திற்கு 2
நேராக எடுத்து, [21]கர்த்தரை ஸ்தோத்திரியுங்
கள்.
வானத்தையும் பூமியையும் உண்டாக்கின 3
கர்த்தர் சீயோனிலிருந்து உன்னை ஆசீர்வதிப்
பாராக.

## 135

அல்லேலூயா, கர்த்தருடைய நாமத்தைத் 
துதியுங்கள், [22]கர்த்தரின் ஊழியக்காரரே,
துதியுங்கள்.
கர்த்தருடைய வீட்டிலும், [23]நமது தேவனு 2
டைய ஆலயப் பிராகாரங்களிலும் நிற்கிறவா
களே, கர்த்தரைத் துதியுங்கள்.
கர்த்தர் நல்லவர்; அவருடைய நாமத்தைக் 3
கீர்த்தனம் பண்ணுங்கள்; [24]அது இன்பமா
னது.
கர்த்தர் யாக்கோபைத் தமக்காகவும், [25]இஸ் 4
ரவேலைத் தமக்குச் சொந்தமாகவும் தெரிந்து
கொண்டார்.
கர்த்தர் பெரியவர் என்றும், நம்முடைய 5
ஆண்டவர் எல்லா தேவர்களுக்கும் மேலான
வர் என்றும் நான் அறிவேன்.
வானத்திலும் பூமியிலும், சமுத்திரங்களி 6
லும், எல்லா ஆழங்களிலும், [26]கர்த்தர் தமக்
குச் சித்தமானதையெல்லாம் செய்கிறார்.
அவர் பூமியின் கடையாந்தரங்களிலிருந்து 7
மேகங்களை எழும்பப்பண்ணி, [27]மழையுடன்

1 மத். 1. 21
2 ரோ. 12. 16
3 மத். 18. 3. 1 கொ. 14. 20
4 அப். 7 46
* கர்த்தர்பேரில்.
5 65. 1. 2 சாமு. 7. 1. ம
6 1 சாமு. 17.12
7 112. 1
8 89. 5
9 78. 61
10 ஏசா. 61. 10. 65. 14
11 1 இரா. 8. 25. அப். 2. 30
12 68. 17
13 லூ. 1. 53
14 2 நாளா. 6. 41. ஓசி. 11. 12
15 2 நாளா. 21. 7
16 ஆதி. 13. 8. எபி. 13. 1. 1 கொ. 1. 10
17 யாத். 30. 25, 30
18 உபா. 4. 48
19 உபா. 28. 8
20 1 நாளா. 9. 33
21 1 தீமோ. 2. 8
22 145. 1. வெளி. 9. 5
23 92. 13
24 147. 1
25 யாத். 19. 5. உபா. 7. 6, 7. 1 பே. 2. 9
26 தானி. 4. 35
27 எரே. 10. 13: 14. 22. சகரி. 10. 1

நான் அளிக்கும் பலன் என்னோடேகூட வரு
13 கிறது. நான் அல்பாவும் ஓமெகாவும், [1]ஆதி
யும் அந்தமும், முந்தினவரும் பிந்தினவருமா
14 யிருக்கிறேன். ஜீவவிருட்சத்தின்மேல் அதி
காரமுள்ளவர்க ளாவதற்கும், [2]வாசல்கள் வழி
யாய் நகரத்திற்குள் பிரவேசிப்பதற்கும் அவரு
டைய கற்பனைகளின்படி செய்கிறவர்கள் பாக்
15 கியவான்கள். நாய்களும், [3]சூனியக்காரரும்,
விபசாரக்காரரும், கொலைபாதகரும், விக்கிர
காராதனைக்காரரும், பொய்யை விரும்பி அ
தின்படி செய்கிற யாவரும் புறம்பே இருப்
பார்கள்.
16 சபைகளில் இவைகளை உங்களுக்குச் சாட்
சியாக அறிவிக்கும்படிக்கு [4]இயேசுவாகிய
நான் என் தூதனை அனுப்பினேன். [5]நான்
தாவீதின் வேரும் சந்ததியும், [6]பிரகாசமுள்ள
விடிவெள்ளி நட்சத்திரமுமா யிருக்கிறேன்
என்றார்.
17 ஆவியும் [7]மணவாட்டியும் வா என்கிறார்கள்,
கேட்கிறவனும் வா என்பானாக; [8]தாகமாயிருக்
கிறவன் வரக்கடவன்; விருப்பமுள்ளவன்

[1] 1. 8, 11: 21. 6. ஏசா. 44. 6
[2] லூ. 12. 37, 38. 1 யோ. 3. 24
[3] 21. 8, 27. பிலி. 3. 2
[4] 1. 1
[5] 5. 5
[6] 2 பே. 1. 19
[7] 21. 2, 9. ஏசா. 2. 5
[8] 21. 6. யோ. 7. 37
[9] நீதி. 30. 6
[10] ஜீவவிருட்சத்தில். 3. 5: 13. 8
[11] 1, 12. வச
[12] யோ. 21. 25
[13] ஏசா. 25. 9. 2 தீமோ. 4. 8. எபி. 9. 28
[14] ரோ. 16. 20, 24. 2 தெச. 3. 18

ஜீவத்தண்ணீரை இலவசமாய் வாங்கிக்கொள்
ளக்கடவன்.
இந்தப் புஸ்தகத்திலுள்ள தீர்க்கதரிசன வச 18
னங்களைக் கேட்கிற யாவருக்கும் நான் சாட்
சியாக எச்சரிக்கிறதாவது: [9]ஒருவன் இவைக
ளோடே எதையாகிலும் கூட்டினால், இந்தப்
புஸ்தகத்தில் எழுதியிருக்கிற வாதைகளை தே
வன் அவன்மேல் கூட்டுவார். ஒருவன் இந் 19
தத் தீர்க்கதரிசன புஸ்தகத்தின் வசனங்களி
லிருந்து எதையாகிலும் எடுத்துப்போட்டால்,
[10]ஜீவபுஸ்தகத்திலிருந்தும், பரிசுத்த நகரத்தி
லிருந்தும், இந்தப் புஸ்தகத்தில் எழுதப்பட்ட
வைகளிலிருந்தும், அவனுடைய பங்கை தே
வன் எடுத்துப்போடுவார்.
இவைகளைச் சாட்சியாக அறிவிக்கிறவர்: 20
[11]மெய்யாகவே நான் சீக்கிரமாய் வருகிறேன்
என்கிறார். [12]ஆமென், கர்த்தராகிய இயேசு
வே, [13]வாரும்.
நம்முடைய கர்த்தராகிய இயேசுகிறிஸ்து 21
வின் கிருபை [14]உங்கள் அனைவரோடுங்கூட
இருப்பதாக. ஆமென்.

புதிய ஏற்பாடு முற்றிற்று.

PRINTED IN GREAT BRITAIN BY LOWE AND BRYDONE (PRINTERS) LIMITED, LONDON, N.W.10